# தெய்வீகத் திருத்தலங்கள்



டாக்டர்.கு.முத்துராசன்

# தெய்வீகத் திருத்தலங்கள்

டாக்டர் கு. முத்துராசன்
எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
தமிழ்ப் பேராசிரியர்

This book is Published at the Financial assistance of Tirumala Tirupathy Devasthanams under the Scheme " Aid to Publish Religious Books "

வசந்த செல்வி பதிப்பகம்
74, வெளிப்பேட்டைத் தெரு
தர்மபுரி-636 702.



## எல்லாப் புகழும் இறைவனுக்கே !

# முன்னுரை

விரிந்து பரந்த இவ்வுலகில் எத்தனையோ உயிரினங்கள் விளங்குகின்றன. அத்தனை உயிரினங்களிலும் உயர்ந்த இனமாக விளங்குவது மனித இனமே. அதனால்தான் அரிது அரிது மானிடராய்ப் பிறததல் அரிது என மக்களினத்தை ஆன்றோர் போற்றினர். மனிதன் இத்தகைய உயர்ந்த பிறவியைப் பெற்றிருப்பது வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து இறையருளைப் பெறுவதற்கே ஆகும் என்பர் ஆன்றோர்.

பக்தியுடையார் காரியத்தில் பதறார். வித்து முளைக்கும் தன்மை போல மெல்ல வினை செய்து பயன் அடைவார் எனப் பக்தியினால் விளையும் பயன் பற்றிப் பாரதியார் குறிப்பிடுவர். இத்தகைய பக்தியே இறையருளைப் பெறுவதற்குரிய வழிகளில் மிகச்சிறந்த தாகும் பக்தியின் பிறப்பிடமாக-நிலைக்களன்களாக-திருச்சின்னங்களாக விளங்குவன திருக்கோயில்கள் ஆகும். அதனால்தான்

" கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் "

என்ற பழமொழி தோன்றிற்று. திருநாவுக்கரசர் கோயில்

இல்லாத ஊரைக் காடு என்று சாடுவார். பக்தியைக் கோவில்கள் வளர்ப்பதோடு பல்வேறு இனமக்களும் வேற்றுமைகளைக் களைந்து ஒற்றுமையுடன் வாழ வழிவகை செய்கின்றன,

" ஊர் ஒற்றுமை கோயிலாலே "

என்பது ஆன்றோர் வாக்கு அல்லவா !

இவ்வகையில் கோவில்கள்சிறந்துவிளங்குவதால்தான்

ஆலயம் தொழுவது
சாலவும் நன்று "

என அவற்றைச் சிறப்பித்துள்ளனர். மேலும் கோவில்கள் கலையின் பாண்பாட்டுச் சின்னங்களாகத் திகழ்கின்றன.

கால்களால் பயன்என்
கறைக்கண்டன் உறைகோயில்
கோலக் கோபுரக் கோகரணம் சூழாக்
கால்களால் பயன்என்

எனத் திருநாவுக்கரசர் திருக்கோவில்களுக்குச் செல்ல வேண்டியதன் இன்றியமையாமையினை எடுத்துரைப்பர்.

ஞானத்திலே பரமோனத்திலே சிறந்த நாடு பாரத நாடு, இன்றைய நாளில் ஆன்மீகத்தை அகிலத்திற்கு வழங்கி வரும் நாடு நம் பாரதநாடே! பாரதநாட்டிலும் வடஇந்தியாவைக் காட்டிலும் தென்னிந்தியாவில் திருக்கோயில்கள் அதிகம் விளங்குகின்றன. நாயன்மார்களாலும் ஆழ்வார்களாலும் மெய்யன்பர்களாலும் பாடல் பெற்ற 159 திருத்தலங்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

இளம்பருவத்திலிருந்தே திருக்கோவில்களுக்குச் செல்வதும் இறைவனை வணங்குவதும் திருக்கோவில்களையும் அவற்றிலுள்ள கலையம்சங்களைப் பற்றியும் அறிந்துகொள்வதும் என்னோடு ஒன்றிய இயல்பாகிவிட்டது.

கிட்டத்தட்ட இருபது ஆண்டுகாலமாக நான் நேரில் கண்டு களித்த கேட்டு மகிழ்ந்த படித்துச் சுவைத்த செய்திகள், சிந்தைகாணா விந்தைகள் இந்நூலில் சொல்லப் பெற்றுள்ளன,

தலத்தின் அமைவிடம், தலத்திற்குச் செல்லும் வழி, தலம் பற்றீய வரலாறு, தலத்தின் மகிமைகள், தலத்திலுள்ள தீர்த்தங்கள், கோவில் மரங்கள், தலத்தின் தனிச் சிறப்புகள், தலத்தில் அவதரித்த அருளாளர்கள், முக்தியடைந்த ஆன்றோர்கள், தலத்தில் நடைபெறும் விழாக்கள், தலம் பற்றிய தேவார திருவாசக, திருப்புகழ்ப் பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

" யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் " என்ற அடிப்படையில் இந்நூல் எழுதப்பெற்றுள்ளது. திருக்கோவில்கள் பற்றி அறிந்து மகிழ விரும்புவோருக்கும் நேரில் கண்டு களிக்க விரும்புவோருக்கும் இந்நூல் பெரிதும் பயன் படும் என்று நம்புகின்றேன்.

இந்நூலாக்கத்திற்குப் பொருள் உதவி வழங்கிய திருப்பதி திருவேங்கடவன் தேவஸ்தானத்திற்கும் எனக்குச் சிறந்த வழியினைக் காட்டி என்னை நன்னெறியில் உய்வித்து வரும் டாக்டர் பொன். சவுரிராசன் அவர்கட்கும் இந்நூலுக்குப் பலவகையிலும் உதவிய அன்பர்கட்கும் குறிப்பாக டாக்டர் அ. அருணாசலம் அவர்கட்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருவண்ணாமலை

அன்பன்
கு. முத்துராசன்



# A Brief Synopsis of The Book
# " Deiveekath Thiruth thaLangal "
# (Tamil)

Human raise is consider to be the most significance of all lives in the world. That is why scholars say that it is a very to be bone as human being Bakthi, the divine love, helps man to commune with good and attain divinity.

The temples are really the symbols of divine love. In Ulaka Neethi (The Ethics of the world) the poet says that " it is better not to live in a village where there is no temple" and in Konraiveenthan it is stated, "It is always good to worship God in the temple"

This Book Deiveekath Thiruththalangal (Divine Temples) deals with 159 Holy Divine Temples in south India which are sung by both Alwars and Nayanmars, the lyricists of vishnavite and Saivite religious of Hinduism.

I have already done research in Pillai-T-Tamil Literature and my thesis specifically deals with the works of a Saivite lyricist Ceraman Perumal Nayanar. Now I have revealed my experiences of these sacred temples about which I have read from many books and heard from many persons In short it is a brief history of 159 Temples.

The book tells the readers the Geographical location of each temple, the exact route, its religious significance its deities, Holy rivers, secred trees, the saints of the spot, the saints who attain God's love, the various celebrations of festivals in the temple,the works deal with the Holys spot and finally the Holy songs whlch add to be particularly sung from the songs of Naalaaeraththiviya brapandas, thevaaram and Thiruvasakam.

I sincerely hope that this book will be useful generally the reading Public and Particularly to the tourists for whom, this will be a guide book to know much about the holy divine temples of south India.



# உள்ளடக்கம்

# 1. அச்சிறுபாக்கம்

இத்தலம் தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவதலங்களில் ஒன்று; செங்கல்பட்டு மாவட்டத்தில் செங்கல்பட்டு-சென்னை புகைவண்டிப் பாதையில்சென்னையிலிருந்து 90 கி. மீ. தொலைவில் உள்ளது.

## தலவரலாறு :

பாண்டிய மன்னன் ஒருவன் கங்கையாற்றிலுள்ள மணலை வண்டியில் ஏற்றிக்கொண்டு வந்தான். இவ்வூருக்கு வண்டி வந்தபொழுது வண்டி மேற்கொண்டு செல்லவில்லை! வண்டியைச் செலுத்த முயன்றதில் வண்டி நகரவில்லை. ஆனால் அச்சு முறிந்துவிட்டது. அதற்குக் காரணம் இறைவன் திருவருளே என்பதை மன்னன் வானிழல் கூறிய மொழியால் உணர்ந்தான்; திருக்கோவில் திருப்பணிகளைச் செய்தான்.

இவ்வுண்மையினை 'அச்சுக் கொண்டருளிய தேவர்'' என இங்குள்ள கல்வெட்டுத்தொடரால் அறியலாம். இந்நாளில், அச்சுமுறிந்த இடம் வண்டிக்குப்பம் என வழங்கப்படுகின்றது.

சிவபெருமான் முப்புரங்களை எரிப்பதற்காகத் தேவர்கள் சமைத்த தேரில் ஏறினான். அப்போது தேவர்கள் விநாயகப் பெருமானை நினைந்து வணங்கவில்லை ! அதனால்

தேரின் அச்சு முறிந்தது ! பின்னர் விநாயகப் பெருமான் அருளால் அச்சு நன்னிலை அடைந்தது. அதனால் இத்தலம் அச்சிறுபாக்கம் எனப்பெயர் பெற்றது என்பது புராண வரலாறு.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் இரண்டு கருவறைகள் அமைந்திருக்கின்றன. கோபுரவாயிலுக்கு நேராகப் பாண்டிய மன்னன் நிறுவிய உமையாட்சிநாதர் என்ற சிவலிங்கமும் மெல்லியலாள் என்னும் அம்மையும் வீற்றிருக்கின்றனர் !

கொடிமரத்துக்கு நேராக உள்ள கருவறையில் மூலவர் ஆட்சி நாதரும் இளங்கிளியம்மையாரும் வீற்றிருக்கின்றனர் !

கோவில்மரம் கொன்றை. கோவிலுக்குள் சிங்க தீர்த்தமும் கோவிலுக்கு வெளியே தேவ தீர்த்தமும் உள்ளன. வடக்கே சற்றுத் தொலைவில் சங்குதீர்த்தமும் என்ற நன்னீர்த் தாமரைக் குளம் உள்ளது.

கண்ணுவ முனிவரும் கௌதம முனிவரும் வழிபட்ட மகிமையுடையது இத்தலம்.

## திருஞான சம்பந்தர் தேவாரம் :

திருஞான சம்பந்தர் உள்ளம் உருகியபடியே தேவாரம் பெற்ற பெருமையுடையது இத்தலம்.

''ஏறு மொன்றேறி நீறுமெய்பூசி
இளங்கிளை யரிவையொ டொருங்குடனாகிக்
கூறுமொன் றருளிக் கொன்றை யந்தாருங்
குளிரிள மதியமுங் கூவிள மலரும்

நாறு மல்லிகையும் எருக்கொடு முருக்கும்
மகிழிள வன்னியும் இவைநலம் பகர
ஆறு மோர்சடைமே லணிந்த வெம்படிகள்
அச்சி றுபாக்கம் ஆட்சி கொண்டாரே''
என்ற பாமாலை ஓதி மகிழத் தக்கது.

திருஞான சம்பந்தர் காலத்திலேயே கோவிலில் தமிழ் மொழியிலும் வடமொழியிலும் அர்ச்சனை நடந்தது என்பதை,

''தம்மலர் அடி ஒன்று அடியவர் பரவத்
தமிழ்சொலும் வடசொலும் தாள்நிழல் சேர''
எனவரும் தேவார அடியால் அறியலாம்.



# 2. அரகண்ட நல்லூர்

இத்தலம் நடுநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவ தலங்களில் ஒன்று. தென்னார்க்காடுமாவட்டம், திருக்கோவிலூர் வட்டத்தில் திருக்கோவிலூர் புகைவண்டி நிலையத்தின் அருகில் பெண்ணையாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. அறைகண்ட நல்லூர் என்பதே அரகண்டநல்லூர் என வழங்குகின்றது.

## தல வரலாறு :

இத்தலம் தேவாரத்தில் அறையணி நல்லூர் என்றே குறிக்கப் பெற்றுள்ளது. இத்தலம் ஒரு பெரிய பாறையின் அருகே அமைந்திருப்பதால் அப்பெயர் பெற்றுள்ளது.

## தலத்தின் மகிமைகள் :

திருக்கோவில் குன்றின் மேல் கட்டப்பட்டுள்ளது. இறைவன் திருநாமம் அறையணி நாதர். இறைவியின் திருநாமம் அருள்நாயகி. மேற்குப் பார்த்த சந்நிதி.

பாண்டவ தீர்த்தம். ஆரணிய தீர்த்தம், பெண்ணையாறு ஆகியன இத்தலத்தின் தீர்த்தங்கள்.

பிரசண்ட முனிவர் வழிபட்ட சிறப்புடையது இத்தலம். இத்தலத்தில் ஐவர்குகையும் திரோபதையின் சிற்றுறையும் உள்ளன.

திருக்கோவில் அமைந்துள்ள குன்றின் மேலிருந்துப் பார்த்தால் திருவண்ணாமலை தோன்றும். திருஞானசம்பந்தர் இத்தலத்தில் வலம் வந்தபோது உடனிருந்த அன்பர்கள் அவருக்குத் திருவண்ணாமலையைக் காட்டினர் ! அழல் வண்ணராகிய சிவபெருமானது திருவடிவு போன்று திருவண்ணாமலை தோன்றியகாட்சியை அறையணி நல்லூரிலிருந்தே ''உண்ணாமுலையுமையாளொடும்'' எனத்தொடங்கும் பதிகத்தைப்பாடினார் என்பர்.

## திருஞான சம்பந்தர் தேவாரம் :

அறையணி நல்லூர் திருஞானசம்பந்தர் தேவாரம் பெற்ற சிறப்புடையது. இத்தலம் பற்றிச் சம்பந்தர் ஒரு பதிகம் அருளியுள்ளார்.

''பீடினாற்பெரி யோர்களும் பேதைமைகெடத் தீதிலா
வீடினாலுயர்ந் தார்களும் வீடிலாரிள வெண்மதி
சூடினார்மறை பாடினார் சுடலைநீறணிந் தாரழல்
ஆடினாரறை யணிநல்லூர் அங்கையாற்றொழு
வார்களே''

என்ற பாடல் ஓதி மகிழத்தக்கது.



# 3. அரிசிற்கரைப் புத்தூர்

இத்தலம் காவிரிக்குத் தென்கரையிலுள்ள சிவதலங்களில்ஒன்று. தஞ்சாவூர் மாவட்டத்தில்கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே சுமார் 6 கி. மீ. தொலைவில் அரிசிலாற்றங் கரையில்இவ்வூர்அமைந்துள்ளது. இத்தலம் பெரியபுராணத்தில் ''செருவிலிபுத்தூர்'' எனக் குறிக்கப் பெற்றுள்ளது இத்தலம் இந்நாளில் ''அழகார் புத்தூர்'' என வழங்கப் படுகின்றது.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் படிக்காசு வைத்த பரமர். இறைவிஅழகம்மை, இத்தலத்தின் தீர்த்தம் வாணாசுர தீர்த்தம்.

புகழ்த்துணை நாயனார் என்னும் சிவனடியார் இக் கோவிலில் நாளும் சிவவழிபாடு இயற்றி வந்தார். அரிசிலாற்றின் நீரினை நாளும் கொணர்ந்து இறைவனுக்குத் திரு மஞ்சனம் ஆட்டுவார். நாட்டில் ஒருமுறை பெரிய பஞ்சம் ஏற்பட்டது. பசியினால் தளர்திருந்த இவர், சுவாமிக்குத் திருமஞ்சனம் ஆட்டும்பொழுது குடத்தைச்சுவாமி தலையில் போட்டுவிட்டார் ! இவருடைய பேரன்பினை உணர்ந்த இறைவன் இவருக்குப் பஞ்சம் தீரும்வரை நாள்தோறும் ஒரு காசு படியாக அளித்து வந்தார். பஞ்சம் தீர்ந்த பின்னரும் நெடுநாட்கள் இறைவனுக்கு வழிபாடியற்றி முக்தி அடைந்தார் என்ற வரலாற்றைப் பெரியபுராணத்தால் அறியலாம்.

இத்திருத்தலம் உண்மையானந்த முனிவர் வழிபட்ட பெருமையுடையது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் அருளிய தேவாரம் பெற்ற மகிமை யுடையது இத்தலம்.

## மூவர் தேவாரம் :

வள்ளி முலைதோய் குமரன் தாதை வான்தோயும்
வெள்ளி மலைபோல் விடையொன் றுடையோன் மே
வுமூர்
தெள்ளி வருநீர் அரிசில் தென்பாற் சிறைவண்டும்
புள்ளு மலிபூம் பொய்கை சூழ்ந்த புத்தூரே''

எனத் திருஞான சம்பந்தர் அருளியுள்ள தேவாரப் பாமா லையும்,

காற்றி னுங்கடி தாகி நடப்பதோர்
ஏற்றி னும்மிசைந் தேறுவ ரென்பொடு
நீற்றி னையணி வார்நினை வாய்த்தமைப்
போற்றி யென்பவர்க் கன்பர்புத் தூரரே''

எனத் திருநாவுக்கரசர் அருளியுள்ள தேவாரப் பாமாலை யும்,

அகத்த டிமைசெய்யும் அந்தணன் றானரி
சிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்த ளர்வெய்திக் குடந்தையு நும்முடி
மேல்விழுத் திட்டு நடுங்கு தலும்
வகுத்த வனுக்கு நித்தற் படியும்
வருமென் றொருகா சினைநின் றநன்றிப்
புகழ்த்து ணைகைப் புகச்செய் துகந்தீர்
பொழிலார் திருப்புத்தூர் புனிதனீரே''

எனச் சுந்தரர் அருளியுள்ள தேவாரமும் ஓதி மகிழத்தக்கன.



# 4. அவளிவ ணல்லூர்

சோழநாட்டுத் திருத்தலங்களில் ஒன்றாக இத்தலம் திகழ்கின்றது. தஞ்சாவூர் மாவட்டத்தில் சாலிய மங்கலம் இரயில் நிலையத்திலிருந்து வடகிழக்கில் சுமார் 8 கி. மீ தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது.

## தலவரலாறு :

குருக்களின் மூத்த மகளைத் திருமணம் செய்து கொண்ட மணவாளர் தீர்த்த யாத்திரை மேற்கொண்டார் அவர் திரும்பி வருவதற்குள் அவர் மனைவிஅம்மைநோயால் கண்களை இழந்தாள். மணவாளர் திரும்பி வந்ததும் தம் மனைவியின் தங்கையையே தம் மனைவி என்றார். இறைவன் உண்மை விளங்க ''அவள் இவளே'' எனச் சான்று பகர்ந்தார் ! அவள்தம் கண்களையும் கொடுத்தருளினார் ! அதனால் இவ்வூர் அவளிவள் நல்லூர் என வழங்கப் பெற்று நாளடைவில் அவளிவ நல்லூர் ஆயிற்று என்பது வரலாறு.

## தல மகிமைகள் :

இறைவன் சாட்சியாக வந்தருளியதால் சாட்சி நாயகர் எனப் போற்றப் பெறுகின்றார். இறைவி சவுந்தரநாயகி 'தம்பரிசறிவார்' என்ற திருநாமமும் இறைவனுக்கு உண்டு.

சான்று பகர்ந்த ஆனேற்றண்ணலின் (இடபா மூர்த்தி) திருப்படிமமும் கோவிலில் உள்ளது.

திருமால் பன்றியாகத் தோன்றிய பொழுது அவர் தம் கொம்பு சிவபெருமானால் முறிக்கப்பட்டது. அத்திருமால் வழிபட்ட மகிமையுடையது இத்தலம்.

இத்தலம் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் தேவாரம் பெற்ற மகிமையுடையது.

''ஓமையன கள்ளியன வாகையன கூகைமுர லோசை
ஈமமெரி சூழ்கடலை வர்சமுது காடுநட மாடித்
தூய்மையுடை யக்கொடர வம்விரவி மிக்கொளிதுளங்க
ஆமையொடு பூணுமடி கள்ளுறைவ தவ்வளிவணல்லூரே''

என்பது திருஞானசம்பந்தர் இத்தலம் பற்றி அருளிய தேவாரப் பாடல்களில் ஒன்று.

''கதம்படப் போதுவார்கள் பொதுமக் கருத்தினாலே
சிதம்பட நின்றநீர்கள் சிக்கெனத் தவிருமென்று
மதம்படு மனத்தனாகி வன்மையான் மிக்கு நோக்க
அதம்பழத் துருவுசெய்தார் அவளிவ ணல்லூராரே''

என்பது திருநாவுக்கரசர் அருளிய இத்திருத்தலப் பதிகப் பாடல்களில் ஒன்று! இத்திருப்பாடல்கள் நாளும்ஓதி மகிழத் தக்கன !



# 5. அவிநாசி

கொங்கு நாட்டிலுள்ள சிவ தலங்களில் ஒன்று அவிநாசி. கோயமுத்தூர் மாவட்டத்தில் திருப்பூர் வட்டத்தில் திருப்பூர் இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 10 கி. மீ. தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

இறைவன் திருநாமத்தால் பல தலங்கள் பெயர் பெற்றுள்ளன. அவற்றில் ஒன்று அவிநாசி. இத்தலத்து இறைவன் அவிநாசியப்பர். இறைவி பெருங்கருணை நாயகி. இத்தலத்தில் சுந்தரர் அருளிய தேவாரத்தில்,

> ''புரைக்காடு சோலைப் புக்கொளியூர் அவிநாசியே
> கரைக்கால் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு
> காலனையே''

எனவரும் அடிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றில் வரும் 'புக்கொளியூர்' என்பது அவ்வூரின் பெயர் என்பதும், அவிநாசி என்பது இறைவன் திருநாமம் என்பதும் தெளிவாக விளங்குகின்றன. நாளடைவில் ஊர்ப்பெயர் வழக்காறிழந்து இறைவன் திருநாமமாகிய அவிநாசியே ஊர்ப்பெயராகிவிட்டது.

## தல மகிமைகள் :

முதலையுண்ட பாலகனை உயிர்ப்பித்துத் தருமாறு இத்தலத்து இறைவனை வேண்டிச் சுந்தரர் பதிகம் பாடி

களர். அவிநாசியப்பரும் அவ்வாறே முதலையுண்ட பாலகனை உயிர்ப்பித்து அருளினார்! இத்தகைய அதிசயச் செயலால் அவிநாசியப்பரின் மகிமை பன் மடங்கு உயர்ந்தது. இறைவனின் திருநாமமே இத்தலத்துத் திருநாமம் ஆயிற்று.

இத்தலத்திலுள்ள கோவிலுக்குத் தென்புறத்தில் பிள்ளையை முதலை வாயினின்றும் மீட்ட குளம் இன்றும் இருக்கின்றது. இப்பகுதியை முதலைமேடு என வழங்கி வருகின்றனர். சுந்தரர் நிகழ்த்திய அதிசய செயலுக்காகக் குளத்தின் பக்கத்தில் சுந்தரருக்குக் கோவில் கட்டி வழிபாடு நடத்தி வருகின்றனர்.

முதலைவாயினின்றும் பிள்ளையை வரவழைத்த வரலாறு சிற்பவடிவில் அமைக்கப்பட்டுள்ளது. பாதிரிமரத்தின் அடியில் அம்மன் தவம் செய்யும் கோலத்தில் காணப்படுகிறார்.

பங்குனி உத்திரத்தில் அவிநாயசிப்பரை இந்தக்குளக் கரைக்கு எழுந்தருளச் செய்து முதலையுண்ட பாலகனை மீட்டுக் கொடுக்கும் காட்சி ஒரு திருவிழாவாகக் கொண்டாடப்பெற்று வருகின்றது. 63 நாயன் மார்களுடைய செம்புத் திருப் படிமங்கள் இத்தலத்தில் உள்ளன.

இத்தலம் சுந்தரர் பதிகம் பெற்ற மகிமையுடையது

''என்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெருமானையே
உற்றாயென் றுன்னையே உள்குகின் றேனுணர்ந்துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதி யேபர மேட்டியே''

என்ற பாடல் நாளும் ஓதி மகிழத் தக்கது.

# 6. அழகர் கோவில்

பாண்டி நாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில் ஒன்றாக இத்திருப்பதி திகழ்கின்றது. மதுரை மாவட்டத்தில் மதுரை மாநகரிலிருந்து 19 கி. மீ. தொலைவில் இத்திருப்பதி அமைந்துள்ளது. இத்திருப்பதி மலையை ஒட்டி அமைந்துள்ளது. இங்குள்ள அழகர் மலையின் நீளம் 16 கி. மீ. உயரம் 300 மீட்டர்.

திருமுருகாற்றுப் படையில் குறிப்பிடப் பெறும் ஆறு படைவீடுகளில் ஆறாவது படைவீடாகிய பழமுதிர்சோலை இத்தலமே ! ஆறுபடைவீடுகளில் இப்படை வீட்டைத் தவிர மற்ற ஐந்து படைவீடுகளில் முருகனுக்குக் கோவில்கள் இருக்கின்றன ! இக்காலத்தில் முருகன்கோவில் கட்டி இருக்கின்றார்கள். கார்த்திகை, விசாகம், சஷ்டி போன்ற சிறப்பு நாட்களில் அடியார் திரளாக வந்து வழிபடுகின்றனர். இவ்வாறு இத்திருப்பதி முருகன் பதியாகிச் சைவப் பெருமையினையும் நிலைநாட்டி வருகின்றது !

## தல வரலாறு :

இத்திருப்பதியிலுள்ள திருமால் கோவிலில் அழகர் என்ற திருநாமம் கொண்ட திருமால் கோவில் கொண்டிருப்பதால் அழகர் கோவில் என இத்திருப்பதி வழங்குகின்றது. இக்கோவிலின் பெயரே தலத்திற்கும் பெயராகி விட்டது

இத்திருப்பதி திருமாலிருங்குன்றம், திருமாலிருஞ்சோலை மலை என்றும் போற்றப் பெறுகின்றது. அழகர் மலையை ஒட்டி அதன் அடிவாரத்தில் அழகர் கோவில் விளங்கு கின்றது.

இங்குள்ள மலை இயற்கைவளம் வாய்ந்தது. பசுமை வாய்ந்த மலைகளின் தொடர்ச்சியாகவும் பல்வகை மலர்க ளும் பழங்களும் நிறைந்த விண்ணை முட்டும் மரங்களின் தோப்பாகவும் மந்தி, மான், மயில் புள்ளினம் வாழும் சோலையாகவும் விளங்குகின்றது. எனவேபழமுதிர்சோலை என்ற பெயரும் இத்திருப்பதிக்குப் பொருத்தமான திருப் பெயராகவே திகழ்கின்றது,

பழமுதிர் சோலை என்னும் பெயர் பழம்—முதிர்—சோலை என்றமைந்து பழங்கள் முதிர்ந்த சோலை என்னும் பொருளையும் பழம்—உதிர்—சோலை என்றமைந்து பழங் கள் உதிர்ந்த சோலை, பழங்கள் உதிரும் சோலை என்னும் பொருளையும் தருகின்றது. ஔவையாருக்கு முருகப்பெரு மான் சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என வினாவித் திருவிளையாடல் நிகழ்த்தியது இத்தலத்தில் தானே!

## தல மகிமைகள் :

அழகர் கோவிலில் உள்ள மூலவர் திருநாமம் கள்ளழ கர். மதுரைமாநகரில் நடைபெறும் சித்திரைத் திருவிழா வின் போது அழகர்மதுரைக்கு எழுந்தருள்கின்றார். அழகர் மதுரையில் கோவில் கொண்டுள்ள மீனாட்சியின் சகோதரர் தனது தங்கைக்கும் சுந்தரேசுவரருக்கும் நடைபெறும் திரும ணத்தைக் காணஅழகர் மதுரைக்கு எழுந்தருளுவர். இம்மா

பெரும் விழாவின் போது அழகர் வையையாற்றில் இறங்கும் அற்புதக் காட்சி கண்கொள்ளாக் காட்சி ! இச்சிறப்பினால் தான்.

ஆற்றைக் கண்டாயோ ?
அழகரைச் சேவித்தாயோ ?

என்ற பழமொழி தோன்றியிருக்கிறது.

திருமுருகாற்றுப்படை, பரிபாடல். சிலப்பதிகாரம் திருமங்கையாழ்வார், நம்வாழ்வார், குலசேகர ஆழ்வார், பெரியாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், ஆண்டாள் ஆகியோருடைய திருப்பாசுரங்களும், திருப்புகழ், பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய அழகர் அந்தாதி, வேம்பத்தூர்கவிகுஞ்சரமய்யர் இயற்றியஅழகர் கலம்பகம், பல பட்டைச் சொக்கநாதப் புலவர் படைத்தஅழகர் கிள்ளைவிடு தூது, கவிகுஞ்சர பாரதியார் இயற்றியசோலைமலைக் குறவஞ்சி முதலிய இலக்கியங்கள்அனைத்தும் அழகர்கோவிலின் சிறப்புக்களை எடுத்துரைக்கின்றன.

திருமுருகாற்றுப் படையில்,

''வாழை முழுமுத றுமியத் தாழை
யிளநீர் விழுக்குலை யுதிரந் தாக்கித்

— — — —

இழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே''

என வரும் அடிகளும், பெரியாழ்வார் திருமொழியில்

''மாலிருஞ் சோலையென்னும் மலையையுடைய மலையை
நாலிரு மூர்த்திதன்னை நால்வேதக் கடலமுதை
மேலிருங் கற்பகத்தை வேதாந்த விழுப்பொருளின்
மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனனே''

என வரும் பாமாலையும், திருமங்கையாழ்வார் பெரிய திரு மொழியில்,

''புந்தியில் சமணர் புத்தரென் றிவர்கள்
ஒத்தன பேசவும் உகந்திட்டு
எந்தைபெம் மானார் இமையவர் தலைவர்
எண்ணிமுன் இடங்கொண்ட கோயில்
சந்தனப் பொழிலின் தாழ்சினை நீழல்
தாழ்வரை மகளிர்கள் நாளும்
மந்திரத் திறைஞ்சும் மாலிருஞ் சோலை
வணங்குதும் வாமட நெஞ்சே''

என வரும் பாமாலையும், நாச்சியார் திருமொழியில்,

''சந்தோடு காரகினும் சுமந்து
தடங்கள் பொருது
வந்திழியும் சிலம் பாறுஉடை
மாலிருஞ் சோலை''

எனவரும் பாமாலை அடிகளும், கந்தபுராணத்தில்,

எழுமுதி ரைப்புனத்து இறைவி முன்புதன்
கிழமுதிர் இளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களியென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்''

எனவரும் பாமாலையும் ஓதி மகிழத் தக்கவை



# 7. அன்பில் ஆலந்துறை

சோழநாட்டுத் திருத்தலங்களில் ஒன்று அன்பில் ஆலந்துறை, இத்தலம் பாடல் பெற்ற சிவதலமாக விளங்குகின்றது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் இலால்குடி இரயில் நிலையத்திற்கு கிழக்கே சுமார் 4 கி. மீ. தொலைவில் கொள்ளிடத்தின் வடகரையில் இத்தலம் அமைந்துள்ளது கீழ் அன்பில் என்றும் இத்தலம் வழங்கப்பெறும்.

## தல வரலாறு :

இத்தலத்தில் ஆலமர் செல்வனாகியசிவபெருமான்எழுந்தருளியிருக்கின்றான். அன்பின் அடிப்படையில் அமைந்த ஊரில் ஆலமர்ச் செல்வன் கோவில் கொண்டிருக்கின்ற காரணத்தால் இத்தலம் அன்பில் ஆலந்துறை என வழங்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருநாமம் சத்திய வாகீசர். இறைவி சௌந்தரநாயகி, நான்முகன், வாகீசமுனிவர் வழிபட்ட மகிமையுடையது இத் திருத்தலம்.

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் இத்தலத்தின் மகிமைகளைப் பாடியுள்ளனர். அவர்களுடைய திருப்பாடல் களைத்திருச்செவி ஏற்ற பிள்ளையார் செவிசாய்த்தபிள்ளை யார் ஆவர். அவர் திருவுருவம் கோவில் திருச்சுற்றில் தென்

மேற்கில் இருக்கின்றது. ஆனாய நாயனார் திருத்தோற்ற முற்றருளிய மங்கலத்திருவூர், இத்திருவூருக்கு வடக்கே இரண்டு கல் தொலைவில் இருக்கின்றது.

''கணைநீ டெரிமா லரவம் வரைவில்லா
இணையா எயின்மூன் றுமெரித் தவிறைவர்
பிணைமா மயிலுங் குயில்சேர் மடவன்னம்
அணையும் பொழிலன் பிலாலந் துறையாரே''

எனவரும் தேவாரப் பாமாலையும்.

''வெள்ளம் உள்ள விரிசடை நந்தியைக்
கள்ளம் உள்ள மனத்தவர் காண்கிலார்
அள்ளல் ஆர்வயல் அன்பிலா லந்துறை
உள்ள வாறறி யார்சிலர் ஊமரே''

எனவரும் திருநாவுக்கரசர் பாமாலையும் நாளும்ஓதி மகிழத் தக்கவை.

# 8. ஆதனூர்

தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திலிருந்து சுவாமிமலை வழியாகச் செல்லும் பெருந்து சாலையில் 8 கி. மீ. தொலைவில் இத்திருப்பதி அமைந்திருக்கின்றது. சுவாமி மலை இரயில் நிலையத்திலிருந்து 3. கி. மீ. தொலைவில் உள்ளது.

## தல வரலாறு :

காமதேனுவுக்கு இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் சேவை சாதித்தார். அதனால் இத்திருப்பதி

ஆ—தன்—ஊர்—ஆதனூர் என்ற திருநாமம் பெற்றதாகக் கூறுவர்.

இளங்கோவடிகளின் தந்தை சேரலாதன் பெயரால் ஆதனூர் என்று பெயர் பெற்றதுஎனவரலாற்று அடிப்படையிலும் இத்தலப் பெயர் பற்றிக் கூறுவர்.

## தல மகிமைகள் :

திருமங்கையாழ்வார் இத்தலத்து எம்பெருமானை,
''ஆதனூர் ஆண்டு அளிக்கும் ஐயன்''

என மங்களாசாசனம் செய்துள்ளார். எம்பெருமானின் திருநாமம் ஆண்டு அளக்கும் ஐயன். தாயார் அரங்கநாயகியார். திருமங்கையாழ்வார்க்கு இங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான் காட்சி தந்ததாக வரலாறு, திருமங்கையாழ்வாரின் திருமேனி எம்பெருமான் தங்கியுள்ள கருவறையில் இருப்பது இத்திருப்பதியின் தனிச் சிறப்பாகும்.



# 9. இராமனதீச்சுரம்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவப்பதிகளில் ஒன்று. தஞ்சாவூர் மாவட்டத்தில் நன்னிலம் இரயில் நிலையத்திலிருந்து சுமார் 6 கி. மீ. தொலைவில் இத்திருத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு :

இத்தலம் இராமன் சிவபிரானை வழிபட்ட தலமாதலால் இராமனதீச்சுரம் என்ற பெயர்பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் இராம நாதேச்சுரர். இறைவன் பெயராலும் இத்தலம் பெயர் பெற்றிருக்கலாம். இறைவி சரிவார்குழலி. தீர்த்தம் இராம தீர்த்தம்.

இத்தலம் திருஞானசம்பந்தர் பாடல்பெற்ற மகிமை யுடையது.

''சரிகுழ லிலங்கிய தையல் காணும்
பெரிய வன் காளிதன் பெரிய கூத்தை
அரியவன் ஆடலோன் அங்கை யேந்தும்
எரியவன் இராமன தீச்சரமே''

என்பது அவர் அருளிய தேவாரப் பாமாலைகளில் ஒன்று.



# 10. இராமேசுவரம்

இத்திருத்தலம் இராமநாதபுரம் மாவட்டத்தில் இருக்கின்றது. வங்காளக் குடாக்கடலிலுள்ள ஒரு தீவு. பன்னிரண்டு ஜோதிர்லிங்கத் தலங்களில் தென்னகத்தின் கோடியிலுள்ள ஒரு புனிதமான கடல்துறைத் தலம் பாரதத்தின் தென்முனையிலுள்ள இத்தலத்தைப் பாரதத்தினின்றும் பிரித்து வைப்பது பாம்பன்சால்வாய். இத்தலம்மதுரைக்குத்

தென்கிழக்காக 125 கி.மீ. தொலைவில் உள்ளது. சென்னை தனுஷ்கோடி இருப்புப் பாதையில் இராமேசுவரம் இரயில் நிலையம் இருக்கின்றது.

## தல வரலாறு :

இத்தலம் இராமேசுவரம் என்றும் சேது என்றும் வழங்கப் பெறுகின்றது இலங்கையில் போர் முடிந்த பிறகு இராமன் இராமேசுவரத்தில் வந்து தங்கினார். இராவணன் சிவபக்தன். இராவணன் முதலியோரைப் போரில் கொன்ற பாவம் நீங்க இராமன் ஓர் இலிங்கம் பிரதிட்டை செய்து வழிபட வேண்டும் என முனிவர்கள் கூறினர். உடனே இராமன் கயிலையிலிருந்து ஓர் இலிங்கம் கொண்டு வருமாறு அனுமனை அனுப்பினார். கயிலை சென்ற அனுமனுக்குத் தேவையான இலிங்கம் உடனே கிடைக்கவில்லை. எனவே அவன் தவத்தில் ஈடுபட்டான்.

இராமேசுவரத்தில் இலிங்கப் பிரதிட்டைக்கான நல்லநேரம் நெருங்கியது. ஆகவே சீதை மணலையே இலிங்கமாகக் குவித்து வைத்தாள். இராமன் அதனையே பிரதிட்டை செய்தார், சீதை குவித்து வைத்ததும் இராமன் பிரதிட்டை செய்து வழிபட்டதுமான இலிங்கம் இராமலிங்கம் எனப் போற்றப் பெற்றது. இராமலிங்கம் என்ற இறைவன் திருநாமத்தால் இத்தலம் இராமேசுவரம் என வழங்கப் பெறுகின்றது.

## சேது :

இராமன் இலங்கைக்குச் செல்லக் கட்டிய சேது (அணை) இத்தலத்தில் இருக்கின்றது. இராமலிங்கர் திருக் கோவிலில் இலக்குமியை மணந்த சேதுமாதவர் சந்நிதி

தனியாக இருக்கின்றது. இதனால் இத்தலம் சேது என்றும் வழங்கப் பெறுகின்றது. இத்தலம் பற்றி நிரம்ப வழகிய தேசிகர் இயற்றிய புராணத்திற்குச் சேது புராணம் என்றே பெயர் வைத்துள்ளார்.

## தல மகிமைகள் :

இத்தலம் திருக்கோவில், தீர்த்தம், திருவிழாக்கள், அவை பற்றிய இலக்கியங்கள் எனப் பல மகிமைகளைப் பெற்றுள்ளது.

## இராமலிங்கர் திருக்கோவில் :

இந்தியாவிலேயே மிகப்பெரிய பிரகாரத்தைப் பெற்ற கோவிலாக இக்கோவில் விளங்குகின்றது. இப்பிரகாரத்தின் நீளம் 4000 அடி. இராமேசுவரம் தீவின் தென்கிழக்கில் உயரமான மேட்டின்மீது இக்கோவில் மிகப்பெரிய கோபுரத்துடனும் நான்கு பிரகாரங்களுடனும் விளங்குகின்றது. வெளிப்பிரகாரத்தில் நடராசப் பெருமான் திருக்காட்சி நல்குகின்றார்.

கோவிலின் நீளம் 865 அடி. அகலம் 657 அடி மேலை வாயலில் மட்டும் முடிவுபெற்ற கோபுரம் திகழ்கின்றது. உட்பிரகாரத்தில் இராமலிங்கர் திருவருள் பாலிக்கின்றார். இவருக்கு இராமநாதர் இராமேசுவரர்என்றதிருநாமங்களும் உண்டு.

அனுமன் கொணர்ந்த லிங்கம் இராமலிங்கர் சந்நிதிக்குவடக்குப்பக்கத்தில் பிரதிட்டை செய்யப்பெற்றுள்ளது. அவர் காசிவிசுவநாதராக விளங்குகின்றார். முதலில் அவருக்கே வழிபாடு நிகழ்த்தப் பெறுகின்றது.

உட்பிரகாரத்திலுள்ள நவசக்தி மண்டபத்தில் அம்பிகை மலைவளர் காதலியாக அருள் புரிகின்றார். பர்வத வர்த்தினி என்றும் அவரைப் போற்றுவர்.

இக்கோவிலில் 12 அடி நீளமும் 9 அடி உயரமும் கொண்ட அழகிய நந்தி ஒன்று இருக்கின்றது. இந்நந்தி சுதையினால் அமைக்கப் பெற்றுள்ளது.

இக்கோவிலின் கிழக்குக் கோபுரவாயிலில் அனுமன் பெரிய உருவில் விளங்குகின்றார்.

## தீர்த்தம் :

இத்தலத்தில் மொத்தம் 22 தீர்த்தங்கள் உள்ளன. அவற்றுள் 14 தீர்த்தங்கள் கோவிலுக்குள்ளேயே இருக்கின்றன. இராம இலக்குவ, அனும, சுக்கிரீவ, பஞ்ச பாண்டவ தீர்த்தங்கள் அக்கினி தீர்த்தம், கோடி தீர்த்தம் முதலியவை சிறப்பு வாய்ந்தவை. அக்கினி, இராம, இலக்குவ ஆகிய மூன்று தீர்த்தங்களும் மிகச் சிறப்பானவை என்பர்.

## அக்கினி, கோடி தீர்த்தங்கள் :

இங்குள்ள தீர்த்தங்களில் அக்கினித் தீர்த்தம் வரலாறு உடையது. இராமபிரான் இலங்கையிலிருந்துசீதையை மீட்டார். அவளது பரிசுத்தத் தன்மையை உலகினர்க்கு உணர்த்த அக்கினித்தேவனை வரவழைத்து அவ்வக்கினியில் சீதையை மூழ்கச் செய்தார். அக்கினிதேவன் கற்புக்கரசியாகிய சீதையைச் சோதித்த பாவம் நீங்கக் கடலில் நீராடிச் சீதையை வழி பட்டார். இராமன் அக்கினித்தேவனிடம்

"நீ நீராடிய இவ்விடம் அக்கினித் தீர்த்தம் என வழங்கப் பெறும். இத்தீர்த்தத்தில் நீராடினோர் அனைவரும் பாவம் நீங்கப் பெறுவர்" என்று கூறியதாக வரலாறு.

கோவிலுக்குக் கிழக்கே உள்ள கடலே அக்கினித்தீர்த்தம், கோடிதீர்த்தம் கோவிலுக்குள்இருக்கின்றது. இராமன் தன்னுடைய தனுவை ஊன்றி உண்டாக்கிய தீர்த்தமாகும் அக்கினித் தீர்த்தத்தில் முதலில் நீராடத் தொடங்க வேண்டும். என்பதும் பின்னர் இத்தலத்திலுள்ள எல்லாத் தீர்தங்களிலும் நீராடலாம் என்பதும் இறுதியில்கோடிதீர்த்தத்தில் நீராடவேண்டும் என்பதும் கோடி தீர்த்தத்தில் நீராடிய பிறகு இத்தலத்தில் தங்கியிருத்தல் தகாது என்பதும் இங்குள்ள ஐதிகம்.

## தனுக்கோடி :

இராமேசுவரத்திற்குத் தெற்கே சுமார் 15 கி. மீ. தொலைவில் தனுக்கோடி தீர்த்தம் உள்ளது. இங்குக் கடலாடுதுறை இருக்கின்றது. இத்தீர்த்தமும் இராமேசுவரத்திற்குரியது.

## திருவிழாக்கள் :

இத்தலத்தில் பல திருவிழாக்கள் நடந்தாலும்மாசிமாதத்தில் நடைபெறும் பிரம்மோற்சவமும் ஆடி மாதத்தில் நடைபெறும் அம்மன் உற்சவமும் மிகச்சிறப்பாக நடைபெறுகின்றன. அம்மன் தபசும், அம்மன் திருக்கல்யாணமும் கண்கொள்ளாக் காட்சி ! இத்திருவிழாக் காலங்களில் இலட்சக்

கணக்கானபக்தர்கள் இராமேசுவரத்திற்கு வந்து அருள் பெறுகின்றனர்.

## திருவிழாவில் முகமதியர் :

தெப்பத்திருவிழாவிற்கு இத்தலம் இருக்கும் முகமதியர்கள்தான் தங்களின் படகுகளைக் கொடுக்கின்றார்கள். இவ்வழக்கம் பழங்காலம் முதலே இருந்து வருகிறதாம், இதற்குக் காணிக்கையாகக்கோவில் மலர்மாலை ஒன்று மட்டுமே அவர்களுக்கு வழங்கப் பெறுகின்றதாம் !

## இத்தலம் பற்றிய நூல்கள் :

இத்தலம் பற்றிய அகநானூற்றில் குறிப்புள்ளது. திருஞானசம்பந்தர் 21 பாடல்களும் திருநாவுக்கரசர் 11 பாடல்களும் இத்தலம் பற்றிப் பாடியுள்ளனர், அருணகிரி நாதர், தாயுமானவர் போன்றவர்களும் இத்தலம் பற்றிப் பாடியுள்ளனர். இத்தலம் பற்றி பரவதவர்த்தினி என்ற பிள்ளைத்தமிழ் நூல் வெளிவந்துள்ளது. கம்பராமாயணம் யுத்தக்காண்டத்தின் மீட்சிப்படலத்தில் சேதுவின் சிறப்பு சொல்லப் பெற்றுள்ளது.

## திருஞானசம்பந்தர் :

" தேவியை வவ்விய தென்னிலங் கைத்தசமாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை அண்ணல்செப் தவிரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தம் மேல்வினை வீடுமே"

## திருநாவுக்கரசர் :

"கடலிடை மலைகள் தம்மால் அடைத்துமால் கருமம் முற்றித்
திடலிடைச் செய்தகோயில் திருவிரா மேச்சுரத்தைத்
தொடலிடை வைத்துநாவில் சுழல்கின்றேன் தூய்மையின்றி
உடலிடை நின்றும்பேரா ஐவராட் டுண்டுநானே"

## தாயுமானவர் :

வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவை அரசே!
வரைரா சனுக்கு இருகண் மணியாய் உதித்துமலை
வளர்காத லிப்பெண் உமையே"

## வடமொழி இலக்கியங்கள் :

வடமொழியில் பல புராணங்களிலும் இலக்கியங்களிலும் இத்தலத்தின் சிறப்புகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. துளசிதாஸ்இராமாயாணத்தில்"இராமேசுவரத்தை வழிபடுபவனே எனக்கு ஆப்தன் ஆவான்" என்று இராமபிரானின் வாக்காகக் கூறப்பட்டுள்ளது.

## கந்தமாதனகிரி :

இராமேசுவரத்திலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவில் கந்த மாதனகிரி என்னும் மணல்மேடு இருக்கின்றது. அம்மேட்டில் இராமர் பாதங்கள் போன்று பிரதிட்டை செய்யப் பெற்ற சிறுகோவில் இருக்கின்றது. இராமேசுவரம் வரும் பக்தர்கள் இங்கு வந்தும் வழிபடுகின்றனர்.

## காசியும் இராமேசுவரமும் :

இந்துக்கள் காசி இராமேசுவரம் ஆகிய இருதலங்களையும் இணைத்தே போற்றுகின்றனர். காசியாத்திரை செல்பவர்கள் இராமேசுவரம் சென்று யாத்திரையை முடித்தால்தான் காசியாத்திரையின் பூரண புண்ணியம் கிடைப்பதாக நம்புகின்றனர். பக்தர்கள்கங்கையில் நீராடி அங்கிருந்து கங்கைத் தீர்த்தத்தைக் கொணர்ந்து இராமேசுவரத்தில் இராமலிங்கருக்கு அபிஷேகம் செய்கின்றனர்.

இராமேசுவரம் காசி ஆகிய இருதலங்ளையும்நடந்தே இணைத்தவர் இராமபிரான். சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இராமபிரான் நடந்து இணைத்ததாக ஐதிகம்! இந்நாளில் பொற்கிழிக் கவிஞர் 'காசிஸ்ரீ' அரு. சோமசுந்தரன் அவர்கள் அன்பர்கள் புடைசூழ இராமேசுவரம் காசி நடைப்பயணத்தை மேற்கொண்டு இறையருள் பெற்றதோடு இராமேஸ்வரம் காசி நடைப்பயணம் 640 பக்கங்கள் கொண்ட நூல் ஒன்றும் எழுதி வெளியிட்டுள்ளார்கள்.

# 11 இராஜேந்திரப்பட்டினம் என்ற எருக்கத்தம் புலியூர்

தென்னார்க்காடு மாவட்டம் விருத்தாசலம் வட்டத்தில் விருதத்தாசலத்திலிருந்து 9 கி.மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

கோவிலின் தலவிருட்சம் எருக்கஞ்செடி அதனால் இத்தலம் எருக்கத்தம் புலியூர் எனப் பெயர் பெற்றது. இராசராசன் மகன் இராஜேந்திரன் பெயரால் பின்னாளில் இராஜேந்திரப் பட்டினம் என வழங்கப்பட்டு வருகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் நீல கண்டர். இவரைக்குமரேசர் என்றும் போற்றுவர் இறைவி நீல மலர்க்கண்ணி. இவர் வீறாமுலையம்மன் என்றும் போற்றப் பெறுவர். தீர்த்தம் நீலோற்பல தீர்த்தம்.

## நீலோற்பல தீர்த்தம் :

உருத்திரசன்மர் வழிபட்டு ஊமைத்தன்மை நீங்கப் பெற்ற சிறப்புடையது இத்தலம். அவருடைய திருவுருவமும் கோவிலில் இருக்கின்றது.

இத்தலத்தில்தான் திருநீலகண்ட யாழ்ப்பாணர் தோன்றினார். திருஞானசம்பந்தருடைய பதிகங்களைத் திருநீலகண்டயாழ்ப்பாணர் யாழிலிட்டு இசைத்த பெருமை யுடையது இத்திருத்தலம்.

## திருஞானசம்பந்தர் தேவாரம் :

"வீறார் முலையாளைப் பாக மிகவைத்துச்
சீறா வருகாலன் சினத்தை யழிவித்தான்
ஏறான் எருக்கத்தம் புலியூர் இறையானை
வேறான நினைவாரை விரும்பா வினைதானே!"

என்ற பாடல் ஓதி மகிழத் தக்கது.

# 12 உத்தரகோச மங்கை

பாண்டி நாட்டிலுள்ள திருத்தலங்களில் ஒன்றாக இத்தலம் திகழ்கின்றது. இராமநாதபுரம் மாவட்டத்தில் இராமநாதபுரத்திற்குத் தென்மேற்கில் சுமார் 7 கி.மீ. தொலைவில் இருக்கின்றது. சத்திரக்குடி இரயில் நிலையத்திலிருந்து சுமார் 8 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

சிவபெருமான் ஒருமுறை பார்வதி தேவிக்கு வேத மந்திரத்தை உபதேசித்துவிட்டுத் திருப்பிக் கேட்டபோது அவள் மறந்து விட்டாளாம். அதனால் கோபம் கொண்ட சிவபெருமான் மண்ணுலகில் புகலூார்என்ற தலத்தில்போய் அவதரிக்குமாறு ஆணையிட்டு விட்டுத் தாமும் ஒரு அந்தணராகப் பிறந்து பார்வதியை மணந்தபின் மீண்டும் வேதமந்திரத்தை உபதேசித்தாராம். உத்தரம்-விடை; கோசம்-வேதம். இதனால் இத்தலம் உத்தரகோச மங்கை என்ற பெயர் பெற்றது. என்பர்.

## தல மகிமைகள் :

நடராசப் பெருமானுக்கு உத்தரகோச மங்கையில் ஆதி சிதம்பரம் என்றதனிக்கோவில்இருக்கின்றது மூலவராக நடராசர்கோவில் கொண்டிருப்பது இத்தலத்தில் மட்டுமே! அறையில் ஆடிபதஞ்சலிக்கும் வியாக்கிரபாதருக்கும் காரைக்கால் அம்மையாருக்கும் காட்சி கொடுத்த இடம் இத்திருத்தலம், ஆதலால் இத்தலம் ஆதிசிதம்பரம் என்றும் போற்றப் பெறும். பின்னர் இறைவன் இங்கிருந்து சிதம்பரம் சென்று அனைவரும் காண ஆடியதாக வரலாறு.

## பழமொழி :

இந்நிகழ்ச்சியால்தான்,

"அறையில் ஆடி அம்பலத்தில் ஆடவேண்டும்"
என்ற பழமொழி தோன்றியது. உத்திரகோசமங்கை யிலிருந்து சிதம்பரத்திற்குச் சுரங்கப்பாதை இருந்ததாகவும் கூறுவர்,

## மரகதத்தில் நடராசர் :

உலகிலேயே இத்தலத்தில் மட்டுமே நடராசர் திருவுருவம் மரகதத்தில் ஒளி வீசிக்கொண்டிருக்கின்றது.

## மாணிக்கவாசகருக்குத் தெய்வக்காட்சி :

தென்னாட்டிலுள்ள எல்லாச் சிவத்தலங்களையும் சம்பந்தர்; அப்பர்' சுந்தரர் ஆகிய மூவரும் பாடியுள்ளனர். இத்தலத்தின் மகிமைகளை மாணிக்கவாசகர் மட்டுமே பாடியுள்ளார். இறைவன் உத்தரகோசமங்கை. நாதேச்சுரர் இறைவி உத்தரகோச மங்கை தீர்த்தம் சிவகங்கை இத் தலத்தில்தான் மாணிக்கவாசகர் தெய்வக்காட்சி கண்டார்!

"உத்தரகோச மங்கையுள்ளிருந்து
வித்தக வேடங்காட்டிய இயல்பும்"

என மாணிக்கவாசகர்தம் திருவாசகத்தில் கீர்த்தி திரு அகவலில் அருளியுள்ளார்.

"வளர்கின்ற நின்கரு ணைக்கையில்
வாங்கவும் நீங்கியிப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதிகண்
டாய்வெண் மதிக்கொழுந் தொன்(று)

ஒளிர்கின்ற நீண்முடி உத்தர
கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னுமின் னும் அன்ன
தோற்றச் செழுஞ்சுடரே''

என மாணிக்கவாசகர் அருளிய நீத்தல் விண்ணப்பிப் பாமாலை நாளும் ஓதி இன்புறத் தக்கது.

பிருகுமுனிவர், காண்டில்லியர், கங்கை, அக்கினி முதலியோர் இத்தலத்தில் வழிபட்டு முக்தியடைந்த மகிமை யுடையது இத்திருத்தலம்.

# எட்டிக்குடி

முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள திருத்தலங்களில் ஒன்றா எட்டிக்குடி விளங்குகின்றது. தஞ்சாவூர் மாவட்டம் நாகப்பட்டுணம் வட்டத்தில் திருத்துறைப் பூண்டியிலிந்து 13 கி. மீ. தொலைவிலுள்ள சீரா வட்டம் பாலத்தடியி லிருந்து வடக்கே 4 கி, மீ. தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

இத்தலத்தின் கோவில் மரம் எட்டி மரம். எனவே இத்தலம் எட்டிக்குடி என்று பெயர்பெற்றுள்ளது. இத்தலத் தினை 'காஞ்சிரங்குடி' என்றும் வழங்குவர் அருணகிரி நாதர்,

கங்கை யங்கறு மாசின் மனத்தன்-பர்கள் வாழவே
காஞ்சிரங்குடி ஆறுமுகத்தெம்-பெருமானே''
என இத்தலத்தைப் பாடியுள்ளார்.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் முருகப்பெருமான் ஆறுதிருமுகங்களோடும் பன்னிரண்டு திருக்கரங்களோடும் மயில் மீதமர்ந்து வள்ளி, தெய்வயானையோடு அருள்பாலிக்கின்றார்.

இத்தலத்தில் பல விழாக்கள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு கிருத்திகை அன்றும் முருகப்பெருமான் மயில் மீதமர்ந்து திருவீதி வலம் வந்து அன்பர்கட்குத் திருக்காட்சி தருகின்றார். சித்திரா பௌர்ணமியை ஒட்டி இங்கு 10 நாட்கள் நடைபெறும் விழா மிகச்சிறப்புடை. யது.

அருணகிரி நாதர் தம் திருப்புகழில்,
''பழனத் தொளிர்முத் தணியெட் டிகுடிப்
பதியிற் குமரப்-பெருமானே''
எனப் பாடியுள்ளார்.

''அந்திப்போது அழகுறவே நடித்தருளும்
வழித்துணைவர் அருளுங்கோவை
வந்திப்போர் நினைத்துபடி மயிலேறி
அயில் எடுத்து வரும்செவ்வேளைச்

சந்திப்போம்; மலர்சொரிவோம்; புகழ்ந்திடுவோம்!
அவன்கமலத் தோளும்
சிந்திப்போம் ஆதலினால் நமதுபழ
வினைகள் எல்லாம் சிந்திப்போமே''

—திருவிரிஞ்சைப் புராணம்.

# 14 எதிர்கொள்பாடி

இத்தலம் திருநெல்வேலி மாவட்டத்தில் குற்றாலம் இரயில் நிலையத்திலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

மன்னன் வேண்டுகோளின்படி சிவபெருமான் ஒரு பெண்ணைப் பூதத்தால் எடுப்பித்து அவனுக்குத் திருமணம் முடித்தருளினன் இத்தலத்தில் அம்மணமக்களைச் சிவ பெருமான் அம்மான் முறையாக எதிர்கொண்டு வரவேற்று அருள் புரிந்தார். அதனால் இந்தலம் எதிர்கொள்பாடி என்னும் பெயர் பெற்றது. சிவபெருமான் அருளால் இவ் ஊரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றதால் இத்தலத் தினை மேலைத் திருமணஞ்சேரி என்றும் வழங்குவார்.

## தல மகிமைகள் :

இத்தலததில் எழுந்தருளியுள்ள இறைவன் அயிராவதநாதர். இறைவி மலர்க்குழல்நாயகி இத்தலம் அயிராவதம் வழிபட்டு சிறப்புடையது.

சுந்தரர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

“மத்தயானை ஏறிமன்னர் சூழவரு வீர்காள்
செத்தபோதில் ஆருமில்லைசிந்தையுள் வைம்மின்கள்
வைத்த உள்ளம் மாற்றவேண்டாவம்மின் மனத்தீரே
அத்தர்கோயில்எதிர்கொள்பாடிஎன்பதடைவோமே”

என்ற சுந்தரர் தேவாரப் பாமாலை ஓதி இன்புறத்தக்கது.

# 15 ஓமாம் புலியூர்

தென்னார்க்காடு மாவட்டத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் இத்தலம் அமைந்திருக்கின்றது. சிதம்பரத்திற்குத் தென்மேற்கே சுமார் 20கி.மீ- தொலைவில் காட்டுமன்னார்குடி இருக்கின்றது. அங்கிருந்து தெற்கே சுமார் 7கி.மீ தொலைவில் ஓமாம்புலியூர் உள்ளது. குற்றாலம் இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 14கி.மீ, தொலைவில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

உமையம்மையா ஆலமர் செல்வராகிய தென்முகக் கடவுளிடத்து அருமறையாகிய ஓங்கார உபதேசம் பெற்றார்! ஒருவேடன் புலிக்கு அஞ்சி வில்வமரத்தில் ஏறிக் கொண்டான். தூங்கிக் கீழே விழாமல் இருக்கஇரவு முழுவதும் அவ்வேடன் வில்வத்தளிர்களைப் பறித்துக்கீழே தூவிக் கொண்டிருந்தான். அத்தளிர்கள் வில்வமரத்தின் அடியிலிருந்த சிவலிங்கத்தின்மீது விழுந்து எதிர்பாராத அருச்சனையாகி விட்டது- சிவபெருமான் அவ்வேடனுக்கு வீடுபேறு நல்கினார். இந்நிகழ்ச்சியால் இத்தலம் ஓமாம் புலியூர் எனப்பெயர் பெற்றன.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் துயரந்தீர்த்தநாதர்- இறைவி பூங்கொடிநாயகி, திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தைத் போற்றிப் பாடியுள்ளனர்.

## திருஞானசம்பந்தர் :

மணந்திகழ் திசைக ளெட்டு மேழி சையும்
மலியுமா றங்கமை வேள்வி
இணைந்த நால் வேதம் மூன்றெரி இரண்டு
பிறப்பென ஒருமையால் உணரும்
குணங்களும் அவற்றின் கொள்பொருள் குற்ற
மற்றவை உற்றது மெல்லாம்
உணர்ந்தவர் வாழும்ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி யதுவே"

## திருநாவுக்கரசர் :

"பாங்குடைய வெழிலங்கி யருச்சனைமுன் விரும்பப்
பரிந்தவனுக் கருள்செய்த பரமன் றன்னைப்
பாங்கிலா நரகதனிற் றொண்ட ரானார்
பாராத வகைபண்ண வல்லான் றன்னை
ஓங்குமதில் புடைதழுவும் எழிலோமாம் புலியூர்
உயர்புகழந் தணரேத்த வுலகர்க் கென்றும்
தீங்கில்திரு வடதளியெஞ் செல்வன் றன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே,,

இப்பாமாலைகள் படித்தின்புறத் தக்கவையாகும்.

# 16 கஞ்சனூர்

இத்திருத்தலம் தர்மபுரி மாவட்டத்தில் இருக்கின்றது சென்னையிலிருந்து கோயமுத்தூருச்குச் செல்லும் இரயில் பாதையில் தாசம்பட்டி இரயில் நிலையத்திலிருந்து வட கிழக்கே 3 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் அக்னீசுரர் இறைவிகற்பகநாயகி. இத்தலத்தில் அரதத்த சிவாசாரியார் என்பவர் பழுக்கக்காய்ச்சிய இரும்பு முக்காலியின் மீதமர்ந்து சித்தாந்த சைவச் செந்நெறியினை நிலைநிறுத்தினார் என்பர். அவருக்குத் தனிக்கோவில் இத்தலத்தில் இருக்கின்றது. இத்தலம் அக்கினிபகவானும் நான்முகனும் வழிபட்ட மகிமையுடையது.

திருநாவுக்கரசர் பாடல்பெற்ற சிறப்புடையது இத்தலம்.

''உருத்திரனை யுமாபதியை யுலகா னானை
யுத்தமனை நித்திலத்தை யொருவன் தன்னைப்
பருப்பதத்தைப் பஞ்சவடி மார்பி னானைப்
பகலிரவாய் நீர் வெளியாய்ப் பரந்து நின்ற
நெருப்பதனை நித்திலத்தின் தொத்தொப் பானை
நீறணிந்த மேனியராய் நினைவார் சிந்தைக்
கருத்தவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந்தேனே''

என்னும் தேவாரப் பாமாலை ஓதி மகிழத்தக்கது.

# 17 கடம்பர் கோவில்

இத்திருத்தலம் திருச்சிராப்பள்ளி மாவட்டம் குழித்தலை வட்டத்தில் குழித்தலை இரயில் நிலையத்திலிருந்து வடமேற்கில் சுமார் 2 கி-மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு

ஆற்றில் மக்கள் இறங்கி நீராடுவதற்குரிய இடம் துறை எனப்படும். தமிழ்நாட்டில் ஆற்றிற்கு அருகிலுள்ள சில ஊர்கள் துறை எனப்பெயர் பெற்றுள்ளன. காவிரியாற்றின்

துறைக்கு அருகே கடம்ப மரங்கள் நிறைந்த பகுதி கடம்பந்துறை எனப்பெயர் பெற்றது. இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் கடம்பவனநாதர். கோவில்மரம் கடம்பு. எனவே இத்தலம் கடம்பந்துறை எனப்பெயர் பெற்று நாளடைவில் கடம்பர் கோவில் என வழங்கப் படுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவி முற்றிலா முலையாள், வடக்கு நோக்கிய சந்நிதி. கண்ணுவமுனிவர்க்கும் தேவர்களுக்கும் சிவபெருமான் கடம்பமரத்தடியில் காட்சி கொடுத்தருளினன், இத்திருத்தலம் திருநாவுக்கரசர் பாடல்பெற்ற மகிமையுடையது.

"பூமென் கோதை உமையொரு பாகனை
ஓமஞ் செய்தும் உணர்மின்கள் உள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாமம் ஏத்தநந் தீவினை நாசமே"

# 18 கடம்பூர்

இத்திருத்தலம் தென்னார்க்காடு மாவட்டத்தில் காட்டு மன்னார்குடியிலிருந்து 4 கி.மீ. தொலைவிலும் சிதம்பரம் இரயில் நிலையத்திலிருந்து 20 கி. மீ. தொலைவிலும் இருக்கின்றது.

## தலவரலாறு :

கடம்ப மரம் காரணமாக இத்தலம் கடம்பூர் என்று பெயர் பெற்றுள்ளது. இறைவன் அமுதகடேசர், இறைவி சோதி மின்னம்மை. இங்குள்ள திருக்கோவிலுக்குக்

'கரக்கோயில்' என்று பெயர். இத்தலம் வானவர்கோன் வழிபட்டு அமுதம் உண்டாகும்படி வரம்பெற்ற பெருமை யுடையது.

இத்தலத்தைத் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடியுள்ளனர்.

''தண்புனல் நீள்வயல் தோறுந்தாமரை மேலனம் வைகக்
கண்புணர் காவில்வண் டேறக் கள்ளவிழுங்கடம் பூரில்
பெண்புனை கூறுடை யானைப் பின்னு சடைப்பெரு மானனைப்
பண்புனை பாடல் பயில்வார் பாவமி லாதவர் தாமே''

என்ற திருஞானசம்பந்தர் தேவாரப் பாமாலையும்,

''பண்ணி னார்மறை பல்பல பூசனை
மண்ணி னார்செய்வ தன்றியும் வைகலும்
விண்ணி னார்கள் வியக்கப் படுவன
கண்ணி னார்கடம் பூர்க்கரக் கோயிலே''

என்ற திருநாவுக்கரசர் தேவாரப் பாமாலையும் ஓதி இன்புறத் தக்கவை.

# 19 கடலூர்

இத்திருத்தலம் கூடலையாற்றுவார் என்றும் வழங்கப் படும்: நடுநாட்டிலுள்ள திருந்தலங்களில் ஒன்றாகும் தென்னார்க்காடு மாவட்டத்தில் விருத்தாசலம் இரயில் நிலையத்திலிருந்து சுமார் 18கி.மி. தொலைவிலும் சிதம்பரம் இரயில் நிலையத்திலிருந்து குமரக்குடி வழியாக 20 கி.மீ. தொலைவிலும் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

மணிமுத்தா ஆறும் வெள்ளாறும் கூடுமிடத்தில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. இரண்டு ஆறுகள் கூடுமிடம் கூடல் எனப்படும். அதனருகில் அமைந்ததலம் கூடலூர்' கூடலூர் என்ற பெயரே நாளடைவில் கடலூர் ஆயிற்று.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் நெறி காட்டு நாயகர் இறைவி புரிகுழல் நாயகி. சுந்தரர் பாடல் பெற்ற சிறப்புடையது இத்தலம். சுந்தரர் கும்பகோணத்தையடுத்த திருப்புறம் பயத்திலிருந்து விருத்தாசலத்திற்குச் செல்ல இவ்வழியாக வந்தபொழுது வழியில் ஓர் அந்தணரைக் கண்டார். அவரிடம் சுந்தரர் விருத்தாசலத்துக்குச் செல்ல வழிகேட்டபோது அவர் இந்தக் கூடலையாற்றுார் வழியாகத் தான் செல்ல வேண்டும் என வழிகாட்டிச்சென்று இங்கு வந்தவுடன் மறைந்து விட்டார். அவ்வந்தணர் இறைவன் என்பதை உணர்ந்த சுந்தரர் இந்தலத்து இறைவன் மீது பதிகம்பாடி வழிபட்டுத் தங்கிப் பின்பு விருந்தாசலம் சென்றார்.

''மழைநுழை மதியமொடு வாளர வஞ்சடைமேல்
இழைநுழை துகிலல்குல் ஏந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக்கூடலை யாற்றுாரில்
அழகனிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே''

என்னும் சுந்தரர் தேவாரப் பாமாலை ஓதி இன்புறத் தக்கது.

# 20 கடிகாசலம்

வடார்க்காடு மாவட்டத்தில் திருத்தணி - சித்தூர் நெடுஞ்சாலையில் இத்திருப்பதி திகழ்கின்றது. சென்னை மாநகரிலிருந்து அரக்கோணம்வரை இரயிலில் சென்று அங்கிருந்து பேருந்தில் செல்வது இத்திருப்பதியை அடைவதற்குரிய எளியவழி.

## தல வரலாறு :

இத்தலம் வைணவத் திருப்பதி. ஆழ்வார்கள் 'கடிகை' என்றே மங்களாசாசனம் செய்துள்ளனர். 'கடிகை' என்றசொல் 'நாழிகை' என்று பொருள் பெறும் எம்பொருமான் சேவை சாதிக்கும் கோவில் சுமார் 400 அடி உயரமுள்ள மலைமேம் விளங்குகின்றது. சலம் என்பதற்கு மலை என்று பொருள். மலைமேல் எம்பெருமான் சேவை சாதிக்கும் இத்திருப்பதியில் ஒரு நாழிகை நேரம் தங்கியிருந்தாலே முக்தி கிடைக்கும் என்பது அன்பர்களின் நம்பிக்கை எனவே இத்திருப்பதி கடிகாசலம் என்று வழங்கப் பெறுகின்றது. இக்காலத்தில் இத்திருப்பதி சோளிங்கர் என்றும்வழங்குகின்றது. சோழர் சிங்கபுரம் என்ற பெயரின் சுருக்கமே சோளிங்கர் ஆகும்.

## தல மகிமைகள் :

இத்திருப்பதியில் உலகளந்த பெருமாள் அர்ச்சாவதார வடிவமுடன் கிழக்கே வீற்றிருக்கும் கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் அமிர்தவல்லி. தீர்த்தம் அமிர்தத்தீர்த்தம் திருமங்கையாழ்வாரும் பேயாழ்வாரும் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

திருமங்கையாழ்வார்,

மிக்கானை மறையாய் விரித்த விளக்கை என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன்மலையை
தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே''

என மங்களாசாசனம் செய்துள்ள பாமாலையும் பேயாழ்வார்,

பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல் - வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன் றன்விண் ணகர்''

என மங்களாசாசனம் செய்துள்ள பாமாலையும் நாளும் ஓதத் தக்கவை.

# 21 கபிதலம்

இது வைணவத்திருப்பதி. இத்திருப்பதி தஞ்சாவூர் மாவட்டத்தில் மயிலாடுதுறை - திருச்சிராப்பள்ளி இரயில் பாதையில் பாபநாசம் இரயில் நிலையத்திலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

## பதி வரலாறு :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் கவிக்குல நாயகனாகிய அனுமனுக்குச் சேவை சாதித்தமையால் இப்பதி கவித்தலம் என்ப்பெயர்பெற்று நாளடைவில் கபிதலம் ஆயிற்று. கபி - குரங்கு (அனுமன்) கபிக்கு எம்பெருமான் அருள்புரிந்த இடமாதலால் கபிதலம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எம்பெருமான் கஜேந்திரனுக்குக் காட்சி தந்தமையால் கஜேந்திரவரதன் எனப் போற்றப் பெறுகின்றார், திருக்கோவிலில் எம்பெருமான் கிடந்த திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார். தாயார் இரமாமணிவல்லி, இப்பதியின் தீர்த்தம் கபில தீர்த்தம்.

திருமழிசையாழ்வார் இப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளார்.

தானொருவ னாகித் தரணி யிடந்தெடுத்து
ஏன்ஒருவ னாய்எயிற்றில்தாங்கியதும்-யானொருவன்
இன்றா அறிகின்றேன் அல்லேன் இருநிலத்தைச்
சென்றாங் கடிப்படுத்த ரேய்"

என நான்முகன் திருவந்தாதியில் வரும் பாமாலை ஓதின் புறத் தக்கது,

# 22 கரம்பனூர்

இது வைணவத் திருப்பதி, கதம்பனூர் என்பதே நாளடைவில் கரம்பனூர் ஆயிற்று. இத்திருப்பதி திருச்சி ராப்பள்ளி மாவட்டத்தில்திருச்சிராப்பள்ளி சேலம் பெருஞ் சாலையில் திருச்சிராப்பள்ளிக் கோட்டை இரயில் நிலையத் திலிருந்து 8கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

## பதி வரலாறு :

இப்பதியில் சேவை சாதிக்கும் எம்பெமான் கதம்ப முனிவருக்குச் சேவைசாதித்தமையால் கதம்பனூர் எனப்

பெயர் பெற்றது. அப்பெயரே நாளடைவில் கரம்பனூார் ஆயிற்று.

உத்தமர்கோவில் என்றும் இத்திருப்பதி வழங்கப்பெறும் இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் புருடோத்தமன் இப்பெருமான் 'உத்தமன்' என்றும் போற்றப்பெறுவான். அதனால் இப்பதி உத்தமர்கோவில் என்றும் பெயர் பெற்றுள்ளது.

## பதியின் மகிமைகள் :

மார்க்கண்டேயர், சனகர், சதாநந்தர், சனத்குமாரர், திக்குப்பாலகர், கருடன் ஆகியோர் தவம்புரிந்து எம்பெருமான் சேவை பெற்ற திருப்பதி இது. தீர்த்தம் கதம்பத் தீர்த்தம். பதிவிருட்சம் கதலீ.

திருமங்கையாழ்வார் இப்பதியை மங்களா சாசனம் செய்துள்ளார்.

''பேரானைக் குறுங்குடியெம் பெருமானை திருத் தண்கால்
ஊரானைக் கரம்பனூார் உத்தமனை முத்திலங்கு
காரார்தின் கடலேழு மலையேழிவ் வுலகேழுண்டு
ஆராதென் றிருந்தானைக்கண்டதுதென்னரங்கத்தே

என்ற பாமாலை ஓதத் தக்கது.

# 23 கரூர்

சைவத்திருத்தலமாகவும் வைணவத்திருப்பதியாக இத்திருத்தலம் திகழ்கின்றது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் மேல்கோடியில் அமராவதி ஆற்றின்கரையில் இத்திருத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு :

இத்தலத்தில் காமதேனு வழிபட்டுப் படைத்தல் தொழில்புரிய வரம்பெற்று அனைத்தையும் படைத்தது அதனால் இத்தலம் கருவூர் எனப்பெயர் பெற்றது. கருவூர் என்பதே நாளடைவில் கரூர் ஆயிற்று.

## தலத்தின் மகிமைகள் :

தமிழ்நாட்டில் வேறு எந்தத் தலத்திற்கும் இல்லாத மகிமை கரூருக்கு உண்டு. அம்மகிமை பஞ்சலிங்கத்தலமாக விளங்குவதே! பஞ்சலிங்கங்களாவன: பசுபதிலிங்கம், வஞ்சுளேசுரலிங்கம், கோடீச்சுரலிங்கம், கைலாயநாதலிங்கம், கரியமாலீசர்லிங்கம் ஆகும்.

இத்தலத்தில் ஆனிலையப்பர் கோவில், பெருமாள் கோவில், மாரியம்மன் கோவில், வஞ்சியம்மன் கோவில், காமாட்சியம்மன் கோவில், கன்னிகாபரமேஸ்வரி கோவில், எனப்பல கோவில்கள் உள்ளன,

இத்தலத்தில் ஐந்து தீர்த்தங்கள் உள்ளன. அவை அமராவதிதீர்த்தம், பிரமதீர்த்தம், தாடகைதீர்த்தம் முருக தீர்த்தம்' அரசதீர்த்தம்.

திருவிசைப்பா அருளிய கருவூர்தேவர், எறிபத்த நாயனார், சிவகாமியாண்டார். புகழ்ச்சோழநாயனார் ஆகியோர் இத்தலத்தில் தோன்றி முத்திஅடைந்தவர்கள்,

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில் இத்திருத்தலம் வித்துவக்கோடு எனப்போற்றப் பெறுகின்றது: குலசேகர ஆழ்வார் உலகளந்த பெருமாளைப் பத்துப் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார்.

தருதுயரம் தடாயேல்உன்
சரணல்லால் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில் சூழ்
விற்றுவக்கோட் டம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய்
அகற்றிடினும் மற்றவள்தன்
அருள் நினைந்தே யழும்குழவி
அதுவேபோன் றிருந்தேனே"

என்ற பாசுரம் நாளும் ஓதி இன்புறத்தக்கது.

திருஞானசம்பந்தர் இத்திருத்தலத்தைப் பாடியுள்ளார்.

விண்ணு லாமதி சூடி வேதமே
பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூரு ளானிலை
அண்ண லாரடி யார்க்கு நல்லரே"

என்ற பாமாலை நாளும் பாடி மகிழ்த்தக்கது.

# 24 கழுகு மலை

அருள் கொழிக்கும் முருகன் திருத்தலக்களில் ஒன்று கழுகுமலை. இத்தலம் திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலியிலிருந்து சுமார் 28கி.மீ. தொலைவில் இருக்கின்றது. சங்கரநயினார் கோவிலிருத்தும் இராசபாளையத்திலிருந்தும் பேருந்தின்மூலம் செல்லாம்.

## தல வரலாறு :

குருகுமலை என்பதே நாளடைவில் கழுகுமலை ஆயிற்று என்பர். இத்திருத்தலம் மலைகளால் சூழ்ப்பெற்று

இயற்கை எழிற்கோலம் கொண்டுள்ளது. திருக்கோவில் மலையடிவாரத்தில் அமைந்துள்ளது. திருக்கோவில் பெரியதாகவும் பேரழகு வாய்ததாகவும் திகழ்கின்றது. திருக்கோவில் முன்னர் திருக்குளம்அமைந்துள்ளது. இக்குளத்தில் நீராடிய பின்னரே கோவிலுக்குச் செல்லவேண்டும் என்பது முறையாகும்.

## தலத்தின் மகிமைகள் :

திருச்செந்தூர் செந்தில்நாதனின் பிரதிபிம்பமோ எனக்காண்போர் யாவரும் வியக்கும்வண்ணம் இத்தலத்தில் முருகப்பெருமான் காட்சி தருகின்றார். இத்தலத்திலும் செந்தில் பதியைப் போன்று இலை விபூதி பிரசாதம் வழங்கப்பட்டு வருகின்றது.

அருணகிரிநாதர் இத்திருத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

ஓங்க லையெ பெரிய சோங்கு தகர வகர
மோங்கு ததியின் முழுகும் பொருசூரும்
ஒப்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகுமலையில்
ஊர்ந்து மயில் துலவுஞ் தனிவேலா
வேங்கை அடவி மறவர் ஏங்க வனிதை உருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா
வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி னுதவும் பெருமாளே''

என்ற இத்தலம் பற்றிய திருப்புகழ் ஓதி மகிழத்தக்கது.

## நாட்டுப்புறப் பாடல் :

''கழுகுமலைக் கந்தரோட — நான்
பட்ட கவலைகளைச் சொன்னமின்னா
கல்லுச்சிலை அசையும்''

என்பது இத்தலத்து முருகப்பெருமானின் சிறப்பை வெளிப் படுத்தும் நாட்டுப்புறப் பாடலடியாகும்.

# 25 காஞ்சிபுரம்

சென்னை மாநகருக்குத் தென்மேற்கே சுமார் 58கி.மீ. தொலைவில் செங்கல்பட்டு மாவட்டத்தில் இத்திருத்தலம் திகழ்கின்றது. வைதிகச் சமயங்களோடு பௌத்த சமண சமயங்களும் இந்நகரில் சிறந்து விளங்கியதாக வரலாறு பகர்கின்றது.

## தல வரலாறு :

,,மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையால் தொடங்கி னர்க்கோர்
வார்த்தை சொலச்சற்குருவும் வாய்க்கும் பராபரமே

என்ற தாயுமானவர் திருவாக்கிற்கு ஏற்ப இத்தலம் மூர்த்தி தலம் தீர்த்தங்களால் சிறந்து விளங்குகின்றது.

## முத்தி தரும் தலம் :

முத்தி அளிக்கும் தலங்கள் ஏழு, அவை மதுரா, மாயா, காசி, காஞ்சி, அவந்திகா, பூரி, துவாரகை என்பன. இவ்வேழு தலங்களில் ஆறு தலங்கள் வடநாட்டில் அமைந் துள்ளன. தென்னாட்டில் காஞ்சிபுரம் விளங்குகின்றது. முத்தித் தலங்கள் ஏழனுள் பெருஞ்சிறப்புடையது காஞ்சி புரம். அதனால்தான் ''முத்திதரும் நகர் ஏழுள் முக்கிய மாம் காஞ்சி'' எனப் போற்றப் பெறுகின்றது. வடமொழி யில் ''நகரேசு காஞ்சி'' எனப் போற்றப் பெறுகின்றது.

## பிரதி வித்தலல் :

சைவ சமய ஆகம விதியின்படி தென்னாட்டில் ஐந்து சிவலிங்கத் தலங்கள் உள்ளன. அவை பிருதிவி (மண்) 2. அப்பு (நீர்) 3. தேஜஸ் (தீ) 4. வாயு (காற்று) 5. ஆகாயம் இவை முறையே காஞ்சிபுரம், திருவானைக்கா திருவண்ணா மலை, திருக்காளத்தி சிதம்பரம் ஆகும். இவ்வைந்து தலங்களும் பஞ்சபூதத் தலங்கள் எனப் போற்றப் பெறுகின்றன. இவ்வைந்தில் சத்தித் தன்மை வாய்ந்த பிருதிவித்தலமாகக் காஞ்சிபுரம் திகழ்கின்றது. இங்கே இறைவனுக்குப் புனுகுச்சட்டத்தையும் சார்த்துகிறார்கள் !

பிருதிவி என்பது மண். இந்நாளிலும் ஏகாம்பரநாதர் கருவறையில் புற்று வடிவாக விளங்குகின்றார். இவரைத் திங்கட்கிழமை வழி படுவது மிகச்சிறப்புடையது. அப்போது மூலட்டானப் பெருமான் இறைவியார் தம்மைத் தழுவும் கோலத்தில் காட்சி அளிப்பார் !

## 15 நாமங்கள் :

இத்திருத்தலம் காஞ்சிபுரம், பிரளயசித்து சிவபுரம், விண்டுபுரம், மும்மூர்த்தி வாசம், பிரமபுரம், காமபீடம், தபோ மயம், சகலசித்தி, கன்னிகாப்பு, துண்டீரபுரம், தண்டகபுரம், காஞ்சினபுரம், கச்சி, சத்திய விரதரேத்திரம் ஆகிய 15 நாமங்களைப் பெற்றுள்ளது.

## காஞ்சிபுரம் :

இப்பெயரை க—அஞ்சி—புரம் எனப்பிரிக்கலாம். 'க' என்பது பிரமதேவன் என்று பொருளாகும். அஞ்சி என்பது வழிபடுதலாகும். பிரமதேவனால் விரும்பி வழிபடப்பெற்ற தலமாதலால் காஞ்சிபுரம் ஆயிற்று.

'க' என்பது தலைமை. அஞ்சி என்பது வழிபடுதல் வழிபடுவோருக்குத் தலைமை இன்பத்தைத்தருவது எனவே காஞ்சி ஆயிற்று

## வரலாற்றில் காஞ்சிபுரம் :

தமிழநாட்டு வரலாற்றில்காஞ்சிபுரம் மிகச்சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. கரிகாலன் இமயம் செல்லும் பொழுது இம்மாநகரின் பெருமையை அறிந்து தனதாக்கி, மக்களைக் குடியேற்றிநான்கு காததூரம் சுற்றெல்லை யுடைதாகநகரை விரிவுப் படுத்தினான் என்பதைத் திருக் குறிப்புத்தொண்ட நாயனார் புராணம் குறிப்பிடுகின்றது.

''என்றும் உள்ளஇந் நகர்கலி யுகத்தில்
இலங்கு வேற்கரி கால்பெரு வளத்தோன்
வன்தி றற்புலி இமயமால் வரைமேல்
வைக்க ஏகுவோன் தனக்கிதன் வளமை
சென்று வேடன்முன் கண்டுரை செய்யத்
திருந்து காதநான் குட்பட வகுத்துக்
குன்று போலுமா மதில்புடை போக்கிக்
குடியி ருத்தின கொள்கையின் விளங்கும்''

கரிகால் பெருவளத்தான் சாத்தன் அருளால் காஞ்சி புரத்தில் செண்டு பெற்றான் என்பதையும் அச்செண்டு கொண்டு இமயத்தைச் செண்டால் அடித்தான் என்பதை யும் சிலப்பதிகார இந்திரவிழவூர் எடுத்த காதையின் உரைமேற்கோள் பாடல கூறுகின்றது:

கச்சி வளைக்கச்சி காமக்கோட் டங்காவல்
மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன் - கைச்செண்டு
கம்பக் களிற்றுக் கரிகால் பெருவளத்தான்
செம்பொற் கிரிதிரித்த செண்டு!

மரங்கள் அடர்ந்த சோலைகளையும் தேர்ஓடும் தெருக்களையும் வலிமைவாய்ந்த படையினையும் பண்டங்கள் நிறைந்த கடைகளையும் பரிசிலர்க்கு அடையாத வாயிலினையும் செங்கற்களால் செய்யப் பெற்று உயர்ந்த புறப்டடை வீட்டைச் சூழ்ந்த மதிலினையும் பல சமயத்தாரும் தொழும்படி எடுத்த விழாக்களாலே ஏனைநகர்களின் மேலான வெற்றியினையும் கொண்டு விளங்குகின்றது மூதூர்கச்சி என்னும் செய்திகளைப் பெரும்பாணாற்றுப் படை வழங்குகின்றது.

கி.பி. 640 - இல் காஞ்சிபுரத்திற்கு வந்தயுவான் சுவாங் என்னும் சீனயாத்திரிகர் ''புத்தர் கி.மு. 5 - ஆம் நூற்றால் காஞ்சிபுரத்திற்கு வந்து சமய உண்மைகளையுரைத்தார் என்றும் அசோகர் தூபிகள் பல எடுப்பித்துப் பௌத்தமத கொள்கைகளைப் பரப்பினார்'' என்றும் குறித்துள்ளார்.

வடநாட்டிலிருந்த நாலந்தாப் பல்கலைக் கழகத்தில் சிறந்த பேராசிரியராகத் திகழ்ந்த தின்னாகர், தர்மபாலர் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர்கள் என்பர்.

கி.பி. 4,5 - ஆம் நூற்றாண்டுகளில் காஞ்சிபுரத்தில் ஒரு வடமொழிக் கல்லூரி இருந்தது. கதம்ப அரசர் மரபைத் தோற்றுவித்த மயூரசன்மன் காஞ்சியில் இருந்த வடமொழிக் கல்லூரியில் படித்ததாகக் கூறுவர்.

கி.பி. 6 - நூற்றாண்டில் வடஇந்தியாவில் குப்த பேரசின் பொற்காலக் கவிஞர்களில் ஒருவரான காளிதாசர் காஞ்சிமாநகரின் முதன்மையை 'நகரேசு காஞ்சி' எனப் பாராட்டியுள்ளார்.

கி.பி. 615 - 630 - இல் முதலாம் மகேந்திரன் காஞ்சியை ஆண்டான். இவன் சமண சமயத்தவன். அக்காலத்தில் மருள்நீக்கியார் சமணத்தில் ஈடுபட்டுத் தருமசேனர்

பட்டம் பெற்றிருந்தார். சிவனருளால்சைவம் சார்ந்தார். சமணர்கள் மகேந்திரனைக் கொண்டு பல தீங்குகள் விளை வித்தனர். அவற்றையெல்லாம் மருள்நீக்கியார் வென்றார். அவர் பெருமை அறிந்த பல்லவ மன்னனும் சைவம் சார்ந் தான். சமணப் பள்ளிகளை இடித்துத் திருவதிகையில் குணதர வீச்சரம் எனும் கோவிலைக் கட்டினான்.

கி.பி 630 - 668 இல் முதலாம் மகேந்திரனின்மகன் முதலாம் நரசிம்மவர்மன் காஞ்சியை ஆண்டான். இவன் காலத்தில்தான் இவனது படைத்தலைவர் பரஞ்சோதியார் மேலைச் சாளுக்கியரோடு பெரும்போர் புரிந்து இரண்டாம் புலிகேசியை வென்று வாதாபியைக் கைப்பற்றியதாக வரலாறு

கி.பி. 670 - 685 - இல் காஞ்சியை ஆண்டவன் முத லாம் நரசிம்மவர்மனின் பேரன் பரமேசுவரவர்மன், இவன் சிறந்தபரமசிவபக்தன்எனவேபலசிவன்கோவில்களைக்கட்டி காஞ்சியைக்கலை நகராக்கினான்!

கி.பி. 685 - 705 - இல் பரமேசுவர வர்மனுடைய மகன் இராசசிம்மன் காஞ்சியை ஆண்டான். இவனே கயிலாசநாதர் கோவிலைக் கட்டியவன் இக்கோவில் பல்ல வர்களின் சிற்பக்கலையை உலகிற்கு உணர்த்தும் உன்னதக் கலைக்கூடமாகத் திகழ்கின்றது!

கி.பி. 825 - 850 - இல் மூன்றாம் நந்திவர்மன் காஞ்சியை ஆண்டான். இவன் கோவில் திருப்பணிகள் பல செய்ததாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

பல்லவ மன்னர்களுக்குப் பிறகு பிற்காலச்சோழர் களும் விஜயநகர மன்னர்களும் மதுரைநாயக்கர்களும்

காஞ்சிமாநகரைப் போற்றி வளர்த்தனர். கிருஷ்ணதேவ ராயர் ஒன்பது மாடங்கள் கொண்ட 192 அடி உயரமுள்ள தென்கோபுர வாயிலைக் கி.பி' 1509 - இல் கட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது!

ஆங்கிலேயர் காலத்தில் வள்ளல் பச்சையப்பர் மண்டபம் எழுந்தது!

## உந்திச்சுழி :

உலகத்திற்கும் பாரதநாட்டிற்கும் காஞ்சிபுரம் உந்திச்சுழியாக இடையாகக் கூறப்படுகின்றது. இவ்வுண்மையை,

''ஏரிஇரண்டும் சிறகா எயில் வயிறாக்
காருடைய பீலி கடிகாவா - நீர்வண்ணன்
அத்தியூர் வாயா அணிமயில் போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு''

என்ற பாடல் உணர்த்துகின்றது.

உலகு 360 பாகை (டிகிரி) ஆகும். கிரீன்விச் என்பது தொடக்கம். இது பிரிட்டனில் உள்ளது. இது தலையாகவும் 180 பாகை கிழக்கில் பசிபிக் மகா சமுத்திரம் வரையில் படுக்கை நிலையில் முகப்பக்கமாகவும் இதுபோல் 0 பாகை முதல் 180 பாகைவரை முதுகுப் புறமாகவும் கொண்டு பார்த்தால் காஞ்சி உந்திச்சுழியாகவே விளங்குகின்றது.

கயிலாயம் 31 பாகை பூமத்தியிலிருந்து உள்ளது. அதிலிருந்துப் பார்த்தாலும் காஞ்சி உந்திச்சுழியாகவே திகழ்கின்றது.

பூமத்திய ரேகையைப் பாதிபாகையால் இடுப்பாகக் கொண்டு பார்த்தாலும் காஞ்சி கொப்பூழ் எனப்படும்

உந்திச் சுழியாகவே விளங்குகின்றது என விளக்கம் அளிப்பர் திரு. அ. அறிவொளி அவர்கள்.

## பாடல்பெற்ற தலங்கள் :

108 சிவ தல்ங்களும் 18 வைணவப் பதிகளும் காஞ்சி புரத்தில் உள்ளன. கச்சி ஏகம்பம், கச்சி மேற்றளி திருவோண காந்தன் தளி, திரு அனேகதங்காவதம், திருக்கச்சி நெறிக் காரைக்காடு ஆகியதலங்கள் நாயன்மார்கள் பாடல் பெற்ற தலங்களாகும்.

## மங்களாசாசனம் செய்யப் பெற்ற பதிகள் :

அஷ்ட புஜப் பெருமாள் கோவில். வரதராஜப் பெருமாள் கோவில். உலகளந்த பெருமாள் கோவில், விளக்கொளிப்பெருமாள் கோவில், வைகுந்தப்பெருமாள் கோவில் பவள வண்ணர்கோவில், பாண்டவ தூதப் பெருமாள் கோவில்; சொன்ன வண்ணம் செய்தார் கோவில், முகுந்த நாயகர் கோவில் முதலியவை ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருப்பதிகள் ஆகும்.

## கச்சி ஏகம்பம் :

இத்திருக்கோவில் காஞ்சிபுரம் இரயில் நிலையத்திலிருந்து சுமார் இரண்டரை கி. மீ. தொலைவிலுல் பேருந்து நிலையத்திலிருந்து ஒன்றரை கி. மீ. தொலைவிலும் இருக்கின்றது.

ஏகம்பம் என்பது கோவிலின் பெயர். கம்பம் என்றால் நடுக்கம் என்று பொருள். இறைவி கயிலையில் இறைவனோடு வீற்றிருந்தார். அப்போது விளையாட்டாக அவர் இறைவனின் கண்களை மூடினார். அதனால் உலகமே

இருண்டுப் போயிற்று, உலக உயிர்கள் அனைத்தும் மிகுந்த துன்பத்திற்குள்ளாயின. இதனால் இறைவிக்குப் பழிச்சொல் வந்தது, அப்பழிச்சொல் தீர்வதற்குக் காஞ்சிக்குச் சென்று தம்மை வழிபடுமாறு இறைவன் ஆணையிட்டார். அதன்படி இறைவி காஞ்சிக்கு எழுந்தருளி இறைவரிடம் இருநாழி நெல் பெற்று முப்பத்திரண்டு அறங்களைச் செய்து கொண்டும் தவத்தை மேற்கொண்டும் வந்தார். இறைவியினுடைய உண்மை அன்பினை அறிவதற்காக இறைவன் தமது கங்கை ஆற்றைக் கம்பாநதியாக வருமாறும் தம்மை அடித்துக்கொண்டு போமாறும் பணித்தார். அவ்வாறேகங்கை ஆறாக ஓடி வருவதைக்கண்ட காமாட்சியம்மையார் கம்பித்து-நடுங்கி-இறைவரைத் தமது வளையல் தழும்பும் முலைத்தழும்பும் பதியுமாறு தழுவிக்கொண்டார். இந்நிகழ்ச்சியின் போது இறைவி கம்பித்ததனால் இத்தலம் கம்பம் எனப்பெயர் பெற்றது.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் ஏகாம்பரர் ஏகம் என்றால் ஒன்று எனப்பொருள் பெறும், ஆம்ரம் என்ற வடசொல் மாமரம் எனப்படும். ஏகம் — ஆம்ரம் — ஏகாம்பரம் ஆயிற்று. மாமரத்தைத் தல விருட்சமாகக் கொண்டிருப்பதாலும் இங்குள்ள சிவபெருமான் ஒன்றை மாமரத்தின் அடியில் எழுந்தருளியிருப்பதாலும் ஏகாம்பரர் ஆனார், இத்தலம் ஏகாம்பரம் ஆயிற்று என்பதே நாளடைவில் ஏகம்பம் ஆயிற்று என்றும் கூறுவர்.

> ''எண்டிசையோரும் நின்றேத்த நின்ற ஏகம்பம்''
> ''தேசமெல்லாம்புகழ்ந்தேத்தும் கச்சித்திருஏகம்பம்''

என்றும் இத்தலம் போற்றப் பெறும்

கோவில் ஐந்து பிரகாரங்களைக் கொண்டுள்ளது. ஆயிரக்கால் மண்டபம் இருக்கின்றது. கோவிலிலுள்ள மாமரம் மிகப்பெரியது. இறைவன் ஒன்றை மாமரத்தின்

அடியில் எழுந்தருளியிருக்கின்றார். மாமரம் நான்கு வேதங்களை நான்கு கிளைகளாகக் கொண்டுள்ளது.

நான்கு கிளைகளிலும் முறையேஇனிப்பு, புளிப்பு, துவர்ப்பு கார்ப்பு ஆகிய நான்குவகைச் சுவைக்கனிகளும் காய்ப்பது இதன் தனிச்சிறப்பாகும்.

உமாதேவியாருக்கு இம்மாமரத்தின் அடியில் தான் இறைவன் திருக்காட்சி நல்கினார். இம்மாரத்தின் அடியிலிருந்தே கச்சியப்பசிவாச்சாரியார்கந்தபுராணம் பாடினார் என்பர்.

108 சிவலிங்கங்கள் கொண்ட ஓரே சிவலிங்கமும் 1008 சிவலிங்கங்கள் கொண்ட ஓரே சிவலிங்கமும் இங்குதான் இருக்கின்றன.

மாமரத்தின் அருகில் ஏகாம்பரநாதரின் உற்சவ மூர்த்தி விளங்குகின்றது. மாமரத்திற்கு மற்றொரு பக்கத்தில் ஏலவார்குழலி அம்மையாரின் உற்சவத்திருவுருவம் திகழ்கின்றது.

ஏகாம்பரநாதர் கோவிலுக்குள் வேறு மூலட்டான அம்மையார் திருவுருவம் இல்லை. ஏலவார் குழலியின் உற்சவ மூர்த்தமே மூலட்டான மூர்த்தமாகக் கொண்டு வணங்கவேண்டும். காமாட்சி அம்மையார் தனியாகக் கோவில் கொண்டு விளங்கும் அம்மன் சந்நிதியைத் தவிர பிற ஆலயங்களில் அம்மன் சந்நிதி இல்லை.

கோவில் கோபுர வாயிலைக் கடந்து சென்றதும் இடப்பக்கத்தில் ஒரு குளம் உள்ளது. அதுவே கம்பாநதி.

கோவிலுக்குள் அறுபத்துமூவர் பிராகாரத்தில்நிலாத் திங்கள் துண்டம்'' என்ற பாடல்பெற்ற வைணவத்திருப்பதி

விளங்குகின்றது. திருமாலின் பெயர் நிலாத்திங்கள் துண்டத்தான். பிராட்டியார் நேர் ஒருவர் இல்லா வல்லி! எம்பெருமான் மேற்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார், இப்பெருமாளைத் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

''நீரகத்தாய் நெடுவரையின் உச்சி மேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய் நிறைந்தகச்சி
ஊரகத்தாய் ஒண்துறைநீர் வெஃகா உள்ளாய்
உள்ளுவார் உள்ளத்தாய் உலகம் ஏத்தும்
காரகத்தாய் கார்வானத் துள்ளாய் கள்வா
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய் பேராதுஎன் நெஞ்சின் உள்ளாய்
பெருமான்உன் திருவடியே பேணினேனே''

கோவிலில் பிரமன் பூசித்த வெள்ளக் கம்பர் மாயவன் பூசித்த கள்ளக் கம்பர், உருத்திரன் பூசித்த நல்லக் கம்பர் ஆகிய இலிங்க மூர்த்திகள் இருக்கின்றன. விகடச் சக்கர விநாயகர் தெற்குத் திருவாயிலில் ஆயிரக்கால் மண்டபத்திற்கு முன்னால் எழுந்தருளியிருக்கின்றார்!

ஐயடிகள் காடவர்கோன், திருக்குறிப்புத் தொண்ட நாயனார், சாக்கிய நாயனார் ஆகியோர் இத்தலத்தில் வழிபட்டு இறையருள் பெற்றனர். திருவொற்றியூரில் கண் இழந்த சுந்தரர் இங்குப் பதிகம்பாடி இடக்கண் பெற்றார்.

## நால்வர் பாமாலை :

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்க வாசகர் ஆகிய சைவ சமயக் குரவர் நால்வர் பாடல் பெற்ற சிறப்புடையது திருக்கச்சி ஏகம்பம்.

வெந்தவெண் பொடிப் பூசு மார்பின்விரி
நூலொருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலி யோடுங் கடிபொழில்
கச்சி தன்னுள்
அந்தமில் குணத்தா ரவர்போற்ற
அணங்கினொ டாடல்புரி
எந்தை மேவிய ஏகம்பந்
தொழுதேத்த இடர்கெடுமே''

என்ற திருஞானசம்பந்தர் தேவாரமும்,

நம்பனை நகர மூன்றும்
எரியுண வெருவ நோக்கும்
அம்பனை அமுதை யாற்றை
அணிபொழிற் கச்சி யுள்ளே
கம்பனைக் கதிர்வெண் திங்கட்
செஞ்சடைக் கடவுள் தன்னைச்
செம்பொனைப் பவளத் தூணைச்
சிந்தியா எழுகின் றேனே''

என்ற திருநாவுக்கரசர் தேவராப் பாமாலையும்,

திரியும் முப்புரம் தீப்பிழம் பாகச்
செங்கன் மால்விடை மேற்றிகழ் வானைக்
கரியின் ஈருரி போர்த்துகந் தானைக்
காமனைக்கன லாவிழித் தானை
வரிகொள் வெள்வளை யாள்உமைநங்கை
மருவி ஏத்தி வழிபடப் பெற்ற
பெரிய கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே''

என்ற சுந்தரர் தேவாரப் பாமாயையும்;

காசணி மின்கள் உலக்கையெல்லாம்
காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடைய அடியவர்கள்
நின்று நிலாவுக என்று வாழ்த்தி
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி
பாச வினையைப் பறித்து நின்று
பாடிப் பொற்சுண்ணம் இடித்துநாமே

என்ற மாணிக்கவாசகர் திருவாசகப் பாமாலையும் பாடி மகிழத் தக்கவை

செவ்வாய், வெள்ளி, ஞாயிற்றுக்கிழமைகளில் பக்தர்கள் கூட்டம் இத்தலத்தில் நிரம்பிவழிகின்றது. பௌர்ணமியில் நவாரனி வழிபாடும் மாசிமாத பிரம்மோற்சவமும் நவராத்திரி விழாவும் இத்தலத்தில் நிகழும் சிறப்பான திருவிழாக்கள்.

## திருக்கச்சி மேற்றளி :

இக்கோவில் காஞ்சிபுரத்தின் மேற்குப் பகுதியாகிய பிள்ளைப் பாளையத்தில் இருக்கின்றது. தளி என்பது கோவில். இக்கோவில் திருக்கச்சியின் மேற்கே இருப்பதால் திருக்கச்சி மேற்றளி எனப் பெயர்பெற்றுள்ளது.

இத்தல்த்தில் திருமால் சிவசாரூபப் (சிவபெருமானைப் போல உருவம் கொள்ளுதல்) பெற விரும்பித் தவம் மேற்கொண்டார். திருஞானசம்பந்தர் திருப்பாடல்களால் அது கிடைக்குமென்று இறைவன் அருளினார். அதனால் திருமால் இங்கு நெடு நாட்கள் தவம் புரிந்து, திருஞான சம்பந்தர் எழுந்தருளிப்பாடியருளிய திருப்பதிகத்தைக் கேட்டு உருகிச் சிவலிங்க வடிவமானார். இப்படிச் சிவசாரூபம் பெற்ற மூர்த்தியே ஓதவுருகீசர்' சந்நிதி ஆகும்.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருமேற்றளி நாதர் இறைவி காமாட்சியம்மை. தீர்த்தம் விட்டுணு தீர்த்தம்.

திருஞானசம்பந்தருக்கு ஆளுடைய பிள்ளையார் என்ற பெயருமுண்டு. பிள்ளையார் இங்கு எழுந்தருளிப் பதிகம் பாடியதால் இப்பகுதி பிள்ளையார் பாளையம் ஆகிப் பின் பிள்ளைப் பாளையம் என வழங்கி வருகின்றது எனலாம்.

ஓதவுருகீசர் கோவிலுக்குக் கிழக்கே தெருமுனையில் திருஞான சம்பந்தருங்குக்கோவில் இருக்கின்றது. திருஞான சம்பந்தர் பதிகம் பாடினார் என்பது செவிமரபு. அவர் பாடிய பதிகம் எதுவும் கிடைத்திலது. இந்த வரலாற்றுச் செய்தி பெரிய புராணத்தில் குறிக்கப்படவில்லை.

காஞ்சிப் புராணத்தில்,

"தோட்டலங்கலான் தொழப்புகும் முத்தமிழ் விரிகர்
பாட்டலங்கலால் பரஞ்சுடர் திருவுருப் பெற்றான்"

எனவரும் பாடலகடிகளே அதற்குச் சான்றாகும்.

திருநாவுக்கரசர் ஒரு திருப்பதிகமும் சுந்தரர் ஒரு திருப்பதிகமும் இத்தலம் பற்றிப் பாடியுள்ளனர்,

"சோமனை யரவினோடு சூழ்தரக் கங்கைசூடும்
வாமனை வானவர்கள் வலங்கொடு வந்துபோற்றக்
காமனைக் காய்ந்தகண்ணார் காஞ்மா நகர்தன்னுள்ளால்
ஏமநின் றாடுமெந்தை யிலங்குமேற் றளியனாரே"

என்ற. திருநாவுக்கரசர் தேவாரப் பாமாலையும்,

"நிலையாய் நின்னடியே நினைந்தேன் நினைதலுமே
தலைவா நின்னினையப்பணித்தாய் சலமொழிந்தேன்

சிலையார் மாமதில்சூழ் திருமேற்ற ளியுறையும்
மலையே உன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்
டேனே''
என்ற சுந்தரர் பாமாலையும் ஓதி மகிழத் தக்கவை.

## திருவோணகாந்தன்தளி :

இத்தலம் ஏகாம்பரநாதர் திருக்கோவிலுக்குமேற்கே சர்வ தீர்த்தக்குளத்திலிருந்து சிறிது வடமேற்கே அரை க.மீ. தூரத்தில் இருக்கின்றது.

ஓணன், காந்தன் என்னும் இரு அசுரர்கள் வழிபட்ட காரணத்தால் இப்பெயர் பெற்றது இவ்விருஅசுரர்கள் வழிபட்ட தனித்தனி சிவலிங்கங்கள் தனித்தனி சந்நிதிகளாகக்கோவில் விளங்குகின்றன. இறைவர் முறையே ஓணேஸ்வரர், காந்தேஸ்வரர் என்றும் தேவியார் காமாட்சி அம்மையார் என்றும் அழைக்கப் பெறுவர்,

சலந்தரன்இத்தலத்தில்வழிபட்டுமுத்திஅடைந்தான். சுந்தரர் இத்தலத்தைப் போற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார். இத்தலத்து இறைவனைப் பாடியே சுந்தரர் பொன் பெற்றார்.

திங்கள் தங்கு சடைகள் மேலார்
திரைகள் வந்து புரள விசும்
கங்கை யாளேல் வாய்தி றவ்வாள்
கணப தியேல் வயிறு தாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை
தேவி யால்கோன் தட்டி ஆளாள்
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளிஉ ளீரே''
என்பது சுந்தரர் தேவாரப் பாமாலைகளில் ஒன்று.

## திருக்கச்சி அனேகதங்காவதம் :

இத்திருக்கோவில் காஞ்சி ஏகாம்பர நாதர் கோவிலுக்குத் தென்மேற்கே புத்தேறித் தெருவுக்கு மேற்கே வயல் வெளியில் விளங்குகின்றது. காஞ்சிக்கயிலாச நாதர் கோவிலுக்குத் தெற்கில் உள்ளது. இத்தலத்தில் விநாயகர் அனேக பேச்சுரன் என்ற பெயரால் ஒரு சிவலிங்கம் நிறுவி வழிபட்டார் அதனால் அப்பெயர் பெற்றுள்ளது.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் அனேக தங்காவதேஸ்வரர். கல்வெட்டில் அணைய தங்க உடைய நாயனார் எனக் குறிக்கப் பட்டுள்ளார். இறைவி காமாட்சியம்மை.

குபேரன் வழிபட்டு முத்தியடைந்த திருத்தலம் இது. சுந்தரர் தலத்தைப் போற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார்.

கட்டு மயக்கம் அறுத்தவர் கைதொழு
தேத்தும் இடம்கதி ரோன்ஒளியால்
விட்ட இடம் விடை ஊர்தி இடம்குயில்
பேடைதன் சேவலோ டாடும்இடம்
மட்டு மயங்கி அவிழ்ந்த மலர்ஒரு
மாதவி யோடு மணம்புணரும்
அட்டப் புயங்கப் பிரான் திடம்கலிக்
கச்சி அனேகங் காவதமே''

என்பது அவர்தம் பாடல்களுள் ஒன்று.

இத்தலத்தை வழிபடுபவர்கள் அடையும்பேற்றினைக் காஞ்சிபுராணம்.

விநாய கப்பிரான் அருச்சனை புரியவீற்றிருக்கும்
அனேக பேசனை அனேகதங் காவதத்திறைஞ்சின்

இனாத வெந்துயர்ப்பிறவிதீர்ந்தென் ஆள் உடையான்
தனாது வெள்ளியம் கயிலையில் சார்ந்துவைகுவரால்

என நவில்கின்றது.

## திருக்கச்சி நெறிக்காரைக்காடு :

இத்திருத்தலம் காஞ்சிபுரம் ஆட்சன்பேட்டைக் கடைத் தெருவின் வடகிழக்கில் உள்ள வேப்பங்குளத்திற்கு வடக்கே உள்ளது. இக்கோவில் சித்திரபுரம்என்றும்வழங்கப் பெறும். இந்நாளில் இக்கோவில் திருக்காலிச்சுரம் அல்லது திருக்காலீச்சுரர் கோவில்என்று வழங்குகின்றது. காரை மரங்கள் காரணமாக இத்தலம் அப்பெயர் பெற்றுள்ளது.

இத்தலத்து இறைவன் சத்திய வாத நாதேசுவரர். காரைத் திருநாதர் என்றும் வழங்கப் பெறுவர். தேவியார்க் காமாட்சியம்மையார். கல்வெட்டில் இறைவன் திருக்காரை காடுடையார் என்றும் இறைவி காரைக்குடி அம்மை என்றும் குறிக்கப் பட்டுள்ளனர்.

இந்திர தீர்த்தம், காரை தீர்த்தம், சத்திய தீர்த்தம் என்னும் தீர்த்தங்கள் இத்தலத்திற்கு உரியவை. கோவிலுக்குத் தென்பால் வேப்பக்குளம் என்ற நல்ல தண்ணீர்க் குளம் இருக்கின்றது. இந்திரன், புதன் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றனர்.

'சத்திய விரதம்' என இத்திருத்தலத்தைக் காஞ்சிப் புராணம் போற்றுகின்றது. இறைவன் சத்திய சத்தியர், சத்திய சோதகர், சத்திய சங்கற்பர், சத்தியகாமர்எனப்பல நாமங்களால் போற்றப்பெற்றுள்ளார். சத்திய தீர்த்தத்தில் மூழ்கியவர்கள் முக்தி பெறுவர், வேண்டியதை அடைவர். இந்திரபுரம் என்றும் இத்தலத்தைப்போற்றுவர், இங்குள்ள

தீர்த்தத்தில்புதன் கிழமைதோறும் மூழ்கின் பெரும்பயன் உண்டு. இத்தலத்தின் மாண்பினைக் காஞ்சிபுராணம்.

அற்றைநாள் முதல்அச் சூழல்
இந்திர புரமாம் அங்கண்
கற்றைவார் சடையீர் ஓர்கால்
கண்ணுறப் பெற்றோர் தாமும்
வெற்றிவேல் காலன் தன்பால்
விரவிடார் கருவில் எய்தார்
இற்றிதன் பெருமை முற்றும்
யாவரே இயம்ப வல்லார்

என எடுத்துரைக்கின்றது.

இத்தலத்தைப் போற்றித் திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகம் ஒன்றே இருக்கின்றது.

கூறணிந்தார் கொடியிடையைக்
குளிர்சடைமே லிளமதியோ
டாறணிந்தா ராடரவம்
பூண்டுகந்தா ரான்வெள்ளை
ஏறணிந்தார் கொடியதன்மே
லென்பணிந்தார் வரைமார்பில்
நீறணிந்தார் கலிக்கச்சி
நெறிக்காரைக் காட்டாரே

என்பது அவர்தம் பாமாலைகளில் ஒன்று.

## கயிலாய நாதர் கோவில் :

தென்னகத்தின் மிகப் பழைய கோவில்கள், சுதை, செங்கல், மரம் முதலியவற்றால் கட்டப்பட்டிருந்தன. பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் பாறைகளை உட்புற

மாகக் குடைந்து குகைக்கோவில்களைப் புதுமுறையில் அமைத்தான். அவனுடைய மகன் நரசிம்மவர்மன் குகைக் கோவில்களின் வெளிப்புறங்களில் பாறைகளை விமானங் கள் போன்று அமைத்தான். அவனுடைய மகன் இராச சிம்மன் கருங்கற்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிப் புதுமுறையில் கயிலாயநாதர் கோவிலைக் கட்டினான்.

கயிலாயநாதர் கோவில் காஞ்சிபுரத்தின் மேற்கு எல் லையில் வயல்களுக்கிடையே அமைந்துள்ளது. கோவிலுக்கு முன்னால் சுமார் நூறடி தூரத்தில் ஒரு பெரிய கல்நந்தி உயர்ந்த மேடைமேல் கோவிலை நோக்கிய வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது. கருவறையில் பதினாறு பட்டைகள் கொண்ட எட்டடி இலிங்கம் காட்சி தருகின்றது. இலிங்கத் திற்குப் பின்னால் சுவர்ப்புடைச் சிற்பமாகச் சோமாஸ்கந்த மூர்த்தி வீற்றிருந்த கோலத்தில் விளங்குகின்றார். கோவி-லுக்குள் 58 சிறுகோவில்கள்இருப்பதாகக்கூறுவர். பிராகார மண்டபத்தின் மேல் சிவன் கோவில் என்பதற்கு அடையாள மாக யானை இடபம் முதலிய உருவங்கள் இயற்கையாகப் படுத்திருப்பது போல் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இராசசிம்மன் காலத்தில் திருவள்ளூருக்கு ஏழு கல் தொலைவிலுள்ள திருநின்றவூரில் பூசலார் என்ற அந்தணர் ஒருவர் இருந்தார். அவர் மகா சிவபக்தர். தமது ஊரில் சிவபெருமானுக்குக் கோவில் ஒன்று கட்ட எண்ணினார். கற்கோவில் கட்டும் அளவிற்குப் பொருள்வளம் இல்லை. எனவே தம் உள்ளத்தையேகோவிலுக்குரிய இருப்பிடமாக்கி வரைபடம் வரைந்து அதன்படி அழகான ஆலயம் ஒன்றைக் கட்டிமுடித்தார். கோவிலில் இலிங்கப் பிரதிட் டைக்குரிய சுபதினம் ஒன்று குறித்து அந்நாளில் இறைவனை எழுந்தருளுமாறு வேண்டினார்.

இராசசிம்மன் கயிலாயநாதர் கோவிலில் இலிங்கப் பிரதிட்டை செய்வதற்கு அதே நாளைக் குறித்திருந்தான் இறைவன் அம்மன்னன் கனவில்தோன்றி, அன்றையநாளில் நெடுதுநாள் நினைந்து மனத்திலேயே கோவில் கட்டியுள்ள பூசல் நாயனார் கோவிலில்தாம்எழுந்தருளப்போவதாகவும் பிறிதொரு நாள்குறித்துக் கொள்ளும் படியும் கூறினாராம். மன்னன் பூசலாரைக்கண்டுவியந்துஇறைவனுடையபேரருள் கருணையைநினைந்து போற்றியதாகப்பெரிய புராணம் கூறுகின்றது. கோவிலில்இராசசிம்மன் அவன் மனைவி ரங்கபாதை மகன் மூன்றாம் நந்திவர்மன், பிற்காலச்சோழர்கள் பற்றிய கல்வெட்டுகள் உள்ளன.

## வரதராஜப் பெருமாள் கோவில் :

காஞ்சிபுரத்தின் கிழக்கோடியில் இத்திருக்கோவில் விளங்குகின்றது. பேருந்து நிலைத்திலிருந்து 3கி.மீ. தொலைவில் அக்கோவில் இருக்கின்றது.

நான்முகன் தன்னுடைய யோகத்தினால் எம்பெருமானைக் காண முயன்றான். ஒரு வலிய கர்மம் தடை செய்யவே அதனைப் போக்க ஆயிரம் அசுவமேதயாகங்கள் புரியவேண்டும் என்பதை வானொலி மூலமாகஅறிகின்றான். சத்திய விரதம் என்ற தலத்தில் (காஞ்சிபுரத்தில்) செய்யப் பெறும். ஓர் அசுவமேதயாகமே ஆயிரம் அசுவமேதயாகங் களுக்குச்சமம் என்பதைத் தெரிந்துகொண்டு அத்திகிரியை யாகவேதியாக அசுவமேதயாகத்தைச் செய்து முடித்தான். அந்தயாக்குண்டத்தினின்றும் எழுந்த பொன்னாலாகிய மலை போன்ற புண்ணியகோடி விமானத்தில் நித்திய சூரிகளின் தலைவனான வரதராசப் பெருமாள் தோன்றி

நான்முகனுக்குச் சேவை சாதித்தார்.

நான்முகன் வேண்டுகோளுக்கு இணங்க அவனுக்குக் காட்சி கொடுத்த கோலத்திலேயே அங்கேயே தங்கி விடுகின்றார். எம்பெருமான் எம்பெருமானை அத்தியூர் அருளாளன் என்னும் கச்சி வரதப்பன் என்று போற்றுவர். தாயார் பெருந்தேவியார். திருமஞ்சனக் கேணி என்னும் குளத்தில் தெப்போற்சவத்துக்கு மட்டும் கோவிலுக்குள்ளேயே எழுந்தருளுவாள். அதனால் இவள்'' படிதாண்டாப் பத்தினி'' எனப் போற்றப் பெறுகின்றாள்.

ஆளவந்தாரை இராமானுஜர் எதிர்ப்பட்டுச் சீடரானது இத்தலத்தில்தான். வேதாந்த தேசிகர், திருக்கச்சி நம்பி, கூரத்தாழ்வார், முதலானோர் எம்பெருமான் திருவருளுக்குப் பாத்திர மானவர்கள். கஜேந்திரன் வழிபட்டு முக்தி அடைந்த திருப்பதி இது !

பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரும் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

அத்தயூ ரான்புள்ளளை யூர்வான் அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வாவ் - முத்தீ
மறையாவான் மாகடல்நஞ் சுண்டான் றனக்கும்
இறையாவான் எங்கள் பிரான்

என்பது பூதத்தாழ்வார்திருப்பாசுரங்களில் ஒன்று.

சிறந்தஎன் சிந்தையும் செங்கண் அரவும்
நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும்-உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே
தாம்கடவார் தண்துழா யார்.

என்பது பேயாழ்வார் திருப்பாசுரங்களில் ஒன்று.

கல்லார் மதில்சூழ் கச்சிநகருள் நச்சிப் பாடகத்துள்
எல்லா வுலகும் வணங்கஇருந்த அம்மான் இலங்கை
க்கோன்
வல்லா ளாகம் வில்லால்முனிந்த எந்தைவிபீடணற்கு
நல்லானுடைய நாமம்சொல்லில்நமோ நாராயணமே

என்பது திருமங்கையாழ்வாரின் திருப்பாசுரங்களில் ஒன்று இவை மூன்றும் நாளும் ஓதத்தக்கவை.

## திருவெஃகா :

காஞ்சிபுரத்திலுள்ள மிகப் பழமையான திருப்பதி இதுவே காஞ்சியில் ஆடிசன் பேட்டைக்கு அருகில் வரதராசப்பெருமாள்சந்நிதியைநோக்கிச் செல்லும் கீழ்மேல் சாலைக்கு வடபுறமாகச் சற்று உள்ளே தள்ளி அமைந்துள்ளது. இத்திருக்கோவில்.

திருக்கோவிலினுள் எம்பெருமான் மேற்கு நோக்கிய திருமுக மண்டலங்கொண்டு புயங்க சயனமாகப் பள்ளி கொண்டிருக்கின்றார். எம்பெருமான் திருநாமம் சொன்ன வண்ணம் செய்த பெருமாள். தாயார் கோமள வள்ளி நாச்சியார்.

## சொன்ன வண்ணம் செய்த பெருமாள் :

திருமழிசையாழ்வார் காஞ்சியில் வாழ்ந்த காலத்தில் கணிகண்ணன் என்பவர் அவருக்குப் பரம சீடராக விளங்கினார், அப்போது கிழவி ஒருத்தி ஆழ்வாரிடம் பக்தி பூண்டு தொண்டுசெய்து வந்தாள் ஆழ்வாரின் திருவருளால் அவள் முதுமை நீங்கி எழில் மிகுந்த இளம் மங்கையானாள் அதனைக் கேள்வியுற்ற பல்லவ மன்னன் கணிகண்ணனை அழைத்தான். ஆழ்வார் தம்மீது பாடல் பாடித் தம்மையும் இளையவன் ஆக்கவேண்டும் என்று வேண்டினான் ஆனால்

கணிகண்ணன் வைகுந்தச் செல்வனை அன்றி யாரையும் ஆழ்வார் பாடமாட்டார் என மறுத்துவிட்டார்.

அரசன் கணிகண்ணன் முன்பு பொன்னும்மணிகளையும் குவித்து "நீராவது என்மீது பாடவேண்டும்" என்று வேண்டினார். கணிகண்ணன்

"நாக் கொண்டு மானிடம் பாடேன்"

அன்று கூறி விட்டார். அரசன் சினமுற்று அவரை நாட்டை-விட்டு வெளியேறுமாறு ஆணையிட்டான்.

இதை அறிந்ததிருமழிசையாழ்வார் தாமும்தம்சீடன் கணிகண்ணனுடன் வெளியேற முற்பட்டார். ஆனால் எம்பெருமானை விட்டுப் பிரிய மனம் இல்லாமல் அவனை நோக்கி,

"கணிகண்ணன் போகின்றான்
 காமருபூங் கச்சி
மணிவண்ணா நீ கிடக்க
 வேண்டா-துணிவுடைய
செந்நாப் புலவனும்
 செல்கின்றேன்; நீயும் உன்றன்
பைந்நாகப் பாய்ச்சுருட்டிக் கொள்"

என அருளிச் செய்தார். "உறங்குவான்போல் யோகு செய்யும் எம்பெருமானும் பாயைச் சுருட்டிக்கொண்டு பெரிய பிராட்டியாருடன் ஆழ்வாரைப் பின் தொடர்ந்தார்.

முன்னே கணிகண்ணன், பின்னே ஆழ்வார், அவர்களைத் தொடர்ந்து எம்பெருமான் இவர்கள் மூவரும் போவதைக் கண்டு மெய்யடியார்களும்பின்தொடர்ந்தனர்இதனை அறிந்த மன்னன் துணுக்குற்றுப்பக்தியின்பெருமையையும் அடியார்களின் மேன்மையையும் உணர்ந்து அவர்களிடம் நாடுதிரும்புமாறு வேண்டினான். ஆழ்வாரும் எம்பெருமானை நோக்கி,

கணிகண்ணன் போக்கொழிந்தான்
காமருபூங் கச்சி
மணிவண்ணா நீ கிடக்க
வேண்டும் — துணிவுடைய
செந்நாப் புலவனும்
செலவொழிந்தேன்; நீயும் உன்தன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள்

என அருளிச்செய்தார். காஞ்சிமாநகரமும் அவர்கள் திரும்பியமையால் பொலிவுற்றது. தாம்சொன்னவாறு செய்த எம்பெருமானுக்கு ஆழ்வார் "சொன்னவண்ணம் செய்த பெருமாள்" என்ற புதியநாமத்தைச் சூட்டினார். "குருபரம்பராப் பிரபாவம்" என்ற நூல் இந்த வரலாற்றினைக் கூறுகின்றது.

எம்பெருமானின் இத்தகைய கருணைச்செயலைக் குமரகுருபரர்,

பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்
பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டலே"

எனப் போற்றிப் பாடியுள்ளார்.

உலகங்களையெல்லாம் தன் வயிற்றில் இருத்தி அவற்றிற்கு ஊறுநேராவண்ணம் வலது கையைத்தலையின் கீழ் வைத்துப் புஜங்க சயனராய்ப் பெருமாள் கிடப்பார் பல பதிகளில். ஆனால் இத்திருப்பதியில் சொன்னவண்ணம் செய்த அவசரத்தில் இடக்கையைக் கீழேவைத்துக் கண் வளர்ந்திருப்பது கண் கொள்ளாக் காட்சி!

எம்பெருமான் சந்நிதியின் வடபுறமுள்ள பொய்கையில் பொய்கையாழ்வார் திருவவரித்ததாக ஐதிகம்.

"பாந்தள் பாழியில் பள்ளி விரும்பிய
வேந்தனைச் சென்று காண்டும் வெஃகாவுளே"

என்று திருமங்கையாழ்வார் இப்பதியை மங்களா சாசனம் செய்துள்ளார். மேலும்,

"வெஃகாவில் உன்னிய யோகத்துறக்கத்தை" என்று பெரியதிருமடலில் அருளியுள்ளார்.

பொய்கையாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் இப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும்-நான்
கிடத்தும்
நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே
என்றால் கெடுமாம் இடர்

என்பது பொய்கையாழ்வார் பாசுரங்களில் ஒன்று.

இசைந்த அரவமும் தெற்பும் கடலும்
பசைந்தங் கமுது படுப்ப-அசைந்து
கடந்த வருத்தமோ ? கச்சி வெஃகாவில்
கிடந்து இருந்து நின்றதும் அங்கு

என்பது பேயாழ்வார் பாசுரங்களில் ஒன்று.

நானிலம் வாய்க்கொண்டு நல்நீர்
அறமென்று கோதுகொண்ட
வேனில் அம் செல்வன் சுவைத்து உமிழ்
பாலைகடந்த பொன்னே !
கால்நிலம் தோய்ந்து விண்ணோர்தொழும்
கண்ணன் வெஃகா உது அம்பூந்
தேன்இளஞ் சோலைஅப் பாலது
எப்பாலைக்கும் சேமத்ததே"

என்பது நம்மாழ்வார் பாசுரங்களில் ஒன்று. இப்பாசுரங்கள் நாளும் ஓதத் தக்கவை.

## உலகளந்த பெருமாள் :

இத்திருப்பதி பெரிய காஞ்சியில் (சிவகாஞ்சி) நான்கு இராஜவீதிகள் சூழ ஊரின்நடுவே அமைந்துள்ளது. இரயில் நிலையத்திலிருந்து சுமார் அரை கி.மீ.தொலைவில்உள்ளது. காமாட்சியம்மன் சந்நிதிக்குப் பின்புறத்தில் இக்கோவில் இருக்கின்றது.

இப்பதியை ஊரகம் என்றும் வழங்குவர் "நீறைந்த கச்சி ஊரகத்தாய்" என்றும் "காமரு பூங்கச்சி ஊரகத்தாய்" என்றும் திருநெடுந்தாண்டகத்தில் இத்தலத்தை பெருமாளையும் திருமங்கையாழ்வார் போற்றியுள்ளார். எம்பெருமான் உரகரூபியாய்ச்சேவை சாதித்தபடியால் ஊரகம் என்று இத்திருப்பதி பெயர் பெற்றது என்பர்.

கருவறையில் எம்பெருமான் உலகளந்த திரிவிக்கிரம மூர்த்தியாகச் சேவை சாதிக்கின்றர். இந்தப் பெருமாள் சுமார் 25 அடிஉயரம் கொண்ட சிற்பம். கருவறையின் உட்புறச் சுவரிலேயே புடைச்சிற்பமாக இவர் எழுந்தருளி யுள்ளார். எம்பெருமானின் வலதுகால் மகாபலியின் தலை மேல்இருக்கிறது. இடதுகால்தென் திசைப்புறமாய்த்துடைக் குமேல் நீட்டப்பட்டிருக்கின்றது. இரண்டுகைகளும் இரண்டு திசைகளிலும் வியாபித்து இருப்பதுபோல் இருபுறமும் நீண்டிருக்கின்றன.

தாயார் அமுதநாயகி. எம்பெருமான் மேற்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார். நாக தீர்த்தம் கோவிலுக்கு முன்னால் இருக்கிறது.

கருவறைக்கு முன்பு இடப்புறத்தில் சுவரில் உரக (பாம்பு) வடிவமுள்ள எம்பெருமான் விளங்குகின்றார்

இந்த எம்பெருமானின் வழிபாடு மிகமுக்கியமானது "ஊரகத்தான் திருமஞ்சனப் பிரார்த்தனை பக்தகோடிகள் நன்கு அறிந்த நிகழ்ச்சி. இந்தப் பெருமாளை வரந்தரு வள்ளல் என்றும் போற்றுவர்.

எம்பெருமானின் திரிவிக்கிரம அவதாரத்திருமேனி அழகில் திருமங்கையாழ்வார் ஆழங்கால்பட்டுப்பாடியருளிய பாசுரம் நாளும் ஓதத்தக்கது.

ஒண்மிதியில் புனல் உருவி ஒருகால் நிற்ப
ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து
எண்மதியும் கடந்து அண்டம் மீது போகி
இருவிகம்பினூடுபோய் எழுந்து மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிர ஓடி
தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு
மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கினேனே"

முதலாழ்வார்கள் மூவரும் திருமழிசை பிரானும் எம்பெருமான் உலகளந்த வரலாற்றில் ஆழங்கால் பட்டுப் பாடியுள்ளனர்.

## திருப்பாடகம் :

இப்பதி சர்வ தீர்த்தக் கரைக்குப் பின்புறமாக ஏகாம்பரநாதர் ஆலயத்திற்குக் கிழக்கே சற்றுத் தொலைவில் இருக்கின்றது. ஞானப்பிரகாசர் திருமடத்திற்கு அருகில் உள்ளது.

"பூம்பாடகத்துள் இருந்தானை ஒத்தும் என் நெஞ்சு" என்கின்றார்பூதத்தாழ்வார், பாடு+அகம்என்பதே பாடகம்

ஆயிற்று. பெருமைதோன்றஎழுந்தருளியிருக்கும் பதிஎன்பது இதன்பொருள்.

பாண்டவர்களுடைய தூதனாய் கண்ணன் துரிய்யாதனனிடம் வந்தபொழுது துரியோதனன் இரகசியமாகத் தன் சபா மண்டபத்தில் மிகப்பெரிய நிலவறை யொன்றை நிறுவினான் அதன் உள்ளே அநேக மல்லர்களையும் வீரர்களையும் ஆயுத பணிகளாய்நிறுத்தினான். அப்படுகுழியைப் பிறர் அறியாவண்ணம் மூங்கில் பிளப்புகளால் மூடச்செய்து அதன் மேல் நவரத்தினங்கள் இழைக்கப்பெற்ற சிறந்த ஆசனம் ஒன்றை அமைத்து அதில் கண்ணனை வீற்றிருக்கச் செய்தான். பொய்யாசனம் முறிந்து விழுந்தது கண்ணனும் ஆசனத்துடன் உள்ளே விழுந்தார். மல்லர்களும் வீரர்களும் அவர்மீது பாய்ந்தனர். அப்போது பெருமாள் விசுவரூபம் எடுத்துப் பலகால் கைகள் கொண்டு நெருப்பெழ விழித்து அவர்களைக் கொன்றொழித்தார்.

எம்பெருமானின் இந்த விசுவரூபத்தினை,
"அரவநீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை
அஞ்சிடாதே இட அதற்கு
பெரியமா மேனி அண்டம் ஊடுருவ
பெருந்திசை அடங்கிட நிமிர்ந்தோன்"

எனத்திருமங்கையாழ்வார்அநுசந்நிதிக்கின்றார். அந்நிகழ்ச்சியின் போது கொண்ட விசுவரூபத் திருக் கோலத்தின் நினைவுச் சின்னமாகப் பெரிய திருமேனியுடன் சேவை சாதிக்கும் பதியே பாடகம்.

எம்பெருமான் கருவறையில் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன்வீற்றிருந்த திருக்கோலத்தில் சேவைசாதிக்கின்றார். எம்பெருமான் திருநாமம் பாண்டவதூதன். தாயார்கள் உருக்குமணி, சத்தியபாமா.

பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசைபிரான், திருமங்கையாழ்வார் ஆகியநால்வரும் இப்பதியை மங்களா சாசனம் செய்துள்ளனர்.

## திருவேளுக்கை :

இத்திவ்விய தேசம் சின்ன காஞ்சிபுரத்தில் உள்ளது. வேளிருக்கை என்பதே வேளுக்கை என மருவி வழங்கு கின்றது. திருக்கோவில் சிறியது.

இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் ஆள் அழகிய சிங்கர் (முகுந்தநாயகன்) தாயார் வேளுக்கை வல்லித் தாயார். கிழக்கே திருமுகமண்டலம் கொண்டு நின்ற கோலத்தில் எம்பெருமான் சேவை சாதிக்கின்றார்.

இப்பதியைப் பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசனம் செய்துள்ளனர்.

''மன்னும் மதில்கச்சி வேளுக்கை ஆளரியை''

என்பது திருமங்கையாழ்வாரின் திருவாக்கு. ஆள் அரி என்பது நரசிம்மம் ஆகும்.

பேயாழ்வார்,

"விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை - மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி
தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு''

என இத்திருப்பதியோடு வேறுசில திருப்பதிகளையும் பாடிப் பரவுகின்றார்.

## திருத்தண்கா :

இந்தத் திவ்விய தேசம் சின்ன காஞ்சிபுரத்தில் தூப்புல் என்ற பகுதியில் இருக்கின்றது. குளிர்ந்த சோலை களையுடையதால் இப்பதி 'தண்கா' என்று பெயர்பெற்றது.

கருவறையில் எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் சேவைசாதிக்கின்றார். எம்பெருமான்திருநாமம் தீபப்பிரகாசர் விளக் கொளிப் பெருமாள்)விளக்கின் ஒளி பொருள்களை (விளங்கச் செய்வது போல் இந்த எம்பெருமான் ஆன்மாவின் இயல்பு, ஈசுவரனது இயல்பு, ஆன்மா அடையும் பயன், அப்பயனை அடைவதற்குரிய உபாயம், அப் பயனை அடைதற்குப் பகையாய் உள்ளவைகள் ஆகிய 'அர்த்தபஞ்சகத்தையும்' தனக்கு விளங்கச் செய்வான் என்பது இப்பெருமானின் பெயரின் தத்துவமாகும்.

தாயார் மரகதவல்லி வேதாந்த தேசிகர் அவதரித்த இடம் இத்தேசமே இத்தலத்து எம்பெருமானைத்திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்.

''முளைக்கதிரை குறுங்குடியுள் முகிலை மூவா
மூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற
அளப்பரிய ஆரமுதை அரங்கம் மேய
அந்தணனை அந்தணர்தம் சிந்தையானை
விளக்கொளியை மரகதத்தை திருத்தண் காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருக! என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணக்கினாளே''

என்ற அவர்தம் பாசுரம் ஓதின்புறத் தக்கது.

# 26 காளையார் கோவில் (திருக்கானப் பேர்)

இத்தலம் பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவ தலங்களில் ஒன்று அந்நாளில் திருக்கானப்பேர் என்றும் இந்நாளில் காளையார்கோவில் என்றும் வழங்குகின்றது.

இத்தலம் இராமநாதபுரம் மாவட்டத்தில், திருச்சி-மானா மதுரை இருப்புப்பாதையிலுள்ள நாட்டரசன் கோட்டை இரயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 8கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

தேவராம் இத்தலத்தைக் 'கானப்பேர்' என்றுகுறிக்கின்றது. கானப்பேரில் எழுந்தருளியுள்ள இறைவன் காளையீசுவரர். இக்காலத்தில் காளீசர் எனவழங்குவர் இத்தலத்து இறைவனைச் சுந்தரர் "கானப்பேர் உறைகாளை" எனப் போற்றுகின்றார். இறைவன் சுந்தரருக்குக் காளை வடிவில் தோன்றி அருள்பாலித்தார். எனவே அவர் காளை எனப் போற்றினார், காளை கோவில் கொண்டுள்ள இடம் காளையார் கோவில் ஆயிற்று.

தூதனை என்தனை ஆள் தோழனை நாயகனைத்
தாழ்மக ரக்குழையும் தோடும் அணிந்ததிருக்
காதனை நாயடியேன் எய்துவது என்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேர்உறை காளையையே

எனச் சுந்தரர் பாடிப் பரவுகின்றார்.

பண்டைக்காலத்தில் இத்தலம் கானப்பேரெயில் என வழங்கியது. இப்பகுதில் பேரரணுடைய கோட்டை ஒன்று கானப்பேரெயில் என்னும் பெயரில் இருந்தது கோட்டையைச் சுற்றி எழுந்த ஊரும் அக்கோட்டையின் பெயரையே பெற்றது. வேங்கைமார்பன் இதன் தலைவனாக விளங்கினான். பாண்டியன் உக்கிரப் பெருவழுதி "கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி" எனப் பாராட்டப் பெறுகின்றான். எனவே அக்காலத்தில் வேங்கைமார்பனை

உக்கிரப்பெருவழுதி வென்றிருக்க வேண்டும் எனத் தெரிகின்றது. எனவே இவ்வூரின் பண்டைய பெயர் கானப்பேரெயில் இதுவே சுந்தரர் காலத்தில் கானப்பேர் ஆயிற்று எனலாம்.

## தல மகிமைகள் :

இறைவனின் கண்களைப் பார்வதி விளையாட்டாகத் தம் கைகளால் பொத்தினாள். மூவுலகங்களிலும் இருள் சூழ்ந்தது. அதனால் இறைவன் காளியாகக் கடவாய் எனச் சபித்தார். பார்வதியோ அறியாது செய்த பிழையை மன்னிக்க வேண்டினாள். இறைவன் சண்டாசுரனை வென்றபின் காளியுருவம் நீங்கி மீண்டும் என்னிடம் வந்து அடைவாய் என்று அருளினார்.

காளியுருவம் பெற்றஅம்மை கானப்பேருரை அடுத்த மருதவனத்தில் துர்க்கை வடிவில் கோவில் கொண்டாள். அப்போது சண்டாசுரனின் துன்பங்களைப் பொறுக்க முடி-யாமல் தேவர்கள் அம்மையிடம் முறையிட்டனர். அம்மையும் சண்டாசுரனோடு போரிட்டு அவனை அழித்தாள். சாப விமோசனம் பெற்ற காளியம்மை அழகே உருவான சுவர்ணவல்லியாகித் திருக்கானப்பேர் காளீசரை மணந்து இடப்பாகத்தில் வீற்றிருக்கின்றார் என்பர். காளியுருவில் இருந்த பார்வதியை மணந்த ஈசுவரனே காளீசுவரன்.

கோவில் மிகப்பெரிய இராஜகோபுரத்துடன் விளங்குகின்றது. இக்கோபுரத்தைக் கட்டியவர் மருது பாண்டியன் கோவிலுக்கு மேற்புரத்தில் 'ஆனைமடு' என்ற பெரிய தெப்பக் குளம் உள்ளது.

## மூன்று சந்நிதிகள் :

கோவிலில் இறைவன் மூன்று சந்நிதிகளில் திகழ்கின்றார் கோவிலின் முக்கிய சந்நிதியில் இறைவன் சுவர்ண காளீசராகத் திகழ்கின்றார், அம்பிகை சுவர்ண வல்லி.

சுவர்ண காளீசர் சந்நிதிக்குஇடப்பக்கத்தில் சோமேசுவரர் சந்நிதி உள்ளது. இங்குள்ள அம்பிகை செளந்தர நாயகி.

சுவர்ணகாளீசர் சந்நிதிக்கு இடப்புறத்தில் சுந்தரேசர் வீற்றிருக்கின்றார். இங்குள்ள அம்பிகை மீனாட்சி. இச்சந்நிதியை வீரசேனன் என்ற பாண்டிய மன்னன் கட்டுவித்தான்.

ஈசுவரர்கள் மூவரில் காளீசர் ஆக்கலையும் சோமேசர் அழித்தலையும் சுந்தரேசர் காத்தலையும் செய்தருள்வதாக மக்கள் நம்புகின்றனர்.

## சுவர்ண பதுமை அற்புதம் :

பாண்டிநாட்டை வீரசேனன் ஆண்டு வந்தான் அவன் தேவி சோபனாங்கி. அவர்கட்கு மக்கட்பேறு இல்லை. அதனால் அவர்கள் சுவர்ணத்தால் பதுமை (பிள்ளை) செய்து அதனைக் கண்டு மகிழ்ந்து அப்பதுமையுடன் சுவர்ண காளீசரை வணங்கி அங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கி எழுந்தனர் அப்போது இறைவன் அருளால் சுவர்ண பதுமை உயிர் பெற்றுப் பிள்ளையாக விளங்கியது. பிள்ளையைக் கண்டு மகிழ்ந்த அவர்கள் இறைவன் அருளை வியந்து மகிழ்ந்து கோவில்கள் எடுப்பித்தனர் என்பர்.

## சுந்தரரும் சேரமானும் :

சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் கெழுதகை நண்பர்கள். இருவரும் தில்லை நடராசன் அருளால்

நண்பர் ஆனவர்கள். இவர்கள் இருவரும் தில்லை நடராசனை வழிபட்ட பிறகு தலந்தோறும் சென்று வழிபடத் தொடங்கினர். இருவரும் திருசுழியல் இறைவனை வழிபட்டுத்தங்கியிருந்தனர் இறைவன் சுந்தரர் கனவில் தோன்றி "யாம் இருப்பது கானப்பேர்" எனமொழிந்தார். சுந்தரமூர்த்தி நாயனார் தம் திருக்கனவினைச் சேரமான் பெருமாள் நாயனாருக்கு உரைத்தார் இருவரும் காளையார்கோவில் வந்து வழிபட்டனர் என்பது வரலாறு.

## பழமொழி :

இத்தலத்தில் மூன்று சந்நிதிகள் இருப்பதால்
"காளை தேடச் சொக்கர் சுகிக்க
சோமர் அழிக்க"

என்ற பழமொழி மக்களிடையே வழங்கி வருகின்றது.

சாபத்தினால் காட்டானையாக மாறிய ஐராவதம் வழிபட்டுப் பேறுபெற்ற மகிமையுடையது இத்திருத்தலம். திருஞானசம்பந்தரும் சுந்தரரும் இத்தலத்தைப் பாடியுள்ளனர்.

"வாளினான் வேலினான்
மால்வரை எடுத்ததிண்
தோளினான் நெடுமுடி
தொலையவே ஊன்றிய
தாளினான் கானப்பேர்
தலையினால் வணங்குவார்
நாளும்நாள் உய்வதோர்
நன்மையைப் பெறுவரே"

—திருஞானசம்பந்தர்

மாவை யுரித்ததள் கொண்டகங்கம் அணிந்தவனை
வஞ்சர் மனத்திறையும் நெஞ்சணு காதவனை
மூவர் உருத்தன தாம் மூல முதற்கருவை
மூசிடு மால்விடையின் பாகனை ஆகமுறப்
பாவகம் இன்றிமெய்யே பற்றும் அவர்க்கமுதைப்
பால்நறு நெய்தயிரைந் தாடு பரம்பரனைக்
காவல் எனக்கிறையென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே

—சுந்தரர்

# 27 கானாட்டு முள்ளூர்

தென்னார்க்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற்குத் தென்மேற்கில் சிதம்பரத்திலிருந்து 19 கி.மீ. தொலைவில் காட்டு மன்னார் கோவில் இருக்கின்றது. அங்கிருந்து தெற்கே 6 கி. மீ. தொலைவில் ஓமாம் புலியூர் உள்ளது. அங்கிருந்து வடகிழக்கே 3கி.மீ. தொலைவில் கொள்ளிடத்தின் வடகரையில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

'கானாடு' என்பது பழந்தமிழ்நாட்டுப் பகுதிகளில் ஒன்று, எனவே இப்பகுதி கானாட்டிற்கு உரியதாக இருந்திருக்க வேண்டும் இப்பகுதியில் முட்செடிகள் நிறைந்திருந்ததால் 'முள்ளூர்' எனப்பெயர் பெற்றது. இவ்வகையில் இத்தலம் கானாட்டு முள்ளூர் என வழங்கி வருகின்றது.

## தல மகிமைகள் .

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருநாமம் பதஞ்சலி யீசுவரர், இறைவி கானார் குழலம்மை, கோவில்

மரம் அத்தியும் வெள்ளெருக்கும். பதஞ்சலி முனிவர் வழிபட்ட சிறப்புடையது இத்திருத்தலம் சுந்தரர் பாடல்பெற்ற தெய்வத்தலம் இது.

''இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னானை
இறையவனைமறையவனை எண்ணத்தினானைச்
சுரும்புயர்ந்த கொன்றையொரு தூமதியஞ் சூடும்
சடையானை விடையானைச் சோதியெனுஞ் சுடரை
அரும்புயர்ந்த அரவிந்தத் தனிமலர்களேறி
அன்னங்கள் விளையாடும் அகன்றுறையினருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கிவிளை கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே''

—சுந்தரர்

# 28 கீழைத்திருக்காட்டுப் பள்ளி

தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவெண்காட்டுக்கு மேற்கே சுமார் ஒரு கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

இறைவன் எழுந்தருளியுள்ள தலம் 'பள்ளி' என்றும் பெயர்பெற்றுள்ளது. சிரகிரியில் இறைவன் எழுந்தருளிதால் சிராப்பள்ளி ஆயிற்று. இவ்வகையில் கிழக்குத் திருக்காட்டில் இறைவன் கோவில் கொண்டிருப்பதால் கீழைத் திருக்காட்டுப் பள்ளி என இத்தலம் பெயர் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இறைவன் திருநாமம் ஆரணிய சுந்தரர். இவ்விறைவன் திருநாமத்தால் இத்தலம் இக்காலத்தில் 'ஆரணியே

சுவரர் கோயில்' என்றும் வழங்குகின்றது. இறைவி அகிலாண்டநாயகி. இத்திருத்தலம் திருஞானசம்பந்தர் பாடல்பெற்ற தெய்வத்தலம்.

''செய்யரு கேபுனல் பாய ஓங்கிச்
செங்கயல் பாயச் சிலமலர்த்தேன்
கையரு கேகனி வாழையீன்று
கானலெல் லாங்கமழ் காட்டுப் பள்ளிப்
பையரு கேஅழல் வாயஐவாய்ப்
பாம்பணை யான்பணைத் தோளிபாகம்
மெய்யரு கேயுடை யானையுள்கி
விண்டவர் ஏறுவர் மேலுலகே''

—திருஞானசம்பந்தர்.

# 29 கீழ் வேளூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்று கீழ்வேளூர். இத்திருத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் தஞ்சாவூரிலிருந்து நாகப்பட்டினத்திற்குச் செல்லும் இருப்புப் பாதையில் திருவாரூருக்குக் கிழக்கே 9 கி.மீ. தொலைவில் இருக்கின்றது. காவிரியாற்றின் பிரிவாகிய அகத்தின் காவிரி என்னும் வெட்டாற்றின் கிளைநதியின் தென்கரையில் விளங்கிகுன்றது.

## தல வரலாறு :

கிழக்கு திசையில் இருக்கும் தலம். ஆதலால் கீழ்வேளூர் ஆயிற்று. முருகன் வழிபட்ட திருத்தலம் இது. கீழ் + வேள் + ஊர் என அமைந்து நிலவுலகில் முருகன் வழிபட்ட ஊர் எனப் பொருள் கொள்வர்.

'வேள்' என்ற முருகக் கடவுள் வழிபட்ட ஊராதலின் வேளூர் ஆயிற்று. தேவலோகத்திலுள்ள முருகனது தேவகந்தபுரி 'மேல் வேளூர்' எனப்படும். தேவலோகத்தின் கீழ் நிலவுலகில் இத்தலம் அமைந்ததால் கீழ்வேளூர் என வழங்கப்பட்டு வருகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் இறைவன் சந்நிதி கட்டுமலைமேல் இருக்கின்றது. முழுவதும் கருங்கற்களால் கட்டப் பெற்றது. திருக்கோவிலின் திருமுடியாகிய தூபியும் கருங்கல் திருப்பணியே! இறைவன் கேடிலியப்பர். இறைவி வனமுலை நாயகி, கோவில்மரம் இலந்தை தீர்த்தம் சரவணப் பொய்கை,

இத்தலத்திலுள்ள சிவபெருமான் கால்மாறி ஆடின கோலத்தில் கூத்தபிரானாகக் காட்சி அளிக்கின்றார். இத்தலத்தில் தான் அம்பலவாணர் அகத்தியர்க்கு வலது திருவடிக் காட்சியை நல்கினார்.

## முருகப் பெருமான் :

இத்தலத்தில் முருகப் பெருமான் தாமே விமானம் எழுப்பிச் சிவபெருமானை வழிபட்டு அருள்பெற்றதாக வரலாறு. முருகப் பெருமான் தவக் கோலத்தில் நின்று தம்மை நாடிவரும் அன்பர்கட்குக் காட்சி கொடுக்கின்றார். முருகக் கடவுளின் வழிபாட்டிற்கும் தவத்திற்கும் இடையூறு ஐந்து திசைகளினின்றும் வரா வண்ணம் அம்மை காவல் இருக்கின்றார், எனவே அவருடைய திருநாமம் அஞ்சுவட்ட அம்மை. முருகப் பெருமானைச் சேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழ்,

மண்டு பேரொளியான கேடிலியை
அர்ச்சித்த வள்ளி நாயகன் வருகவே!

மாகாளி காத்த கீழ்வேளூரில் மாதவம்
வளர்த்த வேலவன் வருகவே !

எனப் போற்றுகின்றது.

இத்திருத்தலத்தைத்திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் போற்றிப் பாடியுள்ளனர்.

நீரு லாவிய சடையிடை யரவொடு மதிசிர நிரை மாலை
வாரு லாவிய வனமுலை யவளொடு மணிசிலம் பவையார்க்க
ஏருலாவிய இறைவன துறைவிடம் எழில் திகழ் கீழ்வேளூர்
சீரு லாவிய சிந்தைசெய் தணையவர் பிணியொடு வினைபோமே

—திருஞானசம்பந்தர்

"முறிப்பான பேசிமலை யெடுத்தான் தானும்
முதுகிறமுன் கைந்நாம்பை யெடுத்துப் பாடப்
பறிப்பான்கைச் சிற்றரிவாள் நீட்டினானைப்
பாவியே னெஞ்சகத்தே பாதப் போது
பொறித்தானைப் புரமூன்று மெரிசெய் தானை
பொய்யர்களைப் பொய்செய்து போதுபோக்கிக்
கிறிப்பானைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடிலாரே"

— திருநாவுக்கரசர்

# 30. குடவாசல்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்று குடவாசல். தஞ்சாவூர் மாவட்டத்தில்கும்பகோணத்திற்கு அருகில் கொரடாச்சேரி இரயில் நிலையத்திலிருந்து சுமார் 8 கி. மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

குடந்தைக்கு இத்தலம் வாயிலாக விளங்குவதால் குடந்தை வாயில் எனப் பெயர் பெற்று நாளடைவில் குட வாசல் ஆயிற்று எனலாம். இத்தலம் வரலாற்றுப் பெருமை யுடையது. சங்க காலத்தில் சோழர்களின் செல்வாக்கு மிகுந்த ஊராக இது விளங்கியது. பாதுகாவல் மிகுந்த சிறைக் கோட்டம் ஒன்று இருந்தது. அக்கோட்டத்தில்தான் சேரமன்னனைக் கோச்செங்கட்சோழன் சிறை வைத்ததாக சங்க இலக்கியம் கூறுகின்றது. அச்சிறைக் கோட்டம் சுற்றி லும் அழகு வாய்ந்த இயற்கையான மழைநீர் நிரம்பிய அகழி ஒன்றும் காவல்காடும் இருந்ததாக அறிய முடிகின் றது.

குடவாயில் கீரத்தனார், நல்லாதனார், கீரனக்கன் ஆகிய சங்ககாலச் சான்றோர்கள் இவ்வூரினாரே !

## தல மகிமைகள் :

இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் கோணேச்சுவரர். இறைவி பெரிய நாயகி. திருணபிந்து முனிவர் வழிபடச் சிவபெருமான் திருக்குடத்தினின்று வெளிப்பட்டருளி அவர் தம் தொழு நோயினை நீக்கியருளி னர் என்பது வரலாறு.

திருஞான சம்பந்தர் பாடல்பெற்ற திருத்தலம் இது.

கழலார்பூம் பாதத்தீ ரோதக்கடலில் விடமுண்டன்
றழலாருங் கண்டத்தீ ரண்டர்போற்று மடவினீர்
குழலார வண்டினங்கள் கீதத்தொலிசெய் குடவாயில்
நிழலார்ந்த கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே !

— திருஞானசம்பந்தர்

# 31. கும்பகோணம்

இத்திருத்தலம் கோலில்கள் நிறைந்த சிறந்த சிவ தலமாகவும் வைணவத்திருப்பதியாகவும் திகழ்கின்றது. சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிறந்த பதியாக இது விளங்குகின்றது. தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரியாற்றின் கழிமுக வெளியில் இத்திருத்தலம் திகழ்கின்றது. சென்னை யிலிருந்து 245 கி.மீ. தொலைவிலுள்ள திருத்தலமாகும்.

## தல வரலாறு :

இத்திருத்தலம் குடமூக்கு, குடந்தை, கும்பகோணம் எனப் பல பெயர்களால் வழங்குகின்றது. குடமூக்கு என் பதே இத்தலத்தின் பழைமையானபெயர். ஊழிக்காலத்தில் வைக்கப்பெற்ற அமுத கலசமாகிய குடந்தை பிரளய காலத்தில் வெள்ளம் அடித்துக்கொண்டு வர இறைவன் வேடவடிவில் எழுந்தருளி அம்பினால் எய்ய, குடமானது உடைந்து மூக்கின்வழியே அமுதம் நான்கு பக்கங்களிலும் பரந்து நிலைபெற்று நின்றது. இதனால் குடமூக்கு என்று பெயர் பெற்றது. படைப்புக் காலத்திலேயே இறைவன் அமிர்த குடத்தில் எழுந்தருளியமையால் ஆதி கும்பேசு-வரர் என்னும் திருநாமம் பெற்றார் என்னும் வரலாற்றைத் தலபுராணத்தால் அறியலாம்.

தேவாரம், திவ்வியப் பிரபந்தங்களில் இத்தலம் 'குடமூக்கு' எனவும் 'குடந்தை' எனவும் போற்றப் பெற்-றுள்ளது. அவர்களின் பாடலடிகளில் இப்பெயர் 'மேற்கு மூலை' என்னும் பொருளையே தருகின்றது.

கோவிலின் அமைப்பும் பெயர்களும் தலப் பெயர்களில் இடம் பெற்றுள்ளன. மிகப்பழைய கோவிலான கும்பேசுவரர் கோவில் மேற்கு (குட) முடுக்கில் காணப்படுவதால் கோவிலின் அமைப்பை ஒட்டி இத்தலம் குடமூக்கு எனப் பெயர் பெற்றிருக்கலாம்.

'குட' என்ற சொல் வளைவு என்றும் பொருள் பெறும். காவிரி ஆறு இத்தலத்தில் சிறிது வளைந்து செல்வதால் 'குடமூக்கு' எனப் பெயர் வழங்கப் பட்டிருக்கலாம். குடமூக்கு என்ற பெயரே நாளடைவில் குடந்தை ஆயிற்று.

வடமொழிவாணர்கள் 'அமிர்தகலசம்' என்னும் புராணக்கதையின் அடிப்படையில் 'குட' என்ற சொல்லைக் கும்பமாகவும் 'மூக்கு' என்ற சொல்லைக் கோணமாகவும் கொண்டு கும்பகோணம் என வழங்கினர் எனலாம் கல்வெட்டில் இத்தலம் 'திருக்குடமூக்கு' என்றே குறிக்கப் பட்டுள்ளது.

## மகிமைகள் :

தமிழ்நாட்டிலுள்ள திருத்தலங்களில் காஞ்சிபுரத்தைப் போல இத்தலமும் கோவில்கள் நிறைந்த தலமாகத் திகழ்கின்றது. 8 கி மீ. சுற்றளவிற்குள் சுமார் 200 கோவில்கள் இத்திருத்தலத்தில் விளங்குகின்றன. கும்பேசுவரர் கோவில், காசிவிசுவநாதர் கோவில், நாகேசுவரர் கோவில், சாரங்கபாணி கோவில். சக்கரபாணி கோவில் முதலிய கோவில்கள் இத்தலத்திலுள்ள மிகப் பெரிய கோவில்களாகும்-

## கும்பேசுரர் கோவில் :

இக்கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவன் கும்பேசர் இறைவி மங்களநாயகி. கோவிலில் காலையில்

முதலில் சூரிய பகவானுக்கும் மாலையில் சந்திரனுக்கும் வழிபாடுகள் நிகழ்கின்றன. இக்கோவிலிலுள்ள 16 தூண் மண்டபம் கலையழகு மிக்கது.

## மகாமக விழா :

இக்கோவிலின் தீர்த்தம் மாமகதீர்த்தம் கன்னியா தீர்த்தம் என்றும் இது வழங்கப் பெறும். இக்குளத்தின் பரப்பு 10 ஏக்கர். இதனைச் சுற்றி 16 மண்டபங்கள் உள்ளன. இங்குப் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை நடைபெறும் மாசிமகமே இத்தலத்தில் நடைபெறும் மிகப் பெரிய திருவிழாவாகும். இலட்சக்கணக்கான பக்தர்கள் இவ்விழாவின்போது கூடி இறையருள் பெற்று மகிழ்வர். இவ்விழா அனைந்திந்திய புகழ் பெற்றது வடநாட்டில் கும்பமேளாவைப் போல் தென்னாட்டில் மகாமகவிழா சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இக்கோவிலைப் பாடியுள்ளனர்-

மலைமலி மங்கைபாகம் மகிழ்ந்
தானெழில் வையமுய்யச்
சிலைமலி வெங்கணையாற் சிதைத்
தான்புர மூன்றினையும்
குலைமலி தண்பலவின் பழம்
வீழ்குட மூக்கிடமா
இலைமலி சூலமேந்தி யிருந்
தானவ னெம்மிறையே''

—திருஞானசம்பந்தர்

தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்
விண்ட வர்புர மூன்றொரு மாத்திரைக்
கொண்ட வன்னுறை யுங்குட மூக்கிலே

—திருநாவுக்கரசர்

## நாகேசுரர் கோவில் :

குடந்தைக் கீழ்க்கோட்டம் எனத்தேவாரம் இக்கோவிலைப் போற்றுகின்றது. இறைவன் மடந்தைபாகர். இறைவி பெரியநாயகி. ஆதிசேடனும் சூரியபகவானும் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் இது. இங்கு ஆண்டுதோறும் சித்திரைத் திங்கள் 11, 12, 13, ஆகிய நாட்களில் காலையில் ஞாயிற்றின் கதிர்கள் இறைவன்மேல் படுகின்றன.

திருநாவுக்கரசர் இத்தலத்து இறைவனைப் போற்றிப் பாடியுள்ளார்.

பொங்கரவர் புலித்தோலர் புராணர் மார்பிற்
பொறிகிளர்வெண் பூணநூற் புநிதர்போலும்
சங்கரவக் கடன்முகடு தட்ட விட்டுச்
சதுரநட மாட்டுகந்த சைவர் போலும்
அங்கரவத் திருவடிக்காட் பிழைப்பத் தந்தை
யந்தணனை யறவெறிந்தார்க் கருளப் போதே
கொங்கரவச்சடைக்கொன்றை கொடுத்தார்போலும்
குடந்தைக் கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே

—திருநாவுக்கரசர்

## காசிவிசுவநாதர் கோவில் :

இக்கோவிலைத் தேவாரம் திருக்குடந்தைக் காரோணம் எனப் போற்றுகின்றது. இத்திருக்கோவில் மாமகக் குளத்தின் வடகரையில் விளங்குகின்றது, இறைவன் சோமநாதர். இறைவி தேனார்மொழியாள். திருவளாற்றல் ஒன்பதும் கன்னியர் ஒன்பதின்மரும் வழிபட்ட திருக்கோவில் இது. மூர்க்கநாயனார் இக்கோவிலில் வழிபட்டுப் பேறு பெற்றார். இக்கோவில் இறைவனைத் திருஞானசம்பந்தர் போற்றிப் பாடியுள்ளார்.

## சாரங்க பாணிக் கோவில் :

இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் ஆராவமுதன். கிழக்கு பார்த்த சயனம். தாயார் கோமளவல்லி கோவில் கோபுரம் பெரியது. இதன் மேல்தளத்தின் அடியில் அழகான ஓவியங்கள் தீட்டப் பட்டுள்ளன. சிறப்பான வேலைப்பாடுகள் அமைந்த இரண்டு தேர்கள் கோவிலுக்குள் உள்ளன. இக்கோவில் இத்தலத்தின் நடுவே அமைந்துள்ளது.

பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், ஆகிய ஆழ்வார்கள் 51 பாசுரங்களால் இப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

குடங்கள் எடுத்தேற விட்டுக்
கூத்தாட வல்லஎம் கோவே
மடங்கொள் மதிமுகத் தாரை
மால்செய்ய வல்லஎன் மைந்தா
இடந்திட் டிரணியன் நெஞ்சை
இருபிள வாகமுன் கீண்டாய்
குடந்தைக் கிடந்த எம்கோவே
குருக்கத்திப் பூச்சூட்ட வாராய்''

—பெரியாழ்வார்

பாலா லிலையில் துயில்கொண்ட
பரமன் வலைப்பட் டிருந்தேனை
வேலால் துன்னம் பெய்தாற்போல்
வேண்டிற் றெல்லாம் பேசாதே
கோலால் நிரைமேய்த் தாயனாய்க்
குடந்தைக் கிடந்த குடமாடி
நீலார் தண்ணந் துழாய் கொண்டென்
நெறிமென் குழல்மேல் சூட்டீரே'',

—ஆண்டாள்

# 32. குரங்காடுதுறை

சோழநாட்டில் இப்பெயரில் இரண்டு சிவ தலங்கள் இருக்கின்றன. ஒன்று வட குரங்காடுதுறை ; மற்றொன்று தென் குரங்காடுதுறை.

'துறை' என்ற சொல் தமிழ் நாட்டுத் திருத்தலப் பெயர்களில் பின் ஒட்டாக அமைந்துள்ளது. மயில்கள் நிறைந்தாடும் சோலைகள் நிறைந்த ஊர் மயிலாடுதுறை எனப்பெயர் பெற்றுள்ளது. குயில்கள்நிறைந்துகூவும்செழுஞ் சோலைகளையுடைய ஊர் குயிலாந்துறை எனப்படும். அதே போன்று குரங்குகள் நிறைந்தாடும் சோலைகள் சூழ்ந்த ஊர் குரங்காடுதுறை என்று பெயர் பெற்றுள்ளது.

## வட குரங்காடுதுறை :

காவிரியாற்றிற்கு வடகரையிலுள்ள குரங்காடுதுறை வடகுரங்காடுதுறை ஆயிற்று. இது' திருவையாற்றை அடுத்த திருப்பழனத்திலிருந்து கிழக்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

இறைவன் திருநாமம் குலை வணங்குநாதர் சூல் கொண்ட பெண் ஒருத்தியின் விடாய் தீர்க்க இறைவன் தென்னங்குலையை வளைத்துக் கொடுத்தருளினார். அதனால்அவர் 'குலைவணங்கு நாதர்' எனப்போற்றப்பெறுகின்றார். இறைவி அழகு சடைமுடியம்மை. வாலி வழிபட்டுப் பேறு பெற்ற தலம் இது.

திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

''கோங்கமே குரவமே கொழுமலர்ப்
புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா
திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி வடகரை
அடைகுரங் காடுதுறை
வீங்கு நீர்ச் சடைமுடி அடிகளார்
இடமென விரும்பினாரே''

என்பது அவர்தம் பாமாலைகளுள் ஒன்று.

## தென் குரங்காடுதுறை :

இத்தலம் காவிரியாற்றுக்குத் தெற்கே கும்பகோணம் மாயவரம் சாலையில் திருவிடை மருதூருக்குக் கிழக்கே 3 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. இக்காலத்தில் ஆடுதுறை என்று வழங்கப் பெறுகின்றது.

இறைவன் ஆபத்சகாயர். இறைவி பவளக் கொடியம்மை. வாலியின் தம்பியாகிய சுக்ரீவன் வழிபட்டுப் பேறு பெற்ற தலம். அனுமானும் இத்தலத்தில் வழிபட்டு அருள் பெற்றார்.

திருஞான சம்பந்தரும் திருநாவுக்கசரரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

''பழகும் வினைதீர்ப் பவன் பார்ப் பதியோடும்
முழவங் குழன்மொந் தைமுழங் கெரியாடும்
அழகன் னயின்மூ விலைவேல் வலனேந்தும்
குழகன் னகர்போல் குரங்காடுதுறையே''

— திருஞான சம்பந்தர்.

# 33. குற்றாலம்

தமிழ்நாட்டில் குற்றாலம் என்ற பெயரில் இரண்டு சிவ தலங்கள் விளங்குகின்றன.

(1) திருநெல்வேலி மாவட்டம் தென்காசி வட்டத்தில் இருக்கின்றது. தென்காசியிலிருந்து மேற்கே சுமார் 6 கி.மீ. தொலைவில்இருக்கின்றது. தண் பொருநையாற்றின் துணை யாறுகளுள் ஒன்றான சிற்றாறு தோன்றும் மேற்கு மலைத் தொடர்ப் பகுதியைக் குற்றாலமலை என்பர். இம்மலை 550 அடி உயரத்தில் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

இத்தலம் குற்றாலம், குறும்பலா, திரிகூடம் என 21 பெயர்களைப் பெற்றுள்ளது.

குற்றாலம் என்பது ஒருவகை ஆலமரம். இதுவே இத்தலத்தின் கோவில்மரம். இவ்வகை மரங்கள் இப்பகுதியில் நிறைந்திருந்தமையாலும் இதுவே தலவிருட்சமாதலாலும் குற்றாலம் என இத்தலம் பெயர் பெற்றுள்ளது.

குறும்பலா என்பது இங்குள்ள கோவிலின் பெயர். குறும்பலாவும் தல விருட்சமாகும், கோவில் பெயரையே ஊரும் குறும்பலா எனப் பெற்றிருந்தது.

குற்றால மலையில் மூன்று சிகரங்கள் சிறப்பாக விளங்குகின்றன. அதனால் இத்தலம் திரிகூடம் என்னும் பெயர்பெற்றது

## தலமகிமைகள்

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் குறும் பலா ஈசர். இறைவி குழல்வாய்மொழியம்மை கோவில் மரம் குறும்பலா. தீர்த்தம் சித்திராநதி கோவில் சங்கு வடிவமாக அமைந்துள்ளது. வடக்குப் பார்த்த சந்நிதி.

## சித்திர சபை :

நடராசப் பெருமானுக்குரிய ஐந்துசபைகளில் ஒன்றான சித்திரசபை இருக்கும் சிறப்புடையது இத்தலத்திலுள்ள குற்றாலநாதர் கோவில். சித்திரசபை என்பது ஓவிய மன்ற மாகும். திருக்கோவிலுக்கு வடக்கே சற்றுத்தொலைவில் அம்மன்றம் உள்ளது. இங்கு அம்பலவாணர் சுவரில் சித்திர வடிவமாக வீற்றிருக்கின்றார்.

## ஐந்தருவி :

இவ்வருவி குற்றாலநாதர் திருக்கோவிலுக்கு மேற் கில் 3 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. வடஅருவி, செண்பகஅடவி அருவி, தேன்அருவி, புலிஅருவி, மழைய அருவி ஆகிய ஐந்தருவிகளும் மக்களுக்குப் பருவகால விருந்தாகப் பயன் தருகின்றன. ஆனி, ஆடி, ஆவணி, புரட் டாசி மாதங்களில் இவ்வருவிகளின் அழகே அழகு! அருவி களின் முழக்கமும் இளம்வெயிலும் குளிர்தென்றலும் அன் பர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்!

## குற்றாலநாதர் கோவில் வைணவத்தலம் :

குற்றாலத்தலம் ஒருகாலத்தில் வைணவத்தலமாக இருந்தது. எம்பெருமானைத் தரிசிக்க அகத்தியர் வந்தார். அவர் நெற்றிநிறைய விபூதி பூசியிருந்ததால் கோவில் பட் டாசாரிகள் அவரை உள்ளே புகாமல் தடுத்தனர். உடனே

அகத்தியர் வைணவ வேடம் பூண்டுவர அவரைக் கோவிலுக்குள் அனுமதித்தனர் பட்டாசாரிகள், அகத்தியர் கர்ப்பக் கிரகத்தில் திருமால் திருவுருவின் உச்சியில் உள்ளங்கையை வைத்துஅழுத்திக்குறுகுகுறுகு என்று கூறத்திருமாலும் குறுகி விட அங்குச் சிவலிங்கம் தோன்றியதாகவும் அன்று முதல் சிவதலமாக விளங்குகின்றது என்றும் கூறுவர். அதனால் தான்இத்தலத்துஇறைவனுக்குஇக்காலத்திலும்துளசிமாலை சாத்தப்பெறுகின்றது.

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்க வாசகர் ஆகியோர் இத்தலத்தைப்போற்றிப்பாடியுள்ளனர்.

''உற்றாரை யான் வேண்டேன்
ஊர்வேண்டேன் பேர் வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன்
கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங்
கூத்தா உன் குரை கழற்கே
கற்றாவின் மனம் போலக்
கசிந்துருக வேண்டுவனே''

என்று மாணிக்க வாசகர் அருளிய பாமாலை நாளும் ஓதி இன்புறத் தக்கது.

(2) குற்றாலம் என்ற பெயரில் அமைந்துள்ள மற்றொரு தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரியாற்றங்கரையில் மயிலாடுதுறைக்குத் தென் மேற்கில் 7 கி.மீ. தொலைவில் இருக்கின்றது. இத்தலம் தேவாரத்தில் திருத்துருத்தி எனப் போற்றப் பெற்றுள்ளது. இது ஆற்றிடைக் குறையாக இருப்பதால் 'துருத்தி' என்ற பெயர் பெற்றுள்ளது.

தஞ்சாவூர் மாவட்டத்தில் இரண்டு துருத்திகள் உள்ளன. ஒன்று திருவையாற்றையடுத்துள்ள திருக்கண்டியூருக்கு அருகிலுள்ள திருப்பூந்துருத்தி. மற்றொன்று குற்றாலம்.

## தல மகிமைகள் :

திருக்கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவன் உத்தர வேதீச்சுரர். இறைவி மிருதுமுகிழாம்பிகை திருக்கோவிலில் மேற்நோக்கிய சந்நிதி

சுந்தரர் சங்கிலிநாச்சியாரைத் திருவொற்றியூரில் திருமணம் புரியும் பொழுது இறைவன் முன் திரு ஆணை யிட்டுக்கொடுத்தார். சில நாட்கள் கழிந்ததும் அவ்வாணை யை மீறவே அவருக்குக் கண்பார்வை நீங்கின. உடம்பில் பெரும்பிணி வந்தது. திருவெண்பாக்கத்து இறைவன் ஊன்று கோல் ஒன்று தந்தார், கச்சியேகம்பர் இடக்கண் பார்வை அருளினார். இத்தலத்தில் சுந்தரர் தம் பிணி நீங்குமாறு பதிகம் பாடி வேண்டினார். உடற்பிணி அகன்றது.

திருக்குளத்துக்கு வடமேற்குக் கரையில் சுந்தரருக்குக் கோவில் இருக்கின்றது. இக்குளத்தில் தோல் நோய் உடைய வர்கள் குளித்தால் நோய் நீங்கும் என்பது மக்கள் நம்பிக்கை.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் இத்தலத்தைப் பாடியுள்ளனர்.

கருத்தினாலொர் காணியில்
    விருத்தியில்லை தொண்டர்தம்
அருத்தியாற்றம் அல்லல்சொல்லி
    ஐயமேற்ப தன்றியும்
ஒருத்திபால் பொருத்திவைத்
    துடம்புவிட்டி யோகியாய்
இருத்திநீ துருத்திபுக்
    கிதென்னமாய மென்பதே''

— திருஞான சம்பந்தர்

# 34 கூடலையாற்றூர்

நடு நாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவதலங்களில் ஒன்று. இத்தலம் தென்னார்க்காடு மாவட்டத்தில் விருத்தாசலம் இரயில் நிலையத்திலிருந்து சுமார் 18 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. சிதம்பரம் இரயில் நிலையத்திலிருந்து குமரக் குடி வழியாக 20 கி.மீ தொலைவில் உள்ளது.

## தல வரலாறு :

இரண்டு ஆறுகள் கூடுமிடம் 'கூடல்' எனப்படும். இப்பகுதியில் மணிமுத்தா ஆறும் வெள்ளாறும் ஒன்று கூடுகின்றன. ஆற்றை அடுத்துள்ள ஊர் ஆற்றூர். எனவே இத்தலம் கூடலையாற்றூர் என்று பெயர்பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் நெறி காட்டு நாயகர். இறைவி புரிகுழல் நாயகி. இத்தலம் சுந்தரர் பாடல்பெற்ற திருத்தலம்.

சுந்தரர் இத்தலத்தை வழிபடாது திருமுதுகுன்றம் சென்றார். சிவபெருமான் ஓர் அந்தணர் திருக்கோலத்துடன் வழியில் நின்றார். சுந்தரர் அவரிடம் திருமுதுகுன்றத்திற்குரிய வழியினைக் கேட்டார். அவரோ கூடலையாற்றூருக்குரிய வழி இது என்று கூறியதுடன் துணையாகவும் வந்தார். பின்னர் அந்தணரைக் காணவில்லை. இறையருளை வியந்து நின்ற சுந்தரர் கூடலையாற்றூர் சென்று வழிபட்டுவிட்டுத் திருமுதுகுன்றம் சென்றார்.

"மழைநுழை மதியமொடு
வாளர வஞ்சடைமேல்
இழைநுழை துகிலல்குல்
ஏந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக்
கூடலை யாற்றூரில்
அழகனிவ் வழிபோந்த
அதிசயம் அறியேனே."

—சுந்தரர்

# 35 கோடிக்கரை

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவதலங்களில் ஒன்று தஞ்சாவூர் மாவட்டம் வேதாரணியத்திற்கு அருகில் கடற்கரையில் இருக்கின்றது இத்தலம். இராமேசுவரத்திற்கு அருகில் உள்ளது. இத்தலத்தை ஆதிசேது என்று போற்றுவர்.

## தல வரலாறு :

கடல், ஆறு, ஏரி, குளம் இவற்றின் கரைகளில் அமைந்த தலங்களின் பெயர்கள் 'கரை' என்னும் பின் ஒட்டுடன் பெயர் பெற்றுள்ளன. இத்தலம் கோடியில் அமைந்திருப்பதால் கோடிக்கரை எனப் பெயர்பெற்றது.

## தல மகிமைகள் :

இத்தலம் மிகப் பழைமையானது. தாலமிமுதலிய கிரேக்க ஆசிரியர்களால் குறிக்கப்பட்டது. பண்டைக் காலத்

தில் தென்னிந்தியாவினின்று இலங்கைக்குச் செல்வதற்குக் கோடிக்கரை வழியே குறுக்கு வழியாக விளங்கியது. கோடிக்கரை முனைக்கும் இலங்கையிலுள்ள போட்ரோ முனைக்கும் 50 கி. மீ. தொலைவே உள்ளது.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் அமுதகடநாதர், இறைவி மையார்தடங்கண்ணம்மை. தீர்த்தம் அமுதகூவம். திருக்கோவில் குழகர்கோவில் என வழங்குகின்றது. இங்கிருந்து சுமார் ஒரு கி.மீ. தொலைவில் உருத்திரகோடி தீர்த்தம் உள்ளது.

திருக்கோவிலில் காடுகாளிக்குத் தனி சந்நிதி உள்ளது. முருகக் கடவுளின் படிமம்ஒருதிருமுகமும்ஆறுதிருக்கைகளும் கொண்டதாக விளங்குகின்றது. இராமபிரானும் வருணனும் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றனர். இத்தலத்தில் சித்தர் திருவுருவங்களும் இருக்கின்றன. இத்தலம் சுந்தரர் பாடல் பெற்ற சிறப்புடையது.

கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதானயலே யிருந்தாற் குற்றமாமோ
கொடியேன் கண்கள் கண்டன கோடிக்குழகீர்
அடிகேள் உமக்கார் துணையாக இருந்தீரே''

— சுந்தரர் தேவாரம்.

# 36 சிக்கல்

திருஞான சம்பந்தர் பாடல்பெற்ற திருத்தலமாகவும் அருணகிரிநாதர் திருப்புகழ்பெற்ற முருகன் அருள் தலமாகவும் சிக்கல் திகழ்கின்றது. இத்தலம் சோழநாட்டுத்

திருத்தலமாகும். தஞ்சாவூர் மாவட்டத்தில் நாகப்பட்டினத்திற்கு மேற்கே சுமார் 4கி. மீ. தொலைவில் இத்திருத்தலம் திகழ்கின்றது.

## தல வரலாறு :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனை வசிட்ட முனிவர் வழிபட்டு வந்தார். அதன் பயனாக இறைவன் காமதேனுவை அவருக்கு அளித்தார். இறைவன் சிறப்புணர்ந்த வசிட்டமுனிவர் காமதேனுவின் பாலிலிருந்து எடுக்கப்பெற்ற வெண்ணெயினைக் கொண்டு இலிங்கம் செய்து வைத்து வழிபட்டார். பிறகு அந்த இலிங்ககத்தை எடுக்கமுயன்ற போது அது கையில் எடுக்கமுடியாதபடி சிக்கிக் கொண்டது. அதனால் இத்திருத்தலம் சிக்கல் என வழங்குகின்றது.

இத்தலத்தில் வசிட்டமுனிவர் வழிப்பட்டதால் இத்தலம் வசிட்டசிரமம் என்றும் மல்லிகை மிகுந்திருப்பதால் மல்லிகாரண்யம் என்றும் கயை என்னும் தீர்த்தம் உள்ளதால் கயாசரஸ் என்றும் பெயர்கள் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வெண்ணெய்ப் பிரயன்' இறைவிவேல் நெடுங்கண்ணி இறைவிக்கு மலையின் கீழ் சந்நிதி உள்ளது.

சோழமன்னன் கோச்செங்கணான் சிவபெருமானுக்கு 70 மாடக்கோவில்கள் கட்டியதாக வரலாறு. அவற்றுள் ஒன்றே இத்தலத்திலுள்ள கோவில் உயர்ந்த கட்டுமலை மேல் இக்கோவில் அமைந்துள்ளது.

## சிக்கல் சிங்காரவேலர் :

இத்தலம் சிறந்தமுருகன் உறைவிடமாகவும் திகழ்கின்றது. இங்குள்ள முருகப் பெருமான் சிக்கல். சிங்கார வேலர் என அன்பர்களால் போற்றப் பெறுகின்றார். சிங்காரம் என்றால் அழகு என்று பொருள். முருகு என்றால் இளமை, எனப் பொருளாகும். இத்தலத்தில் விளங்கும் முருகன் பேரழகனாகத் திகழ்கின்றான். அன்னையிடம் வேல்பெற்று சிங்கார வேலன் எனப்பெயர் பெற்றுப் பெருவீரனாகவும் விளங்குகின்றான்.

கட்டுமலை மேலுள்ள மண்டபத்தில் சிங்கார வேலனின் உற்சவமூர்த்தி வள்ளி, தேவயானையுடன் மஞ்சத் தின்மேல் காட்சி தருகின்றார்.

கோவிலின் இராஜகோபுரம் ஏழுநிலைகளைக் கொண்டு எண்பதடி உயரத்தில் செம்மாந்து நிற்கின்றது. கோபுரவாயிலைக் கடந்ததும் கிருத்திகை மண்டபம் விளங்குகின்றது. ஒவ்வொரு மாதமும் சிங்காரவேலர் கிருத்திகை தினத்தன்று இம்மண்டபத்திற்கு எழுந்தருளி திருமஞ்சனம் கண்டருள்வார்.

## சிங்காரவேலன் வேல்பெறுதல் :

பன்னிரண்டு படிக்கட்டுகளைக் கொண்ட கட்டு மலைமேல் கோவில் இருக்கின்றது. இக்கட்டு மலைக்குக் கீழே அம்பிகை சன்னதி இருக்கின்றது. இவ்வம்பிகையை 'வேலொண் கண்ணி' என்று போற்றுவர். இவ்வம்பிகையே முருகப் பெருமானுக்கு வேல் கொடுத்ததாகக் கூறுவர். முருகப் பெருமான் சூரபன்மனைச் சங்காரம் செய்யப் பல படைக்கலங்களுடன் புறப்பட்டார். அப்போது

அம்பிகை தன் புதல்வனை ஆசீர்வதித்து வேல் அளித்து அனுப்பிவைத்தாள். முருகன் வேல்பெற்ற இடமாதலால் சிக்கல் மிகவும் சிறப்புடைய தலமாகத் திகழ்கின்றது.

"சிக்கலிலே வேல் வாங்கிச்
செந்தூரில் சம்மாரம்"

என்ற பழமொழியும் வழங்குகின்றது.

கந்த சஷ்டியின் முதல்நாளன்று முருகப்பெருமான் அம்பிகையிடம் வேல்வாங்கும் விழா மிகச்சிறப்பாக நடைபெற்று வருகின்றது. முருகப்பெருமான் விரைந்து சென்று அன்னையிடம் வேல் வாங்கும் காட்சி அற்புதத் திருக்காட்சி !

வண்டிரைத் தும்மது விம்மிய
மாமலர்ப் பொய்கை சூழ்
தெண்டிரைக் கொள்புனல் வந்தொழு
கும்வயற் சிக்கலுள்
விண்டிரைத் தம்மல ராற்றிகழ்
வெண்ணெய்ப் பெருமானடி
கண்டிரைத் தும்மன மேமதி
யாய்கதி யாகவே"

— திருஞானசம்பந்தர் தேவாரம்

" அழகிய சிக்கல் சிங்கார வேலவ
சமரிடை மெத்தப் பொங்கார மாய்வரும்
அசுரரை வெட்டிச் சங்காரமாடிய பெருமாளே"

—திருப்புகழ்

# 37. சிதம்பரம்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவ தலங்களில் ஒன்று சிதம்பரம். இஃது இந்நிலவுகூத்துக்கு நடுவாக உள்ளது. தில்லை நடராசன் எப்பொழுதும் திருநடனம் புரிந்து உலகை இயக்கி வருகின்ற திருத்தலம் சிதம்பரம். பூலோகக் கயிலாயம் எனப் போற்றப்பெறும் புண்ணிய திருத்தலம். கண்டு வழிபட்டவர்களுக்கு முக்தி அளிக்கும் பக்தித் தலம்.

தென்னார்க்காடு மாவட்டத்தில் இத்திருத்தலம் திகழ்கின்றது. சென்னை மாநகரத்திலிருந்து தென்மேற்கில் 189 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் விளங்குகின்றது. விழுப்புரம்-மாயவரம் இருப்புப் பாதையில் அமைந்துள்ளது. கடற்கரையிலிருந்து 10 கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

இத்திருத்தலம் சிதம்பரம், கோவில், தில்லை, சித்திரக்கூடம், புலியூர், பெரும்பற்றப் புலியூர், பொது சிற்றம்பலம், பொன்னம்பலம், புண்டரிகபுரம், தனியூர், வியாக்கிரபுரம். பூலோகக் கயிலாயம், முதலிய திருப்பெயர்களில் வழங்கப் பெறுகின்றது.

## பஞ்ச பூதத்தலங்களில் ஒன்று :

உலகம் நிலம், நீர், தீ, வளி, வான் என்னும் ஐம்பூதங்களால் ஆகியது. ஐம்பூதங்களின் இயல்புகளைத் தெளிவாகவும் நுட்பமாகவும் உணர்ந்த ஆன்றோர்கள்

அவற்றில் இறையுணர்வைக் கண்டனர். ஒவ்வொரு பூதத்தின் பெயராலும் ஒரு தலத்தை ஏற்படுத்தினர். அவை பஞ்ச பூதத் தலங்கள் எனப் பெயர் பெற்றன.

சிதம்பரம் ஆகாயத்தலம். சித்+அம்பரம் என இச்சொல்லைப் பாகுபடுத்தலாம். சித் என்பது ஞானம்-கடவுள் -என்று பொருள்படும். அம்பரம் என்பது வெட்டவெளி- ஆகாயம் என்று பொருள்படும்.

## கோவில் :

சைவ சமயத் தலங்களில் மிகவும் சிறப்பு வாய்ந்தது சிதம்பரம். இத்தலத்தின் சிறப்பு காரணமாகவும் உயர்வு காரணமாகவும் இத்தலம் கோவில் எனப் போற்றப் பெறுகின்றது. சைவர்களுக்குத் தில்லை கோவில், வைணவர்களுக்குத் திருவரங்கம் கோவில். இவ்வழக்கம் மரபாக இருந்து வருகின்றது. திருவிசைப்பா அருளிய கருவூர்த் தேவர் 'என்பெலாம் உருகும் அன்பர்தம் கூட்டத்து என்னையும் புணர்ப்பவன் கோவில்' எனக் கோவில் என்ற பெயரால் இத்தலம் போற்றப் பெற்றுள்ளதைக் காணலாம்.

## தில்லை, தில்லை வனம் :

இத்திருத்தலம் அமைந்துள்ள பகுதி அக்காலத்தில் தில்லை மரங்கள் நிறைந்த வனமாக இருந்தது. அதனால் அப்பகுதியில் அமைந்த தலம் தில்லைவனம் என்று பெயர் பெற்றது. தில்லைவனம் என்னும் பெயர் நாளடைவில் தில்லை எனக்குறுகியது. இக்காலத்தில் இத்தலத்தில் தில்லை மரங்களைக் காண்பது அரிது.

## புலியூர், பெரும்பற்றப் புலியூர் :

காசி திருத்தலத்தில் தோன்றிய முனிவர் ஒருவர் சிதம்பரத்தின் பெருமையைக் கேட்டறிந்தார். உடனே இறைவனைத் தரிக்க சிதம்பரம் வந்தார், வழிபாட்டுக்குரிய மலர்க

ளின் தேனை வண்டுகள் அம்மலர்களை எச்சில் படுத்துவதற்கு முன்பாகவே அம்மலர்களைப் பறித்து மலையாக்கி இறைவனுக்குச் சாத்த வேண்டும் என விரும்பினார். தம் விருப்பத்தை இறைவனிடம் விண்ணப்பம் செய்தார். இறைவனும் அம்முனிவர் பொழுது புலர்வதற்கு முன்பு மரங்களில் ஏறி மலர்களைப் பறிப்பதற்கு ஏற்றவகையில் புலிக்கால், புலிக்கை, புலிக்கண்களை அளித்தார்! அன்று முதல் அம்முனிவர் புலிக்கால் முனிவர் எனப் போற்றப் பெற்றார்.

புலிக்கால் முனிவர் பெருவிருப்புடன் நாளும் இத்தலத்தில் இறைவனை வழிபட்டதாலும் இறைவன் திருக்கூத்தை அவர் கண்டு மகிழ்ந்ததாலும் இத்தலம் பெரும்பற்றப் புலியூர் என்றும் புலியூர் என்றும் பெயர்பெற்றது.

## பொது, சிற்றம்பலம், புண்டரிகபுரம், தனியூர்:

உலகம் விராட புருடனின் வடிவம். அதன் மூலாதாரம் திருவாரூர்; கொப்பூழ் திருவானைக்கா; மணிபூரகம் திருவண்ணாமலை; கண்டம் திருக்காளத்தி; புருவ மதியம் காசி; இருதயம் சிதம்பரம் எனப் போற்றுவர் ஆன்றோர், இதனால்தான் இத்திருத்தலம் பொது, சிற்றம்பலம், புண்டரிகபுரம், தனியூர் என்னும் பெயர்களைப் பெற்றது என்பர்.

## பொன்னம்பலம்:

இறைவன் திருக்கூத்து நிகழ்த்தும் மன்றங்கள் ஐந்து அவை பொன் மன்றம், மணிமன்றம், வெள்ளி மன்றம், செப்பு மன்றம், சித்திர மன்றம். இவை ஐந்தும் ஐந்து தலங்களில் விளங்குகின்றன. ஐந்தனுள் பொன் மன்றம் சிதம்பரத்தில் விளங்குகின்றது. அது பொன்னம்பலம் எனப்போற்றப்

பெறுகின்றது. அம்மன்றத்தின் பெயரே தலத்திற்கும் வழங்குகின்றது.

## சித்திரக் கூடம் :

சித்திரக்கூடம் என்பது விசித்திரமான சிகரங்களையுடைய மலை என்று பொருள்படும். இஃது இராமபிரான் காட்டிற்குச் சென்ற காலத்தில் அவரது திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்காய் இருந்ததொரு மலையாகும். அம்மலையினைப் போலவே இத்தலமும் எம்பெருமானுடைய திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்காய் இருப்பது பற்றிச் சித்திரக் கூடம் எனப்போற்றப் பெறுகின்றது.

## மகிமைகள் :

தில்லைத்திருக்கோயில் 40 ஏக்கர் பரப்புடைய நிலத்தில் 4 பெரிய கோபுரங்களுடன் நகரத்தின் நடுநாயகமாகத் தலைநிமிர்ந்து நிற்கின்றது. இச்சிறப்பு வெள்ளியம்பலமாகிய மதுரைக்கும் பொன்னம்பலமாகிய சிதம்பரத்திற்கும் பொதுவானது.

இக்கோவிலில் பல அம்பலங்கள் அமைந்துள்ளன. நடராசப் பெருமான் எழுந்தருளியிருக்கும் அம்பலம் சிற்றம்பலம். அவர் திருமஞ்சனம் ஆடும் இடம் பொன்னம்பலம் ஊர்த்துவதாண்டவமூர்த்தியின் கற்சிலையுள்ளஇடம் நடன அம்பலம் தீட்சிதர்களின் பொதுக்குழு கூடுமிடம் பேரம்பலம். ஆயிரக்கால் மண்டபம் இராஜசபை இவ்வாறு பல சபைகள் அமைந்திருப்பதால் தில்லை நடராசர் சபாநாயகர், சபாபதி, அம்பலவாணர், நடன சபாபதி என்றெல்லாம் போற்றப் பெறுகின்றார். இவரே சேரமான் பெருமாள் நாயனாருக்குப் பூஜை முடிவில் திருச்சிலம்பொலி

கேட்குமாறு அருளியவர்.

தில்லை நடராசர் 'ஓம்' என்னும் பிரணவத்தின் வடிவாக நின்று நாதாந்தக் கூத்து இயற்றுகின்றார். ஐந்தெழுத்துச் சொரூபியாக விளங்கும் நடராசப் பெருமானின் திருக்கூத்து படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் உணர்த்துகின்றது

## பொன்னம்பலத் தத்துவம் :

சித் சபையும் கனகசபையுப் சேர்ந்திருக்கும் இடமே பொன்னம்பலம். இது சிற்றம்பலம், ஞானசபை என்றெல்லாம் போற்றப் பெறுகின்றது. பொன்னம்பலத்தின்மேல் ஒன்பது தங்ககலசங்கள் விளங்குகின்றன. இவ்வொன்பதும் ஒன்பது சக்திகளாகும்

பொன்னம்பலத்தில் 64 கைம்மரங்கள் உள்ளன. இவை 64 கலைகளாகும். 21, 600 ஓடுகள் வேயப்பட்டுள்ளன. இவை மனிதனால் ஒவ்வொரு நாளும் விடப்படுகின்ற சுவாசங்களின் கணக்கை உணர்த்துவன. 72,000 ஆணிகள் பொருத்தப்பட்டுள்ளன. இவை மனிதனின் சுவார சஞ்சார ஆதாரமான நாடிகளின் கணக்கை உணர்த்துவன.

மனிதனுடைய இருதயத்தில் இருக்கின்ற இறைவனே இப்பொன்னம்பலத்திலும் இருக்கின்றார் என்பதனை உணர்த்தவே மனித உடல் போலவே அம்பலம் அமைந்திருக்கின்றது. என மெய்யன்பர் ச. மெய்யப்பனார் அவர்கள் பொன்னம் பலத்திற்கு விளக்கம் தந்துள்ளார்.

## சிதம்பர ரகசியம் :

பொன்னம்பலத்தில் சபாநாயகரின் வலப்பக்கத்தில் ஒருசிறுவாயில் உள்ளது. வாயிலில்திரை தொங்கவிடப் பட்டிருக்கின்றது. வழிபாட்டின் போது திரை அகற்றப்பட்டு

ஆரத்தி காட்டப் பெறுகின்றது. இதனுள்ளே மூர்த்தி எதுவும் கிடையாது. தங்கத்தாலான வில்வ மாலை மட்டும் தொங்கவிடப் பட்டிருக்கின்றது. இதுவே சிதம்பர ரகசியம் எனப் போற்றப் பெறுகின்றது. இறைவன் தில்லையில் ஞானாவெளியாக விளங்குகின்றான் என்பதை இது புலப் படுத்துகின்றது.

திருமூலட்டானக் கோவிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் மூலட்டானேசுவரர். இவரைத் திருமூலநாதர் என்றும் போற்றுவர். இறைவி உமையம்மையார்.

திருத்தில்லையிலுள்ள சிறப்புமிகு தீர்த்தங்கள் பத்து அவற்றுள் சிவ கங்கை என்னும் தீர்த்தம் மிகச் சிறந்தது. இத்தீர்த்தம் சிவ வடிவமாகத் திகழ்கின்றது. இத்தலத்தின் தல விருட்சம் தில்லை.

## திருச்சித்திரக் கூடம் :

பொன்னம்பலத்தின் முன்னால் கிழக்கு நோக்கித் தில்லைக் கோவிந்தராசர் சந்நிதி விளங்குகின்றது. இங்குக் கோவிந்தராசர் அர்ச்சாவதார நிலையில் கோவில் கொண் டுள்ளார். தென்திசையில் தலை வைத்து வட திசையில் கால் நீட்டித்திருப்பள்ளி கொண்டுள்ளார். இவர் பள்ளி கொண்டுள்ள கோவில் சித்திரக் கூடம் எனப் போற்றப் பெறுகின்றது.

## காணமுத்திதரும் தலம் :

தில்லை காண முத்தி தரும் தலமாக விளங்கு கின்றது. இத்தலத்தில் மணிவாசகர், திருநீலகண்டநாய னார், திருநாளைப் போவார் நாயனார், கூற்றுவ நாயனார், கோச்செங்கட்சோழ நாயனார், கணம்புல்ல நாயனார் மறைஞான சம்பந்த சிவாசாரியார், மெய்ப்

பொருள்நாயனார் முத்துத்தாண்டவர் முதலிய எண்ணிறந்த அடியார்கள் இத்தலத்தில் வழிபட்டு முத்தி அடைந்துள்ளனர்.

## திருவிழாக்கள் :

மார்கழித் திருவாதிரைத் திருவிழாவும் ஆனி உத்திரத் திருவிழாவும் தில்லையில் நடைபெறும் சிறப்பான பெரிய திருவிழாக்கள்!

சித்திரை வருடப்பிறப்பு, திருவாதிரை நட்சத்திரம், அமாவாசை முதலிய சிறப்பு நாட்களில் நடராஜமூர்த்தி சிவகங்கையில் தீர்த்தம் கொடுத்தருள்வார்!

சித்திரை முதல் பங்குனி முடிய பன்னிரண்டு மாதங்களின் மாதப்பிறப்பு, பிரதோஷம், வெள்ளிக்கிழமை திருவாதிரை, கார்த்திகை, அமாவாசை, பௌர்ணமி, ஆகிய நாட்களில் இரவுவிழா நடைபெறுகின்றது. மேலும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மணிவாசகர், சுந்தரர் ஆகியோர் முத்தி அடைந்த தினத்தில் திருவிழா நடைபெறுகின்றது.

## பிற கோவில்கள் :

தில்லைத் திருக்கோவிலைத் தவிர மற்றும் எண்ணிறந்த கோவில்கள் இத்தலத்தில் விளங்குகின்றன. இளமையாக்கினார் கோவில், அனந்தேஸ்வரர் கோவில், தில்லையம்மன் கோவில், தெட்சிண காளியம்மன் கோவில். நந்தனார் தனிக்கோவில், வியாக்கிரபாதர் கோவில், காளியம்மன் கோவில், கீழத்தெருமகாமாரியம்மன் கோவில், சேக்கிழார் கோவில், உமாபதிசிவம் கோவில், மறைஞான சம்பந்தர் கோவில், அங்காளம்மன் கோவில், காமாட்சி

யம்மன் கோவில்' திரௌபதியம்மன் கோவில், இராமர் கோவில், மாணிக்கவாசகர் கோவில் முதலியன இத்திருத் தலத்திலுள்ள பிற கோவில்களாகும்.

## தில்லையைப் போற்றிய இலக்கியங்கள் :

நம்பியாண்டார் நம்பியால் தேவாரத் திருப்பதிகங்கள் கண்டெடுக்கப் பெற்ற தலம் தில்லை. மாணிக்கவாசகர் திருச்சிற்றம் பலக்கோவை பாடியருளியதலம் தில்லை. சேரமான் பெருமாள்நாயனார் பொன்வண்ணத்தந்தாதி பாடியருளிய தலம் தில்லை. சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடியளிய தலம் தில்லை.

இவ்வாறு சிறந்த இலக்கியங்களைத் தந்த பெருமை இத்திருத்தலத்திற்கு உண்டு. மூவர் தேவாரம், திருவாசகம் திருக்கோவையார், திருவிசைப்பா திருப்பல்லாண்டு- கோயில் நான்மணிமாலை, கோயில் திருப்பண்ணியர் விருத்தங்கள், பெரிய புராணம், சிதம்பர மும்மணிக்- கோவை, சிதம்பர செய்யுட் கோவை, சிவகாமியம்மை இரட்டை மணிமாலை, தில்லைக்கலம்டகம், தில்லையுலா, தில்லையமகவந்தாதி, சிதம்பர வெண்பா, சிதம்பர சபா- நாதபுராணம்' கோயிற்புராணம் புலியூர்வெண்பா, நடேசர் திருவருட்பா, நடராச சதகம், நடராசர் திருப் புகழ், சிவகாமியம்மைப் பிள்ளைத்தமிழ், சிவகாமியம்மை பதிகம். தில்லை நவமணிமாலை முதலிய இலக்கியங்கள் தில்யின் சிறப்புகளைப் போற்றியுரைக்கின்றன.

பெருமாள் திருமொழி, பெரிய திருமொழி முதலிய வைணவப் பாசுரங்களும் இப்பதியின் மகிமைகளை விளக்குகின்றன.

கைவல்லிய உபநிஷத்து, சாந்தோக்கிய உபநிஷத்து தைத்திரீய உபநிஷத்து, சுவேதாசுவத ரோபநிஷத்து.

பிருகதாரண்ய உபநிஷத்து, தில்லைவன மான்மியம், புலியூர் மான்மியம், வியாக்கிரபுர மான்மியம், புண்டரிக புரமான்மியம் முதலிய வடமொழி நூல்களும் தில்லையின் பெருமையைக் கூறுகின்றன.

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாரமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே''

—திருஞானசம்பந்தர்

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்
வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியில் பால்வெண்ணீறும்
இனித்தம் உடைய எடுத்தபொற்
பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே''

— திருநாவுக்கரசர்

அங்கணெடு மதிள்புடைசூ ழயோத்தி யென்னும்
அணிநகரத் துலகனைத்தும் விளக்குஞ்சோதி
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த்தோன்றி
விண்முழுது முயக்கொண்ட வீரன்தன்னை
செங்கணெடுங் கருமுகிலை யிராமன் தன்னைத்
தில்லை நகரத் திருச்சித்ர கூடந்தன்னுள்
எங்கள்தனி முதல்வனையெம் பெருமான் தன்னை
என்றுகொலோ ! கண்குளிரக் காணும்நாளே''

— குலசேகராழ்வார்

காயோடு நீடு கனியுண்டு வீசு
கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து

தீயோடு நின்று தவஞ்செய்ய வேண்டா
திருமார்ப னைச்சிந்தை யுள் வைத்து மென்பீர்
வாயோது வேதம் மலிகின்ற தொல்சீர்
மறையாளர் நாளும் முறையால் வளர்த்த
தீயோங்க ஒங்கப் புகழோங்கு தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்றுசேர் மின்களே
— திருமங்கையாழ்வார்

# 38 சிறு புலியூர்

திருமங்கையாழ்வாரால் போற்றிப் பாடப் பெற்ற திருப்பதி சிறுபுலியூர். இத்திருப்பதி தஞ்சாவூர் மாவட்டத்தில் மாயவரத்திற்குத் தெற்கே மாயவரம் - காரைக்குடி கிளை இரயில் பாதையில் கொல்லுமாங்குடி என்னும் நிலையத்திற்குக் கிழக்கே சுமார் ஒரு கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

மாமல்லபுரத்தில் எம்பெருமான் திருக்கோலம் தலசயனம் எனப் போற்றப் பெறுகின்றது. இங்குள்ள கோவிலில் சலசயனம் என எம்பெருமான் திருக்கோலம் போற்றப் பெறுகின்றது. இத்தலத்தில் எம்பெருமான் புலிக்கால் முனிவருக்குப் பால்சயனமாய்ச் சேவை சாதித்தார். அதனால் இத்திருப்பதி சிறு புலியூர் என வழங்குகின்றது. சிதம்பரம் பெரும்பற்றப் புலியூர்.

## மகிமைகள் :

திருமங்கையாழ்வார் தம் பாசுரங்கள்தோறும் இப் பதியைச் "சிறுபுலியூர் சலசயனம்" எனப் போற்றிப்

பாடியுள்ளார். சலம் என்பது மாயை உறங்குவான் போல் யோகு செய்வதற்குக் கொண்ட சயனமாதலால் மாயப் படுக்கை ஆயிற்று.

"கருமாமுகில் உருவாகனல் உருவாபுனல் உருவா
பெருமால்வரை யுருவாபிற வுருவாநின துருவா
திருமாமகள் மருவும்சிறு புலியூர்ச்சல சயனத்து
அருமாகட லமுதே உன தடியேசர ணாமே"

—திருமங்கையாழ்வார்

# 39 சீர்காழி

இத்திருத்தில்தான் திருஞானசம்பந்தர் அவதரித்தார். அம்மை வழங்கிய ஞானப்பால் உண்டு 'தோடுடையசெவியன்' எனத்தொடங்கித் தேவாரம் பாடினார். இத்திருத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரியின் கழிமுகப் பகுதியில் அமைந்திருக்கின்றது.

## தல வரலாறு :

பெரியபுராணம் இயற்றிய சேக்கிழார் சுவாமிகள் சீர்காழிக்குரிய பெயர்களாகப் பன்னிரண்டைக் குறிப்பிடுகின்றார்.

"பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்
தால்

காளி வழிபட்டுப் பேறுபெற்ற தலமாதலின் ஸ்ரீகாளி புரம் எனப் பெயர்பெற்று நாளடைவில் சீர்காழி என வழங்குகின்றது.

அக்காலத்தில் இத்தலம் கழுமலம் என்றே வழங்கப் பட்டது. காவிரிப் பூம்பட்டினத்தை இத்தலம் அடுத்திருப் பதால் சோழர்களின் பட்டத்துயானையை இங்கே கட்டி வைத்தனர். அதன் காரணமாகக் 'கழுமலம்' எனப்பெயர் வழங்கியது.

பிரமன் வழிபட்டதால் பிரமபுரம் என்றும் இந்திரன் மூங்கில் உருவில் மறைந்திருந்தமையால் வேணுபுரம் என் றும் தேவர்களின் புகலிடம் ஆனமையால் புகலி என்றும் ஊழிக்காலத்தில் தோணியாக இத்தலம் மிதந்ததால் தோணிபுரம் என்றும் திருமால் பூக்கொண்டு வழிபட்டமை யால் பூந்தாராய் என்றும் இத்திருத்தலம் பெயர்கள் பெற்றுள்ளது.

சக்கரவர்த்தித் திருமகன் எழுந்தருளியிருக்கும் சிறந்த பதியாதலின் இப்பதி "சீராம விண்ணகரம்" என்றும் காளி வாழும் தலமாதலால் காழி(ளி)ச் சீராம விண்ணகரம் என் றும் வைணவர்களால் இப்பதி போற்றப்பெறுகின்றது.

கல்வெட்டில் இத்திருத்தலம் இராஜராஜ வளநாட்டு திருக்கழுமலநாட்டுப் பிரமதேயம் திருக்கழுமலம் எனவும் இராசாதிராச வள் நாட்டுச் சீர்காழி எனவும் குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பிரம புரீ சர். "இறைவி திருநிலைநாயகி" திருத்தோணியில் இறை வன் தோணியப்பர். இறைவி பெரிய நாயகி. தீர்த்தம் பிரம தீர்த்தம்.

திருஞான சம்பந்தருக்குக் கோவிலில் தனிக்கோவில் அமைந்துள்ளது. கணநாதநாயனார் தோன்றிய திருத்தலம் இது. இவர் திருஞானசம்பந்தர் திருவடிகளைத் தொழுது பேறு பெற்றார்.

நால்வர் பாடல் பெற்ற சிறப்புடையது இத்திருத்தலம் மேலும் பட்டினத்தடிகளின் திருக்கழுமலமும்மணிக்கோவை வடுகநாத தெசிகரின் காழியந்தாதி, அருணாசலக்கவிராயரின் சீர்காழித் தலபுராணம், மீனாட்சி சுந்தரர் பிள்ளையின் சீர்காழிக்கோவை முதலிய நூல்களும் இத்தலத்தின் மகிமைகளைக் கூறுகின்றன.

தோடுடைய செவி யன்விடையேறி யோர்
துாவெண்மதி சூடிக்
காடுடையசுட லைப்பொடி பூசியென்
உள்ளங்கவர் கள்வன்
ஏடுடையமல ரான் முனைநாட்பணிந்
தேத்த அருள் செய்த
பீடுடைய பிர மாபுரமேவிய
பெம்மானி வனன்றே''

—திருஞானசம்பந்தர்

சிந்தித் தெழுமன மேறினை யாமுன் கழுமலத்தைப்
பந்தித்த வல்வினை தீர்க்கவல் லானைப் பசுபதியைச்
சந்திக்த கால மறுத்துமென் றெண்ணி இருந்தவர்க்கு
முந்தித் தொழுகழல் நாடொறும் நந்தமையாள்வனவே

— திருநாவுக்கரசர்

சாதலும் பிறத்தலுந் தவிர்தெனை வகுத்துத்
தன்னருள் தந்தவெந் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கொர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்த வெம் மானை

ஏதிலென் மனத்துக்கோ ரிரும்புண்ட நீரை
எண்வகை யொருவனை யெங்கள்பி ரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே''

— சுந்தர மூர்த்தி நாயனார்

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம் புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே''

— மாணிக்கவாசகர்

# 40 சீவைகுந்தம்

நம்மாழ்வார் பாடல் பெற்ற திருப்பதியாக சீவைகுந்தம் விளங்குகின்றது, திருநெல்வேலிமாவட்டத்தில் திருநெல் வேலிக்கு நேர்கிழக்கே 21 கி- மீ. தொலைவில் இத்திருப்பதி அமைந்திருக்கின்றது. இத்திருப்பதி ஸ்ரீ வைகுண்டம் என்றும் வழங்கப் பெறும்.

## தல வரலாறு :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருநாமம் வைகுந்தநாதன். நின்ற கோலத்தில்

அன்பர்களுக்குச் சேவை சாதிக்கின்றார். எம்பெருமான் திருநாமமே பதிக்கும் பெயராக வழங்குகின்றது.

வடஇந்தியா வரை சென்று சைவசமயத்தை நிலை நாட்டிய குமரகுருபரர் அவதரித்த சிறப்புடையது இத் திருப்பதி. இப்பதியிலுள்ள வைகுந்தநாதனை நம்மாழ்வார் இரண்டு பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். அவை அருகிலுள்ள திருப்புளிங்குடி எம்பெருமானை, மங்களாசாசனம் செய்யும்பொழுது செய்தவை என்பர்.

புளிங்குடிக் கிடந்து வரகுண மங்கை
இருந்துவை குந்தத்துள் நின்று
தெளிந்த என் சிந்தை அகங்கழி யாதே
என்னையாள் வாயெனக் கருளி
நளிர்ந்தசீர் உலகம் மூன்றுடன் வியப்ப
நாங்கள்கூத் தாடிநின்று ஆர்ப்ப
பளிங்குநீர் முகிலின் பவளம்போல் கனிவாய்
சிவப்பநீ காணவா ராயே''

— நம்மாழ்வார்

# 41 சுவாமி மலை

முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள அறுபடை வீடுகளில் நான்காவது படைவீடாகச் சுவாமி மலை திகழ்கின்றது. தஞ்சாவூர்மாவட்டத்தில்கும்பகோணத்திற்கு மேற்கே சுமார் 7-கி. மீ. தொலைவில் திருவையாறு செல்லும் சாலையில் இத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு :

முருகப் பெருமான் தந்தைக்கு உபதேசிக்கக் குருவாய் அமர்ந்த தலம் சுவாமி மலை. இத்தலம் அக்காலத்தில் ''ஏரகம்' என்று வழங்கப் பெற்றது.

''சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்''

எனச்சிலப்திகாரம் இத்தலத்தைப் போற்றுகின்றது.

ஏரகம் என்பது ஏர் அகம் என அமையும் ஏர் என்பது அழகு என்றும் அகம் என்பது முருகன் எழுந்தருளியுள்ள இடம் என்றும் பொருள்பெறும்-

## தல மகிமைகள் :

இத்தலம் குருமலை, தாத்ரிகிரி, கந்தாசலம், சிரகிரி, சிவகிரி எனப் பல்வேறு பெயர்களால் சிறப்பிக்கப் பெறுகின்றது. சுவாமி மலை கட்டுமலை. மலையுச்சியைச் சென்றடைவதற்கு 60 படிக்கட்டுகள் உள்ளன. இத்தலம் வயல்களாலும் சோலைகளாலும் சூழப் பெற்று இயற்கை அழகு எழில் கொஞ்சும் திருத்தலமாக விளங்குகின்றது.

இத்தலத்தில் சிவபெருமான் சீடராகவும் முருகன் குருவவாகவும் விளங்கியதை விளக்கும் வகையில் சிவபெருமான் சந்நிதி மலையின் கீழ்ப்பாகத்திலும் முருகன் சந்நிதி மலையின் மேல் பாகத்திலும் அமைந்துள்ளன.

கர்ப்பக்கிரகத்தில் சுவாமி நாதப் பெருமான் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கின்றார்.

அருணகிரிநாதர் இத்திருத்தலதைப் போற்றிப் பாடியுள்ளார்.

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத
சகடசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்ம யக்கம் உறுவேனோ ?
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையிவேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே !
கடகபுய மீதிரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்க டப்பம் அணிவோனே !
தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள் சவுக்கிய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீ கொடுத்து
தவிபுரிய வேணும் நெய்த்த வடிவேலா !
அருணதள பாதபத்ம மதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா !
அதிசயம நேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழக ! திருவேர கத்தின் முருகோனே !

-- திருப்புகழ்

# 42. சோளிங்கபுரம்

பேயாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற வைணவத்திருப்பதியாகத் திகழ்கின்றது சோளிங்கபுரம். வடார்க்காடு மாவட்டத்தில் அரக்கோணத்திலிருந்து மேற்கே சுமார் 25 கி.மீ. தொலைவில் இத்திருப்பதி விளங்குகின்றது.

## தல வரலாறு :

சோளிங்கர் என்றும் திருக்கடிகை என்றும் கடிகாசலம் என்றும் சோளங்கிப் புரம் என்றும் இத்திருப்பதி வழங்குகின்றது.

இத்திருப்பதி சோழநாடு போன்று வளம் மிகுந்த நரசிங்கப் பெருமான் உறைவதற்கு ஏற்ற இடமாக அமைந் திருப்பதால் சோழசிம்மபுரம் என்று பெயர் பெற்று அதுவே நாளடைவில் சோழிங்கபுரம் ஆயிற்று.

சோழ மன்னன் இங்கு இலிங்கம் ஒன்றைக் கண்டு அதற்குக் கோவில்அமைத்தான், அதுசோழீசுவரர் கோவில் எனப் பெயர் பெற்றது. சோழர் இலிங்கம் கண்டதால் இத் தலம் சோழலிங்கபுரம் எனப் பெயர்பெற்று நாளடைவில் சோழிங்கபுரம் ஆயிற்று என்றும் கூறுவர்.

## தல மகிமைகள் :

இப்பதியிலுள்ள கடிகாசலம் என்ற குன்றின்மேல் நரசிங் கப் பெருமாள் சேவை சாதிக்கின்றார். சோழர் காலத்தில் இப்பகுதி கடிகைக் கோட்டம் எனப் பெயர் பெற்றது.

பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல்-வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன் றன்விண் ணகர்

— பேயாழ்வார்

மிக்கானை மறையாய் விரித்த
விளக்கை என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற
பொன் மலையை
தக்கானைக் கடிகைத்
தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை
அடைந்துய்ந்து போனேனே''

-- திருமங்கையாழ்வார்

# 43. தஞ்சாவூர்

தஞ்சாவூர் என்றதும் தஞ்சைப் பெரிய கோவில் யாவர் நினைவிற்கும் உடனே வரும். தஞ்சாவூர் வரலாற்றுச் சிறப்புடையதாகவும் சிறந்த சைவ வைணவத் திருப்பதியாகவும் விளங்குகின்றது. இத்திருத்தலம் திருச்சிராப்பள்ளியிலிருந்து கிழக்கே 55 கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

பண்டைக் காலத்திலிருந்தே இத்தலம் சிறப்புற்று வருகின்றது. சங்க காலத்தில் இத்தலம் 'ஆவூர்' என வழங்கப் பெற்றது. பண்டைக் காலத்தில் இப்பகுதியை ஆவூர் தஞ்சன் ஆண்டதால் தஞ்சாவூர் எனப் பெயர் பெற்றது என்பர்.

குபேரனுடைய ஊர் அளகை, அளகாபுரி எனப்பெயர் பெறும். ஆதியில் குபேரன் இறைவனை வழிபட்டதால் அளகாபுரி எனப் பெயர் பெற்றது என்றும் இத்தலத்தைக் குபேரன் அமைத்தான் என்றும் அதனால் அளகாபுரி ஆயிற்று என்றும் கூறுவர்.

தஞ்சன் என்பவன் பராசர முனிவரின் தவத்தைக் கெடுத்தான். அதனால் அவன் விஷ்ணுவால் வதையுற்றான் அவனை வதம் செய்த இடம் தஞ்சாபுரி என வழங்கவேண்டும் என்று அவன் வேண்டியதால் அதன்படியே தஞ்சாபுரி எனப் பெயர் பெற்றது என்றும் குறிப்பர்.

இத்தலத்தை வான் வெளியிலிருந்து பார்த்தால் கருட உருவமாகத் தெரிகின்றது என்றும் அதனால் இத்தலம் கருடங்கோட்டை என்றும் பெயர் பெற்றது என்றும் கருதுவர்.

கல்வெட்டில் இத்தலம் அஞ்சினான் புகலிடம், அபயம், அடைக்கலம் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

## வரலாற்றுச் சிறப்புக்கள் :

தஞ்சாவூர் வரலாற்றில் சோழ மன்னர்களே சிறப்பான இடம் பெற்றுள்ளனர். சங்க காலத்தில் சோழர் ஆட்சி செம்மையாக நடந்தது. பின்னர் களப்பிரர். களப்பிரரிடமிருந்து விஜயாலய சோழன் தஞ்சையை மீட்டான். தலை நகராக்கினான், அவனுக்குப் பிறகு அவன் மகன் ஆதித்த சோழன், அவன் மகன் பராந்தகச் சோழன், அடுத்து முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன், பின்னர் குலோத்துங்கன் ஆகியோர் ஆண்டனர். அக்காலத்தில் தஞ்சாவூர் மிகுந்த செல்வாக்குடன் விளங்கியது. இராசராசன் தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டினான்.

சோழர் ஆட்சிக்குப் பிறகு பாண்டியர், நாயக்கர், மராட்டியர் ஆட்சி நிலவியது. இறுதியாக ஆங்கிலேயர் ஆட்சி !

## தல மகிமைகள் :

தஞ்சைப் பெரிய கோவில் வரலாற்றுச்சிறப்பும் கலையழகும் கொண்டதாக விளங்குகின்றது. இங்குள்ள நந்தி மிகப் பெரியது. கோவில் இராசராசேச்ரம் எனப் பெயர் பெற்றுள்ளது. சோழரின் சைவப் பற்றிற்குச் சான்று பகர்கின்றது இக்கோவில்,

திருநாவுக்கரசர் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்தில் 'தஞ்சைத் தளிக் குளத்தார்' என்று குறிப்பிட்டுள்ளார் இத்தலத்தை !

## வைணவத் திருப்பதி :

தஞ்சை மிகப் பழைமையான வைணவத்திருப்பதியாகவும் திகழ்கின்றது. பூதத்தாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் இப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர். தஞ்சை மாமணிக் கோவில், தஞ்சையாளிக் கோவில், மணிக்குன்றப் பெருமாள்கோவில், எனமூன்று வைணவக் கோவில்கள் தஞ்சையில் இருக்கின்றன.

தஞ்சை மாமணிக் கோவிலில் எம்பெருமான் திருநாமம் நீலமேகப் பெருமாள். தாயார் செங்கமலவல்லி எம்பெருமான் இங்கு வீற்றிருந்த கோலத்தில் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார்.

தஞ்சையாளிக்கோவிலில் நரசிங்கப் பெருமாள் வீற்றிருந்த கோலத்தில் தஞ்சை நாயகியுடன் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார். தஞ்சாசுரனை வதம் செய்த கோலத்தில் எம்பெருமான் காட்சியளிப்பதாக புராண ஐதீகம். இது மார்க் கண்டேயர் வழிபட்டுப் பேறு பெற்ற திருக்கோவில்.

மணிக்குன்றப் பெருமாள் கோவிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் மணிகுன்றப் பெருமாள். தாயார் அம்புஜவல்லி, எம்பெருமான் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கினறார்.

இம்மூன்று கோவில்களும் விண்ணாற்றங்கரையின் மேற்குக் கோடியில் தஞ்சையிலிருந்து திருக்குடந்தைக்குச் செல்லும் கல்சாலைவழியில் 3 கி மீ. தொலைவில் இருக்கின்றன.

தாரகனை வென்ற காளிதேவி கோடியம்மன் என்ற திருநாமத்துடன் வைணவக் கோவில்களுக்குப் பக்கத்தில் எழுந்தருளியிருக்கின்றாள். இவள் காவல் தெய்வமாக விளங்கி வருகின்றாள் !

எம்பிரான் எந்தை யென்னுடைச் சுற்றம்
எனக்கர சென்னுடை வாணாள்
அம்பினா லரக்கர் வெருக்கொள நெருக்கி
அவருயிர் செகுத்தஎம் மண்ணல்
வம்புலாஞ் சோலை மாமதிள் தஞ்சை
மாமணிக் கோயிலே வணங்கி
நம்பிகாள் உய்ய நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்

— திருமங்கையாழ்வார்

தமர்உள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால்
தமருள்ளும் தண்பொருப்பு வேலை – தமருள்ளும்
மாமல்லை கோவல் மதிட்குடந்தை யென்பரே
ஏவல்ல எந்தைக் கிடம்

—பூதத்தாழ்வார்.

# 44 தலைச்சங்காடு

இத்திருப்பதி பாடல்பெற்ற வைணவத் திருப்பதியாக விளங்குகின்றது, தஞ்சாவூர் மாவட்டத்தில் மாயவரம் தரங்கம்பாடி இரயில் கிளைப் பாதையிலிள்ள ஆக்கூர் நிலையத்தினின்று 3 கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

செம்பனார்கோவில் நிலையத்தினின்று 6 கி. மீ. தொலைவில் விளங்குகின்றது.

## தல வரலாறு :

இத்திருப்பதி காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அதாவது பூம்புகாரிலிருந்து 7 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. பழங்காலத்தில் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து கொண்டு வந்த தலைச்சிறந்த சங்குகள் இங்கு விற்பனை செய்யப் பட்டன. அதனால் தலைச்சங்காடு என்று பெயர் பெற்றுள்ளது.

பண்டைக்காலத்தில் இப்பதி தலைச்செங்கானம் என வழங்கப் பட்டது. சிலப்பதிகாரம்,

தாழ்நீர் வேலித் தலைச்செங் கானத்து
நான்மறை முற்றிய நலம்புரி கொள்கை
மாமறை முதல்வன் மாடலன் என்போன்''

என இப்பதியைக் குறிக்கின்றது.

## தல மகிமைகள் :

இப்பதியிலுள்ள எம்பெருமான் கோவில் புகழ் பெற்றது. எம்பெருமான் திருநாமம் நாண்மதியப் பெருமாள் இவரை வெண்சுடர்ப்பெருமாள் என்றும் போற்றுவர். தாயார் தலைச்சங்க நாச்சியார். செங்கமலவல்லி என்றும் வழங்குவர்.

திருமங்கையாழ்வார் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளார்.

கண்ணார் கண்ணபுரம்
கடிகை கடிகமழும்
தண்ணார் தாமரை சூழ்
தலைச்சங்க மேல்திசையுள்

விண்ணோர் நாண்மதியை
விரிகின்ற வெஞ்சுடரை
கண்ணாரக் கண்டுகொண்டு
களிக்கின்றதிங் கென்றுகொலோ

— பெரியதிருமொழி

# 45 திருக்கச்சூர்

தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவ தலங்களில் ஒன்று திருக்கச்சூர் இத்தலம் செங்கல்பட்டு மாவட்டத்தில் செங்கல்பட்டுக்கு வடக்கில் உள்ள சிங்கப் பெருமாள்கோவில் இரயில் நிலையத்திலிருந்து வடமேற்கில் 3 கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

கச்சபம் என்றால் ஆமை என்று பொருள் படும். தேவர்கள் பாற்கடலைக் கடைந்தனர். அப்பொழுது அமுதம் திரளவேண்டும்மென்று திருமால் இங்கு ஆமைவடிவம் கொண்டு இறைவனை வழிபட்டார். அதனால் இத் தலம் திருக்கச்சூர் எனப்பெயர் பெற்றது. இத்தலத்தின் கோவில் மரம் ஆலமரம் அதனால் இத்தலம் ஆலக்கோயில் என்றும் வழங்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் விருந்திட்ட வரதர். இறைவி அஞ்சனாட்சியார் உமையம்மை. தீர்த்தம் விருந்து தீர்த்தம் கூர்மதீர்த்தம்.

சுந்தரமூர்த்திநாயனார் வழிபட்ட மகிமையுடையது இத்தலம். சுந்தரர் ஒருநாள் இறைவனை வழிபட்டுவிட்டு வெளியில் வந்தபொழுது நண்பகலில் பசியால் வருந்தினார். இதனை உணர்ந்த இறைவன் அந்தணர் கோலத்தில் தோன்றி வீடுதோறும் சென்று சோறு இரந்து கொண்டு வந்து சுந்தரரிடம் கொடுத்தார். சுந்தரர் பசியாற உண்டார். உடனே இறைவன் மறைந்தருளியது கண்டு வியந்து பதிகம் பாடினார். இவ்வாறு திருக்குருகாலத்திலும் இறைவன் சுந்தரருக்குப் பொதிசோறு அளித்தார்.

திருச்சுற்றில் விருந்திட்ட வரதர் சிவலிங்கம் உள்ளது. திருக்கோவிலுக்குள் அமுததியாகர் திருமுன் உள்ளது. இத்திருக்கோவிலுக்கு மேற்கில் 1 கி. மீ. தொலைவில் மலை மருந்தீசர் திருக்கோவில் உள்ளது. வழியில் கருக்கடிப் பிள்ளையார் விளங்குகின்றார். மேற்கில் இரந்திட்ட வரதர் கோவில் இருக்கின்றது.

ஊனைப் பெருக்கி யுன்னைநினையா
தொழிந்தேன் செடியேன் உணர்வில்லேன்
கானக்கொன்றை கமழமலருங்
கடிநாறுடையாய் கச்சூராய்
மானைப்புரையு மடமென்னோக்கி
மடவாளஞ்ச மறைத்திட்ட
ஆனைத்தோலாய் ஞானக்கண்ணாய்
ஆலக்கோயில் அம்மானே''

—சுந்தரமூர்த்திநாயனார்

# 46 திருக்கடவூர்

சோழநாட்டுத் திருத்தலங்களில் ஒன்று காவிரிக்குத் தென்கரையில் இத்தலம் விளங்குகின்றது. தஞ்சாவூர் மாவட்டத்தில் மாயவரம் - தரங்கம்பாடி இருப்புப் பாதையில் மாயவரத்திலிருந்து 22 கி, மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

சிவபெருமான் மார்க்கண்டேயனுக்காகக் காலனைக் காலால் உதைத்து அழித்த இடம் இத்தலமே! எனவே மக்கள் இத்தலத்தை சாவின் அச்சத்தைக்கடக்க அருளும் திருத்தலம் என நம்பி வருகின்றனர். அதனால் இவ்வூர் திருக்கடவூர் எனப் பெயர் பெற்றது. இன்றும் மக்கள் தங்கள் அறுபதாண்டு நிறைவுநாளில் இத்தலத்தில் வந்து வழிபடுகின்றனர்.

இத்திருத்தலத்தை அடுத்து, திருக்கடவூர் மயானம் ஆக்கூர், திருத்தலைச் சங்காடு என்னும் தலங்களும் திருவிடைக்கழி என்ற முருகன் உறைவிடமும் இருக்கின்றன.

## வீரட்டானத் தலங்களில் ஒன்று

எட்டு வீரட்டானத் தலங்களில் திருக்கடவூர் ஒன்று. இறைவன் அமிர்தகடேசுரர். இறைவி அபிராமியம்மை. அபிராமிப்பட்டர் என்னும் மெய்யன்பர் இறைவியைச்

சிறப்பித்து அபிராமியந்தாதி என்னும் நூல் இயற்றினார்.

தீர்த்தம் மார்க்கண்டேய தீர்த்தம். அமிர்தபுஷ்கரணி, காலதீர்த்தங்கள் முதலியவை,

கோவில் பெரியது. இறைவன் மேற்கு நோக்கி அருள்பாலிக்கின்றார். காலசம்மாரமூர்த்தி கோயில் அபிராமி அம்மை கோயில்களும் இருக்கின்றன. இத்தலத்திலுள்ள பிள்ளையார் கள்ளவாரணப் பிள்ளையார். கோவிலில் வில்வாரணியேசுரர், பாபஹரேசுரர், புண்ணியவர்த்தனேசுரர் என்னும் இலிங்கங்கள் விளங்குகின்றன.

சூரிநாயனார், குங்கிலியக் கலயநாயனார் ஆகிய இருவரும் இத்தலத்தில் தோன்றியவர்களே! மார்க்கண்டேயர், ஏழு கன்னிகைகள், துர்க்கை முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றனர். இத்தலத்தில் சித்திரைத் திங்களில் சிறப்பாக விழா நடைபெறுகிறது.

கோவிலில் முதலாம் இராசராசசோழன் முதலாகப் பல சோழ மன்னர்களும் மாறவர்மன் முதலாகப் பல பாண்டிய மன்னர்களும் கிருஷ்ணதேவராயர் முதலாகப் பல விஜயநகர மன்னர்களும் வெட்டிய கல்வெட்டுகள் இருக்கின்றன.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் இத்தலத்தைப் பாடியுள்ளனர்.

பண்ஸாலி நான்மறை பாடியா
டிப்பல வூர்கள் போய்
உண்பலி கொண்டுழல் வானும்வா
னின்னொளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா
னுங்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா
னத்தர னல்லனே

— திருஞானசம்பந்தர்

பற்றிலா வாழ்க்கைவாழ்ந்து பாழுக்கேநீரிறைத்தேன்
உற்றலாற் கயவர்தேறா ரென்னுங்கட் டுரையோ
டொத்தேன்
எற்றுளே னென்செய்கேனா னிடும்பையால் ஞான
மேதும்
கற்றிலேன் களைகண்காணேன் கடவூர்வீ ரட்டனீரே

—திருநாவுக்கரசர்

மண்ணீர் தீவெளிகால் வருபூதங்க ளாகிமற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே
கண்ணா ரும்மணியே கடவூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா வென்னமுதே எனக்கார்துணை நீயலதே"

— சுந்தரர்

# 47 திருக்கடைமுடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்று திருக்கடைமுடி இத்திருத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் ஆனந்த தாண்டவபுரம் இரயில் நிலையத்திற்கு வடக்கிலுள்ள திருநின்றவூருக்குத் தென்கிழக்கே 6 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. இத்தலம் கீழையூர் என்றும் வழங்கப் பெறும்.

## தல வரலாறும் மகிமையும் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருநாமம் கடைமுடிநாதர். இறைவன் நாமத்தால் இத்தலம் திருக்

கடைமுடி எனப்பெயர் பெற்றுள்ளது. கல்வெட்டில் இத் தலம் 'திருச்சென்னம் பூண்டி' எனக் குறிக்கப் பட்டுள்ளது.

இறைவியின் திருநாமம் அபிராமியம்மை நான்முகன் வழிபட்டுப் பேறுபெற்ற திருத்தலம் இது. திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் பாடியுள்ளார்.

மண்ணுதல் பறித்தலு மாயமிவை
எண்ணிய காலவை யின்பமல்ல
ஒண்ணுத லுமையையொர் பாகம்வைத்த
கண்ணுதல் வளநகர் கடைமுடியே

திருஞானசம்பந்தர்.

# 48 திருக்கண்டியூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவதலமாகவும் வைணவத் தலமாகவும் இத்திருத்தலம் விளங்குகின்றது. தஞ்சாவூர் மாவட்டத்தில் தஞ்சாவூர் இரயில் நிலையத்திலிருந்து தஞ்சாவூர் திருவையாறு சாலையில் சுமார் 9 கி. மீ. தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது. இத்தலத்தின் அருகே காவிரியின் கிளை ஆறான குடமுருட்டி ஆறு ஓடுகின்றது.

## தல வரலாறு :

சிவனது சாபத்தைக் கண்டனம் செய்வது போல இங்கு எம்பெருமான் சேவை சாதிக்கின்றார். அதனால் இத்தலம் திருக்கண்டியூர் எனப் பெயர் பெற்றுள்ளது. இத் தலம் வடமொழியில் கண்டன புரம் என வழங்கப் பெறும்.

இத்தலம் எட்டு வீரட்டானங்களில் ஒன்று. எழு வகைத் திருவிடங்களில் சத்தத்தானமாக இத்தலம் விளங்குகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திரு நாமம் வீரட்டானேசுரர். மேற்கு நோக்கி அருள் பாலிக் கின்றார். இறைவி மங்களநாயகி. திர்த்தம் காவிரி. சாதா தபர், நான்முகன். நாமகள் இவர்களின் திருவுருவங்கள் கோவிலில் இருக்கின்றன.

மாசித்திங்களில் 13, 14, 15 ஆகியநாட்களில் இத் தலத்தில் சூரிய வழிபாடு நடைபெறுகின்றது.

கோவிலில் உத்தமசோழன், முதலாம் இராசேந்திர சோழன் கோவிசைய நிருபதுங்க விக்கிரவர்ம பல்லவன் ஆகியோரின் கல்வெட்டுகள் உள்ளன.

திருஞானசம்சந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத் தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

கருத்தனைப் பொழில் சூழுங்கண்டியூர்
வீரட்டத்துறை கள்வனை
அருத்தனைத்திறம் அடியார்பால்மிகக்
கேட்டுகந்த வினாவுரை
திருத்தமாந்திகழ் காழிஞானசம்
பந்தன்செப்பிய செந்தமிழ்
ஒருத்தராகிலும் பலர்களாகிலும்
உரைசெய்வா ருயர்ந்தார்களே

— திருஞானசம்பந்தர்

அட்டு மொலிநீ ரணிமதி யும்மல ரானவெல்லாம்
இட்டுப் பொதியுஞ் சடைமுடி யாளிண்டை மாலை
யங்கை

கட்டு மரவது தானுடை யான்கண்டி யூரிருந்த
கொட்டும் பறையுடைக் கூத்தனை யாமண்டர் கூறு
வதே

— திருநாவுக்கரசர்

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் கமலநாதன். தாயார் கமலவல்லி நாச்சியார். உற்சவர் அரன்சாப விமோசனப் பெருமாள். திருமங்கையாழ்வார் இத்திருப்பதியைப் போற்றிப் பாசுரம் அருளியுள்ளார்.

பிண்டியார் மண்டை ஏந்திப்
பிறர்மனை திரிதந் துண்ணும்
முண்டியான் சாபம் தீர்த்த
ஒருவனூர் உலக மேத்தும்
கண்டியூர் அரங்கம் மெய்யம்
கச்சிபேர் மல்லை என்று
மண்டினார் உய்யல் அல்லால்
மற்றையார்க் குய்ய லாமே''

— திருமங்கையாழ்வார்

# 49 திருக்கண்ணங்குடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில் ஒன்று திருக்கண்ணங்குடி தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவாரூர்-நாகப்பட்டினம் இருப்புப் பாதையில் கீழ் வேளூர் இரயில் நிலையத்திற்குக் கிழக்கே ஒரு கி. மீ. தொலைவில் இத்திருப்பதி விளங்குகின்றது.

## மகிமைகள் :

தமிழ்நாட்டிலுள்ள ஐந்து கண்ணன் திருப்பதிகளில் ஒன்று திருக்கண்ணங்குடி கண்ணன் இத்திருப்பதியில் கோவில் கொண்டிருப்பதால் திருக்கண்ணங்குடி என இப்பதி வழங்குகின்றது. எம்பெருமான் சியாமளமேனிப் பெருமாள், தாமோதர நாரயணன், உலகநாதன் எனப் போற்றப் பெறுகின்றார்.

தாயார் அரவிந்தவல்லி நாச்சியார்,உலகநாயகி, எனப் போற்ற பெறுகின்றார். எம்பெருமான் நின்றகோலத்தில் சேவைசாதிக்கின்றார். தீர்த்தம் இராவண புஷ்கரிணி.

திருமங்கையாழ்வார் இப்பதியை மங்களா சாசனம் செய்துள்ளார்.

வாதைவந் தடர வானமும் நிலனும்
மலைகளும் அலைகடல் குளிப்ப
மீதுகொண் டுகளும் மீனுரு வாகி
விரிபுனல் வரியகட் டொளித்தோன்
போதலர் புன்னை மல்லிகை மௌவல்
புதுவிரை மதுமலர் அணைந்து
சீத்ஒண் தென்றல் திசைதொறும் கமழும்
திருக்கண்ணங் குடியுள் நின்றானே''

— திருமங்கையாழ்வார்

# 50 திருக்கண்ணபுரம்

சோழநாட்டிலுள்ள வைணவத்திருப்பதிகளில் ஒன்று திருக்கண்ணபுரம், தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவாரூர்-

மாயவரம் இருப்புப் பாதையில் நன்னிலம் இரயில் நிலையத்திலிருந்து சுமார் 9 கி. மீ. தொலைவில் இத்திருப்பதி இருக்கின்றது..

## பதி வரலாறு :

திருக்கண்ணபுரம் கண்ணன் கோவில் கொண்டுள்ள திருப்பதிகளில் ஒன்று கண்ணன் கோவில் கொண்டிருப்பதால் இப்பதி திருக்கண்ணபுரம் எனப் பெயர் பெற்றுள்ளது. கண்ணுவர் இப்பதியில் வழிபட்டதால் கண்ணபுரம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

இக்காலத்தில் இத்திருப்பதி கடற்கரையிலிருந்து 10 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. முற்காலத்தில் இப்பதி கடற்கரை அருகே இருந்திருக்வேண்டும். திருமங்கையாழ்வார் "கலங்கல் முந்நீர்க்கண்ணபுரம்" என மங்களாசாசனம் செய்திருப்பது மேற்கூறிய கருத்தினை வலியுறுத்துகின்றது.

## பதி மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் சௌரி ராஜப் பெருமாள். நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் கண்ணபுரநாயகி. தீர்த்தம் நித்திய புஷ்கரிணி.

பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஐவரும் மங்களாசாசனம் செய்த பெருமையுடையது இத்திருப்பதி.

காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்

ஓட்ட ராகவந்தென் கைப்பற்றி தன்னொடும்
கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே

— ஆண்டாள்

சரணம் ஆகும்தன தாளடைந் தார்க்கெல்லாம்
மரணமா னால்வைகுந் தம்கொடுக் கும்பிரான்
அரண் அமைந்த மதில் சூழ்திருக் கண்ணபுரத்
தரணியா ளன்தன தன் பர்க்கன் பாகுமே

— நம்மாழ்வார்

# 51 திருக்கண்ணமங்கை

சோழநாட்டிலுள்ள வைணவத் திருப்பதிகளில் ஒன்று திருக்கண்ணமங்கை. இத்திருப்பதி தஞ்சாவூர்மாவட்டத்தில் திருவாரூருக்கு மேற்கே சுமார் 6 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. கண்ணன் எழுந்தருளிய தலங்கள் ஐந்தனுள் இப்பதி ஒன்று. கண்ணன் இப்பதியில் கோவில் கொண்டிருப்பதால் திருக்கண்ணமங்கை என வழங்கப்பெறுகின்றது.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் பக்தவச்சலர். தாயார் அபிஷேக வல்லி. எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தீர்த்தம் தரிசன புஷ்கரிணி.

திருமங்கையாழ்வார் பாசுரம் பெற்ற மகிமையுடையது இத்திருப்பதி.

எங்க ளுக்கருள் செய்கின்ற ஈசனை
 வாச வார்குழ லாள் மலை மங்கைதன்
பங்க னைபங்கில் வைத்துகந் தான் தன்னைப்
 பான்மை யைப்பனி மாமதி யம்தவழ்
மங்கு லைசுட ரைவட மாமலை
 உச்சி யைநச்சி நாம்வணங் கப்படும்
கங்கு லைபக லைச்சென்று நாடிக்
 கண்ண மங்கையுள் கண்டு கொண் டேனே

— திருமங்கையாழ்வார்

முத்தமிழ்க்கவிஞர் வீரராகவ முதலியார் இத் திருப்பதியின்மீது திருக்கண்ணமங்கைமாலை என்ற சிற்றிலக்கியத்தைப் படைத்துள்ளார்.

# 52 திருக்கழுக்குன்றம்

தொண்டைநாட்டிலுள்ள சிவப்பதிகளில் ஒன்று திருக்கழுக்குன்றம். செங்கல்பட்டு மாவட்டத்தில் செங்கல் பட்டு-மாமல்லபுரம் சாலையில் செங்கல்பட்டிலிருந்து தென் கிழக்காகச் சுமார் 15 கி. மீ. தொலைவில் இத்திருத்தலம் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

பிரம்மாவின் மானசீகப் புத்திரர்கள் எட்டுப்பேரும் சிவனைநினைந்து சாயுச்சிய பதவிக்காகத்தவம் செய்தனர். அதனால் சினம் கொண்ட சிவபெருமான் எண்மரும் கழுகு களாகப் பிறந்து உழல்வீர்களாக எனச் சாபமிட்டார்.

பிரம்மாவின் மானசீகப் புத்திரர்கள் சிவபெருமானிடம் சாபவிமோசனம் வேண்டினர். சிவபெருமான் எண்மரும் யுகத்திற்கு இரண்டு கழுகுகளாய்ப் பிறந்து வேதகிரியில் எம்மைத் தொழுதுயுக முடிவில் சாயுச்சிய பதவியைப் பெறுவீர்களாக என்றருளினார். அதன்படியே கிருதயுகத்தில் சண்டன். பிரசண்டன், திரேதாயுகத்தில் சம்பாதி, சடாயு துவாபரயுகத்தில் சம்புகுத்தன், மாகுத்தன் என அவர்களில் அறுவர் கழுகுகளாகப் பிறந்து இத்தலத்தில் வழிப்பட்டுச் சாயுச்சிய பதவியை அடைந்தனர். கலியுகத்தில் பூஷா, விதாத என்னும் இருவரும் கழுகுகளாகப் பிறந்து வழிபட்டு வருகின்றனர். கழுகுகள் வழிபட்டுப் பேறு பெற்றகுன்றம்கழுகுக்குன்றம் எனப்பெயர்பெற்றுப் பின்னர் கழுக்குன்றம் என மருவியது.

இது புராணவரலாறு என்று ஒதுக்கிவிடமுடியாது. இக்காலத்திலும் குறிப்பிட்ட நேரத்தில் அக்குன்றின்மேல் அர்ச்சகர் பொங்கல் முதலிய படையலை வைக்கின்றார்கள். இரண்டு கழுகுகள் குறிப்பிட்ட நேரத்தில் வந்து அவற்றைத்தின்று விட்டுப் பறந்து சென்று விடுகின்றன.

## குகக் கோட்டம் :

தமிழ்நாட்டில் முருகனுக்குரிய கோட்டங்கள் மூன்று அவை கந்தக்கோட்டம், குமரக்கோட்டம், குகக்கோட்டம் ஆகும். திருக்கழுக்குன்றம் குகக்கோட்டமாகும். குகப்பெருமான் அன்பர்களுடைய ஆணவ மலத்தை அழிப்பவன். எனவே முருகன் குகன் எனப்போற்றப் பெறுகின்றான். இத்தலத்தில் குகப்பெருமான் வள்ளி தெய்வானையுடன் வீற்றிருக்கின்றார்.

## உலகளந்த சோழபுரம் :

வீரபாண்டியன் காலக்கல்வெட்டில் செயங்கொண்ட சோழ மண்டலத்தில் களத்தூர்க் கோட்டத்துத் திருக் கழுக்குன்றம் என்றே இத்தலம் குறிக்கப்பட்டுள்ளது. சோழர்காலக் கல்வெட்டில் இத்திருத்தலம் களத்தூர்க் கோட்டத்தில் களத்தூர் நாட்டிலுள்ள உலகளந்த சோழ புரம் எனக்குறிக்கப் பட்டுள்ளது.

## தல மகிமைகள் :

வேதங்கள் மலையுருவாய் இறைவனை வழிபட்ட தாம் திருக்கழுக்குன்றம். மலையின் மேலும் குன்றின் அடிவாரத்திலும் கோவில்கன் இருக்கின்றன. மலையின் மேலுள்ள கோவிலில் எழுந்தருயிருக்கும் இறைவன் வேத கிரியீசுரர் இறைவிபெண்ணின்நல்லாளம்மை. தீர்த்தம்சங்கு பிளந்தகுளம்; பட்சி தீர்த்தம் பன்னிரண்டு ஆண்டு கட்கு ஒருமுறை இக்குளத்தில் இந்நாளிலும் சங்கு பிறப்பதாகச் கூறுவர்.

இத்தலத்தில் மாணிக்கவாசகருக்கு இறைவன் குரு வடிவாய்த்தோன்றி காட்சி நல்கினார். நந்தி, வானவர் கோன், கோடியுருத்திரர் ஆகியோர் இத்தலத்தில் வழி பட்டுப் பேறு பெற்றனர்.

குன்றின் அடிவாரத்தில் கோவில் கொண்டுள்ள இறைவன் பக்தவச்சலர். இறைவி திரிபுரசுந்தரி. தீர்த்தம் நந்தி தீர்த்தம்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவரும் திருக்கழுக் குன்றத்தைப் பாடி யுள்ளனர்.

தோடுடையா னொருகா திற்றூய குழைதாழ
ஏடுடையான் தலைகலனாக இரந்துண்டும்
நாடுடையான் நள்ளிருள் ஏம நடமாடும்
காடுடையான் காதல் செய்கோயில் கழுக்குன்றே

— திருஞானசம்பந்தர்

பல்லாடு தலைசடைமேல் உடையான் தன்னைப்
பாய்புலித்தோல் உடையானைப்பகவன் தன்னைச்
சொல்லோடு பொருளனைத்தும் ஆனான் தன்னைச்
சுடருருவில் என்பராக் கோலத் தானை
அல்லாத காலனைமுன் அடர்த்தான் தன்னை
ஆலின்கீழிருந்தானை அமுதா னானைக்
கல்லாடை புனைந்தருளுங் காபாலியைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே

— திருநாவுக்கரசர்

மடம்உடைய அடியார் தம்மனத் தேயுற
விடம்உடைய மிடறன் விண்ணவர் மேலவன்
படம் உடைய அரவன்றான் பயி லும்மிடம்
கடம் உடைய புறவில் தன்கழுக் குன்றமே

— சுந்தரமூர்த்தி நாயனார்

இத்தேவாரப் பாமாலைகள் நாளும் ஓதி இன்புறத் தக்கவை.

# 53. திருக்கன்றாப்பூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்று திருக்கன்றாப்பூர் இத்திருந்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவாரூருக்குத் தெற்கிலுள்ள நாட்டியத்தான்குடி இரயில் நிலையத்திற்கு வடகிழக்கில் சுமார் 7 கி. மீ. தொலைவில் இத்திருத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

சைவ சமயத்தைப் பெரிதும் போற்றிய பெண் ஒருத்தி வைணவ சமயம் சார்ந்த ஒருவனைத் திருமணம் செய்து கொண்டாள், கன்று கட்டும் ஆப்பையே சிவலிங்கமாக வழிபட்டு வந்தாள், இச்செயல் அவள் கணவனுக்குத் தெரியாது ஒருநாள் கணவன் அந்த ஆப்பை வெட்ட அதி-லிருந்து சிவபெருமான் காட்சி நல்கினார் இத்தெய்வச் செயலால் இப்பகுதியில் அமைந்த திருத்தலம் கன்றாப்பூர் எனப்பெயர் பெற்று திரு என்ற அடைமொழிசேர்த்து திருக் கன்றாப்பூர் என வழங்கி வருகின்றது, இதற்குச் சான்றாகச் சிவக்கொழுந்தில் கோடரியின் வெட்டடையாளம் இன்றும் காணப்பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் நடுதறியப்பர், இறைவன் கன்று கட்டும் நடுதறியிலிருந்து தோன்றியதால் நடுதறியப்பர் ஆனார் இறைவி மாதுமையம்மை. தீர்த்தம் ஞானதீர்த்தம்.

இடும்பன் என்ற அசுரன் இத்தத்தில் வழிபட்டு முக்தி அடைந்தான் திருநாவுக்ரசர் இத்தலத்தைப் போற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார்.

எவரேனுந் தாமாக இலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டால் உள்கி
உவராதே அவரவரைக் கண்டபோது
உகந்தடிமைத் திறநினைத்தங்குவந்து நோக்கி
இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் திறமேபேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே',

— திருநாவுக்சரசர்

# 54. திருக்காவளம்பாடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவப் பதிகளில் ஒன்று திருக்காவளம்பாடி தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழி இரயில் நிலையத்திற்குக் கிழக்கே 9 கி. மீ. தொலைவில் இத்திருப்பதி இருக்கின்றது.

''கா'' என்பது சோலை எனப்பொருள்படும் இப்பகுதி நீர்வளமும் நிலவளமும் வாய்ந்த செழிப்பான பகுதியாகும் சோலைகளும் பொழில்களும் இவ்வூரில் நிறைந்திருக்கின்றன. சோலைகள் நிறைந்த பாடி காவளம் பாடிஇது பாடல் பெற்ற பதியாதலால் சிறந்து விளங்குகின்றது.

## பதி மகிமைகள் :

இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் கோபால கிருஷ்ணன் தாயார் மடவரல் மங்கை செங்கமல நாச்சியார் என்றும் போற்றுவர் எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார் . தீர்த்தம் தட மலர்ப் பொய்கை.

இத்திருப்பதியைத் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்

சந்தமாய்ச் சமய மாகிச்
சமயஐம் பூத மாகி
அந்தமா யாதி யாகி
அழிமறையவையு மானாய்

மந்தமார் பொழில்கள் தோறும்
　　மடமயி லாலும் நாங்கை
கந்தமார் காவ ளந்தண்
　　பாடியாய்! களைகண் நீயே

— பெரிய திருமொழி 4 : 6-9

# 55 திருக்குரங்கணில் முட்டம்

தொண்டை நாட்டிலுள்ள பாடல் பெற்ற திருந்தலங்களில் ஒன்று திருக்குரங்கணில் முட்டம் காஞ்சீபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் இருந்து தெற்கே 10 கி. மீ. தொலைவின் பாலற்றின் தென் கரையில் உள்ளது இத்தலம், காஞ்சீபுரத்திலிருந்து வந்தவாசிக்குச் செல்லும் சாலையில் 6 கி. மீ. தொலைவில் தூசி என்ற சிற்றூர் இருகின்றது, அவ்வூருக்குத் தென்கிழக்கில் ஒன்றரை கி. மீ. தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது,

இத்தலத்தில் குரங்கு (வாலி) அணில் முட்டம் (காக்கை) ஆகிய மூன்று வழிபட்டுப் பேறு பெற்றதால் இத்தலம் திருக்குரங்கணில் முட்டம் எனப் பெயர் பெற்றது இவை மூன்றும் வழிபட்டமையை விளக்கும் சிற்பங்கள் வாயிலின் வடபாலும் தென்பாலும் உள்ளன.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வாலீசுவரர். வாலி வழிபட்டதால் இறைவன் வாலீசுவரராக விளங்குகின்றார். இறைவி இறையார் வளையம்மை "இறையார் வளையாளை யொர்பாகத் தடக்கி" என்று

சம்பந்தர் பாடியுள்ளார். தீர்த்தம் வாலிதீர்த்தம் காக்கை மடு என்பது கோவிலைச் சுற்றியுள்ளது காக்கை மூக்கால் கீறிய மடுவாதலின் அப்பெயர் பெற்றது என்பர் கோவில் வாயிலில் கணபதியும் முருகனும் வீற்றிருக்கின்றார்கள்,

திருவோத்தூரை வணங்கிய பின்னர் திருமாகறலை அடைந்து அங்கிருந்து திருக்குரங்கணில் முட்டம் வந்தார் திருஞானசம்பந்தர் இத்தலத்தைச் சிறப்பித்து ஒரு பதிகம் பாடியுள்ளார்

இறையார் வளையாளையொர்பா கத்தடக்கி
கறையார் மிடற்றான் கரிகீ றியகையான்
குறையார் மதிசூ டிகுரங் கணின்முட்டத்
துறைவா னெமையாளுடையொண் சுடரானே

— திருஞானசம்பந்தர்

கல்வெட்டில் இத்தலம் காழியூர்க் கோட்டத்து இருசுழிநாட்டு மாவண்டூர்ப் பக்கத்துப் பல்லவபுரமான திருக்குரங்கணில்முட்டம் என்று குறிக்கப்பட்டுள்ளது கிருஷ்ண தேவராயர் இத்தல வழிபாட்டிற்காகப் பல்தவபுரத்லை மானியமாக விட்டார் என்ற செய்தியும் கல்வெட்டால் தெரிய வருகின்றது.

கோவிலுக்குச் சிறிது தொலைவில் பாறை யாலான மேட்டின்மீது ஒரு குகைக்கோவில் விளங்குகின்றது. இது பல்லவர் காலத்திய குடைவறைக் கோவில் என்பர்.

# 56. திருக்குறுங்குடி

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத். திருப்பதிகளில் ஒன்று திருக்குறுங்குடி. திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலி ரயில் நிலையத்திற்குத் தெற்கே 33 கி. மீ. தொலைவில் இத்திருப்பதி விளங்குகின்றது.

குறுகிய வாமனனுடைய திருப்பதியாக இது விளங்குவ தால் திருக்குறுங்குடி என இத்திருப்பதி வழங்கிவருகின் றது.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் வைணவநம்பி. ஸ்ரீபாஷ்யக்காரரிடம் ஒருசீடர் போல் வந்து வேதாந்த அர்த்தம் கேட்டபடியால் எம்பெருமான் கிழக்கு நோக்கி நின்ற கோலத்திம் சேவை சாதிக்கின்றார். நின்ற நம்பி இருந்தநம்பி, திருப்பாற்கடல்நம்பி, மலைமேல்நம்பி என்றெல்லாம் எம்பெருமான் போற்றப் பெறுகின்றார். தாயார் குறுங்குடிவல்லி. தீர்த்தம் திருப்பாற் கடல் ஆறு.

இத்திருப்பதி எம்பெருமான் அருளால் நம்மாழ்வார் திருவவதாரம் செய்தார் என்பர். பெரியாழ்வார், திருமழி சையாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோரால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற மகிமையுடையது இத்திருப்பதி.

உன்னையும் ஒக்கலையிற் கொண்டுதம் இல்மருவி
உன்னொடு தங்கள்கருத் தாயின செய்துவரும்
கன்னிய ரும்மகிழக் கண்டவர் கண்குளிரக்
கற்றவர் தெற்றிவரப் பெற்ற எனக்கருளி
மன்னு குறுங்குடியாய்! வெள்ளறை யாய் மதில்சூழ்
சோலை மலைக்கரசே! கண்ண புரத்தமுதே!
என்அவ லம்களைவாய்! ஆடுக செங்கீரை
ஏழுல கும் உடையாய் ஆடுக ஆடுகவே!

பெரியாழ்வார்

# 57 திருக்கூடலூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத்திருப் பதிகளில் ஒன்று திருக்கூடலூார். இத்திருப்பதி தஞ்சாவூர்

மாவட்டத்தில் மாயவரம் - திருச்சிராப்பள்ளி இருப்புப் பாதையில் அய்யம்பேட்டை இரயில் நிலையத்திலிருந்து சுமார் 6 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. எம்பெருமானைச் சேவிக்கத் தேவர்கள் கூடி வந்ததால் கூடலூர் என்று பெயர் பெற்றது என்பர். ஆடுதுறைப் பெருமாள் கோவில் என்றும் இதனை வழங்குவர்.

## பதி மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் வையம்காத்த பெருமாள். கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார் வையம் காத்த பெருமாள். தாயார் பதுமாசன வல்லி தீர்த்தம் காவிரிநதி. சக்கர தீர்த்தம்.

திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற மகிமையுடையது இத்திருப்பதி.

# 58 திருக்கைச்சின்னம்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருக்கைச் சின்னம். இத்திருத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவாரூருக்குத் தெற்கிலுள்ள திருநெல்லிக்கா இரயில் நிலையத்திற்குக் கிழக்கே 3 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. திருத்துறைப் பூண்டிக்கு வடக்கே 11 கி. மீ. தொலைவில் உள்ளது.

## தல வரலாறு :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் கைச்சின்னநாதர். இறைவி வெள்வளையம்மை. வெள்ளை

என்றும் போற்றுவர். தீர்த்தம் இந்திர தீர்த்தம், வச்சிர தீர்த்தம் கோவில் மரம் கோங்கிலவம்.

கோவிலில் கோங்கிலவ மரங்கள் சில உள்ளன. அவற்றின் அருகில் கர்ணிகாவனேசுரர் (கோங்கிலவுவனநாதர்) வீற்றிருக்கின்றார். உற்சவமூர்த்தி தியாகராசர். இவரே இந்திரனுக்குக் காட்சி நல்கியவர்.

திருணபிந்து முனிவர், தேவேந்திரன் ஆகியோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் இது! திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார்.

மங்கையோர் கூறுடையான்
மன்னு மறைபயின்றான்
அங்கையோர் வெண்டலையான்
ஆடரவம் பூண்டுகந்தான்
திங்களொரு பாம்பணிந்த
சீரார் திருமுடிமேல்
கங்கையினான் மேவியுறை
கோவில் கைச்சினமே

என்ற திருஞானசம்பந்தர் பாமாலை நாளும் ஓதி இன்புறத் தக்கது.

# 59. திருக்கொட்டையூர்

சோழநாட்டுப் பாடல்பெற்ற சிவப்பதிகளில் காவிரிக்கு வடகரையிலுள்ள சிவத்தலங்களில் ஒன்று திருக்கொட்டையூர். தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணம்

இரயில் நிலையத்திலிருந்து மேற்கே 3 கி. மீ. தொலைவில் இத்தலம் உள்ளது. இத்தலத்திற்கு மேற்கே 3 கி. மீ. தொலைவில் சுவாமிமலை இருக்கின்றது.

## தல வரலாறு :

ஆமணக்குக் கொட்டைச் செடியின் கீழிருந்து இறைவன் தோன்றியதால் இத்தலம் திருக்கொட்டையூர் என்று பெயர் பெறறுள்ளது. சோழமன்னன் ஒருவனுக்கு இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் ஒருருவிலே கோடி இலிங்கமாகக் காட்சி கொடுத்தார். அம்மகிமை காரணமாக இறைவன் கோடீச்சுரர் ஆனார். கோவில் பெயர் கோடீச்சுரம் என வழங்கப் பெறுகின்றது. பெரிய இலிங்கத்தில் மிகப் பலசிறிய இலிங்கங்கள் விளங்குகின்றன.

## தல மகிமைகள்

இறைவி பந்தாடுநாயகி தீர்த்தம். கோடி தீர்த்தம் (கிணறு) விநாயகர் கோடிவிநாயகர். திருவலஞ்சுழியில் காவிரியில் இறங்கிய ஏரண்டமுனிவர் இத்தீர்த்தத்தில் தோன்றி வெளிவந்தார் என்பர். அம்முனிவருடைய திருவுருவம் கோவிலில் விளங்குகின்றது.

இத்தலம் மார்க்கண்டேயர் வழிபட்ட மகிமையுடையது. திருநாவுக்கரசர் இத்தலத்தைப் போற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார்.

செந்தா மரைப்போ தணிந்தான் கண்டாய்
சிவன்கண் டாய்தேவர் பெருமான் கண்டாய்
பந்தாடு மெல்விரலாள் பாகன் கண்டாய்
பாலோடு நெய்தயிர்தேன் ஆடி கண்டாய்

மந்தார முந்தி வருநீர்ப் பொன்னி
வலஞ்சுழியின் மன்னு மணாளன் கண்டாய்
கொந்தார் பொழில் புடைசூழ் கொட்டை யூரில்
கோடீச் சரத்துறையுங் கோமான் றானே"

என்ற தேவாரப் பாமாலை பாடி இன்புறத் தக்கது.

# 60. திருக்கோட்டியூர்

பாடல்பெற்ற வைணவத்திருப்பதியாகத் திகழ்கின்றது: திருகோட்டியூர் இத்திருப்பதி பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் திருப்பத்தூர் வட்டத்தில் மணிமுத்தாஆற்றங்கரையில் அமைந்துள்ளது. மானாமதுரை இரயில் நிலையத்திற்கு வடகிழக்கே 33 கி. மீ. தொலைவில் இத்திருப்பதி விளங்குகின்றது.

## பதி வரலாறு :

இத்திருப்பதி முற்காலத்தில் கதம்பமுனிவரின் புண்ணிய ஆசிரமாக விளங்கியது. இரணியன் மூவுலகங்களையும் ஆட்சிசெய்து தேவர்களைத் துன்புறுத்தினான், அவனை எப்படி ஒழிப்பது என்று தெரியாமல் தேவர்கள் திகைத்தனர். கதம்பமுனிவர் உறையும் பகுதியில் அரக்கன் எவனும்புகமுடியாது. இதனை உணர்ந்த மும்மூர்த்திகளும் தேவர்களும் இப்பகுதியில் கூடி இரணியனை ஒழிக்க ஆலோசனை நடத்தினர்.

இப்பதியில் கோவில் தோற்றுவிக்கப் பெற்றது. கோவில் உள்ள ஊர் கோவிலூார் என வழங்கும் வழக்கு

போன்று கோட்டம் (கோவில்) உள்ள ஊர் கோட்டியூர் ஆயிற்று.

திருகு, திருக்கு என்னும் சொற்கள் மாறுபாடு என்னும் பொருள் உடையன. செய்தபாவம், செய்கின்ற பாவம் யாவும் இறையருளால் நீங்கும். எனவே இறைவன் திருக்கு ஓட்டி ஆகிறார். திருக்குஓட்டி எழுந்தருளியுள்ள பதி திருக்கோட்டியூர் ஆயிற்று என்றும் இத்திருப்பதி வரலாறு குறித்து நவில்வர்.

## பதி மகிமைகள் :

இத்திருப்பதியிலுள்ள எம்பெருமான் கோவில் மாதவன் கோவில் என வழங்கப் பெறுகின்றது. கோவிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான திருப்பாற் கடல்நாதன். அவர் சயனத் திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். அவர் பள்ளி கொண்டிருக்கும் பாற்கடல் வெண்மை நிறமுடையது! உற்சவர் திருநாமம் சௌமிய நாராயணன் இவருக்கு மாதவன் என்ற திருநாமமும் உண்டு தாயார் திருமாமகள்நாச்சியார், இப்பதியில் ஆண்டாளுக்குத் தனிக்கோவில் விளங்குகின்றது.

இப்பதியிலுள்ள எம்பெருமானுடைய கோவிலில் தஞ்சைப் பெரிய கோவிலைப் போன்று கோவில் கருவறை மீதுள்ள கோபுரத்தின் நிழல் தரையில் விழுவதில்லை!

கிருட்டினன் அவதரித்த மகிமையுடையது இத் திருப்பதி, இராமா நுஜர், மூடு மந்திரமாயிருந்த வைணவத் திருமந்திரப் பொருளைத் திருக் கோட்டியூர் மதில்மேல் நின்று எல்லோருக்கும் உபதேசித்த பெருமையுடையது இத்திவ்வியதேசம்.

நின்றும் இருந்தும் கிடந்தும் கூத்தாடியும் நடந்தும் சேவை சாதிக்கும் எம்பெருமானின் மூர்த்திகளை இத் திருப்பதியில் கண்டுகளிக்கலாம்! நரசிம்ம அவதாரம் உருவானதும் இத்திவ்விய தேசத்தில்தான்! சங்க காலப் புலவர் நல்லந்தையார் தோன்றிய திருப்பதி இது!

பெரியாழ்வார், பூதத் தாழ்வார், பேயாழ்வார் திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோர் திருப்பாசுரங்கள் பெற்ற மகிமையுடையது இத்திருப்பதி!

வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் துாவிட
கண்ணன் முற்றம் கலந்தள றாயிற்றே

— பெரியாழ்வார்

வெள்ளியான் கரியான் மணிநிற
வண்ணன் விண்ணவர் தமக்கிறை எமக்கு
ஒள்ளியான் உயர்ந்தான் உலகேழும் உண்டுமகிழ்ந்
தான்
துள்ளுநீர் மொண்டு கொண்டு சாமரைக்
கற்றை சந்தன முந்தி வந்தசை
தெள்ளுநீர்ப் புறவில் திருக்கோட்டி யூரானே

— திருமங்கையாழ்வார்

பயின்ற தரங்கம் திருக்கோட்டி பன்னாள்
பயின்றதும் வேங்கடமே பன்னாள்-பயின்ற
தணிதிகழும் சோலை யணிநீர் மலையே
மணிதிகழும் வண்தடக்கை மால்

— பூதத்தாழ்வார்

ஆகிய திருப்பாசுரங்கள் ஓதி இன்புறத்தக்கவை.

# 61. திருக்கோவலூர்

பாடல் பெற்ற வைணவத்திருப்பதியாகவும் சிவத் தலமாகவும் திருக்கோவலூர் திகழ்கின்றது இத்தலம் நடு நாட்டைச் சேர்ந்து, தென்னார்க்காடு மாவட்டத்தில் தென்பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ளது விழுப்பும்-காட்பாடி இரயில் பாதையில் விழுப்புரத்திற்கு மேற்கே 32 கி. மீ. தொலைவில் உள்ளது. இரயில் நிலையத் திற்குத் தென்மேற்கே 3 கி. மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது. கெடிலம் ஆற்றிற்கு வடக்கே 8 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

தமிழ்நாட்டில் கண்ணன் கோவில் கொண்டுள்ள பதி கள் ஐந்து. திருக்கோவலூர் ஐந்தாவது பதியாகும் கோபாலனாகிய கண்ணன் இப்பதியில் கோவில் கொண்ட தால் கோவலூர் எனப்பெயர் பெற்று இந்நாளில் திருக் கோவிலூர் என வழங்குகின்றது.

சங்க நூல்களில் திருக்கோவிலூர் 'கோவல்' என வழங்கப் பெறுகின்றது.

துஞ்சா முழவின் கோவல் கோமான்
நெடுந் தேர்க்காரி கொடுங்கால் முன்றுறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்மணல்

என்பது அகநானூற்று அடிகள் சங்கச்சான்றோர்களை ஆதரித்த கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய மலைய மான் திருமுடிக்காரி இத்தலத்தைச் சார்ந்தவன்.

பெண்ணையாற்றங் கரையிலுள்ள பகுதி அக்காலத்தில் 'மலாடு' என்ற பெயரால் வழங்கியது மலையமான் திருமுடிக்காரி திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு அந்நாட்டை ஆண்டான் என்பது வரலாறு. மேற்கண்ட அகநானூற்று அடிகள் மலையமான் திருமுடிக்காரி பற்றியும் கோவலூரைப் பற்றியும் பெண்ணையாற்றைப் பற்றியும் குறிப்பிடுகின்றது.

"பொற்புடைய மலையரையன்
பணிய நின்ற பூங்கோவலூரர்"

என்ற பாசுர அடியால் திருக்கோவலூர் மன்னனாகிய மலையமான் எம்பெருமான் மீது கொண்டிருந்த அன்பு புலனாகின்றது. சங்க காலத்திலேயே எம்பெருமான் எழுந்தருளியிருந்ததையும் அறிய முடிகின்றது.

சங்க காலத்தில் மலையமான் மன்னர்களுக்குத் தலைநகராய் இருந்த திருக்கோவலூர் இடைக் காலத்தில் மெய்ப்பொருள் நாயனாருக்கும் தலை நகராய் விளங்கியது. பாரிமகளிர் அங்கவை சங்கவை என்பவர்களை மணம் புரிந்த தெய்வீகன் திருமுடிக்காரியின் வழித்தோன்றலே என்றும் தெய்வீகன்வழியில் வந்தவர்களே மெய்ப்பொருள் நாயனார். நரசிங்க முனையரையர் என்றும் கூறுவர். பாரிமகளிரின் திருமணம் முடிந்த பின்னர் கபிலர். பாரியின் பிரிவாற்றாது வடக்கிருந்து தீப்பாய்ந்து உயிர்விட்ட 'கபிலர் குன்று' என்னும் பாறை திருக்கோவலூருக்கு அருகில் உள்ளது. இவ்வாறு வரலாற்றுச் சிறப்புடைய திருக்கோவலூர் இக்காலத்தில் மேலூர். கீழூர் என்னு இரு பிரிவினதாய் விளங்குகின்றது.

## திருவிக்கிரமப் பெருமாள் கோவில்

திருக்கோவலூரின் மேற்குப் பகுதி மேலூராகும். மேலூரே வைணவத் திருப்பதியாகத் திகழ்கின்றது. இங்கே

தான் உலகளந்தபெருமாள் கோவில் கொண்டுள்ளார். எம்பெருமான் திருநாமங்கள் உலகளந்தபெருமாள் திருவிக்கிரமன் ஆகியன. கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் பூங்கோவல் நாச்சியார், புஷ்பவல்லித்தாயார் என்றும் போற்றுவர்.

வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கிய உலகளந்த பெருமாள் பெயரளவிலேயன்றி வடிவிலும் மூலவர் விண்ணுற நிமிர்ந்து நிற்கும்காட்சி காண்பாரை வியப்பில் ஆழ்த்தும் திருக்காட்சி! காஞ்சீபுரத்தில் உலகளந்த பெருமாள் கோவில் சுவரின்மீன் செதுக்கியுள்ள சிற்பம் இந்தப் பெருமான் தனியே நிற்கும் திருவடியே ஆகும். இந்த மூலவரின் திருவுருமரத்தாலானது. எம்பெருமானின் ஒரு திருவடி மகாபலிச் சக்கரவர்த்தியின் தலைமீது வைத்த நிலையில் உள்ளது. மற்றொரு திருவடி விண்ணை அளப்பதாகத் தூக்கிய நிலையில் விளங்குகின்றது.

பெரிய பிராட்டியர்ர், மாபலி, சுக்கிராச்சாரியார். மிருகண்டு முனிவர்,அவர் துணைவி, முதலாழ்வார்கள் மூவர் முதலானோர் சூழ நிற்க வலத்திருவடியை நான்முகனும் இடத்திருவடியை மாபலியின் புதல்வன் நமுசியும் ஆராதித்து நிற்கின்றனர். மாபலியிடம் மூவடி நிலம் வேண்டியதில் இரண்டடிநிலம் போக எஞ்சின ஓரடிநிலம் எங்கேஎன்று எம்பெருமான் மாபலியை வினவுவது போல வலக்கையில் ஒரு விரல் நீட்டிய நிலையில் விளங்குகின்றது. மாவலியை வெற்றி கொண்ட எக்களிப்பால் எம்பெருமான் இடக்கையில் இருக்க வேண்டிய சங்கினை வலக்கையில் ஏந்திய நிலையில் விளங்குகின்றார்.

இப்பதியின் தீர்த்தம் கிருட்டிண தீர்த்தம். மிருகண்டு முனிவருக்கும் மாவலிச் சக்கரவர்த்திக்கும் எம்பெருமான் திருக்காட்சி நல்கிய திருப்பதி இது! தீர்த்த யாத்திரை

வந்த அர்ச்சுனன் தென் பெண்ணை யாற்றில் தீர்த்தமாடி ஏழேழு பிறப்பையும் போக்கிக்கொண்டு திருக்கோவலூர்த் திரிவிக்கிரமனையும் சேவித்தான் என்று வில்லி புத்தூராழ் வார் குறிப்பிடுகிறார்.

## முதலாழ்வார் மூவரும் வழிபட்டது :

முதலாழ்வார் மூவரும் சேர்ந்து வழிபட்ட மகிமையுடையது திருக்கோவலூர். அவர்கள் மூவரும்ஒருவரையொருவர் சந்தித்து அந்தாதி தொகுத்த திருப்பதி திருக்கோவலூர் ஒருநாள் மாலை நேரத்தில் கார்மேகங்கள் கருந்திரையிட்டு உலகத்தை மறைத்தது. நல்ல மழையும் பொழிந்தது. அப்போது மழையில் நனைந்து கொண்டே ஒருவர் வந்தார். ஒதுங்க ஒரு வீட்டில் இடம் கேட்டார். வீட்டுக்காரரோ இடைக்கழியைக் காட்டினார். ஒருவர் படுக்கலாம்; அதற்குப் போதுமான இடம் உள்ளது என்று கூறிவிட்டுக் கதவினைத் தாழிட்டுக் கொண்டார். முதலில் வந்தவர் தான் பொய்கையாழ்வார்.

மழையோ விடாமல் பெய்தது. சிறிது நேரத்தில் இன்னொருவர் வந்து இவ்விடத்தில் ஒதுங்கப் பொய்கையாழ்வார் ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம் என்று கூறிக்கொண்டே வந்தவருக்கு இடம் கொடுத்தார். இரண்டாவதாக வந்தவர்தான் பூதத்தாழ்வார்.

மேலும் மழைநிற்க வில்லை. சிறிது நேரம் கழித்து மூன்றாவதாக ஒருவர் வந்தார். ஒதுங்க இடம் கேட்டார். இடைக்கழியிலிருந்த இருவரும் ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்'' என்று கூறிக்கொண்டே இருவரும் நின்று கொண்டு மூன்றாவது நபருக்கும் இடம் கொடுத்தனர், மூன்றாவதாக வந்தவர்தான் பேயாழ்வார்.

நன்றாக இருட்டிவிட்டது, மழையும் நிற்கவில்லை அந்நிலையில் இருட்டில் அம்மூவரையும் நெருக்கிக் கொண்டு நான்காவதாக ஒருவர் வந்தார். யாரென்று தெரியவில்லை விளக்கும் இல்லை! இந்நிலையில் பொய்கையாழ்வார் உலகத்தை அகலாகவும் கடலை நெய்யாகவும் கதிரவனைத் திரியாகவும் கொண்டு ஒரு விளக்கை ஏற்றினார்.

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்யகதிரோன் விளக்காகச் – செய்ய

சுடராழி யான்அடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று

என்று பாடிமுடித்தார். இந்தப் பாசுரத்தின் மகிமையால் ஒளி தோன்றி இருளை விரட்டியது, அதே சமயத்தில் பூதத்தாழ்வார்.

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்

என்று பாடினார். அன்பை அகலாகவும் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவும் கொண்டு ஞானவிளக்கு ஏற்றினார் பூதத்தாழ்வார் இந்தவிளக்கினால் அகத்தே மண்டிக்கிடந்த உள் இருட்டும் நீங்கிற்று. உடனே பேயாழ்வார் நான்காவது ஆளைக் கண்டுபிடித்து விட்டார்.

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கண் அணிநிறமும் கண்டேன்-செருக்கிளரும்
பொன்ஆழி கண்டேன் புரிசங்கம் கண்டேன்
என் ஆழி வண்ணன்பால் இன்று

என்று பேயாழ்வார் தாம் கண்டதிருக்காட்சி அனுபவத்தைப் பாடிப்பரவினார். ஆழ்வார்கள் மூவரும் எம்பெரு

மாணைக் கண்டதும் பக்திப் பெருக்கில் திளைத்துப் பாசு ரங்களைப் பாடினர். இவ்வரலாற்றைக் 'குருபரம்பரை' நூலால் அறியலாம்.

''மஞ்சாடு வரையேழும் கடல்கள் ஏழும்
வானகமும் மண்ண கமும் மற்றும் எல்லாம்
எஞ்சாமல் வயிற்றடக்கி யாலின் மேலோர்
இளந்தளிரில் கண்வளர்ந்த ஈசன் தன்னை
துஞ்சாநீர் வளஞ்சுரக்கும் பெண்ணைத் தென்பால்
தூயநான் மறையாளர் சோமுச் செய்ய
செஞ்சாலி விளைவயலூர் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவலூர் அதனுள் கண்டேன் நானே

என்பது திருமங்கையாழ்வார் இப்பதிபற்றி மங்களாசா சனம் செய்துள்ள பாசுரங்களில் ஒன்று.

## கீழூர் :

திருக்கோவலூரின் கிழக்குப் பகுதி கீழூர். இது கீழை யூர் கீழவூர் என்றும் வழங்குகின்றது. இது சிவத்தலமாகும். கோவில் பெயர் வீரட்டானம். இறைவன் வீரட்டானேசு வரர். இறைவி சிவந்தவல்லி இத்தலம் சிவபெருமான் வீரச் செயல்கள் புரிந்த எட்டுத்தலங்களில் ஒன்று அதனால் வீரட்டானம் ஆயிற்று இத்தலத்தில் அந்தகாசுரன் என்னும் அரக்கனை அழித்து மறச்செயல் புரிந்ததாகச் சொல்லப் பெறுகின்றது. தீர்த்தம் பெண்ணையாறு.

கோவிலில் இருந்து 79 கல்வெட்டுகள் படி எடுபட் டுள்ளன. அவை பராந்தகன், இராசராசன், இராசேந் திரன், இராசாதிராசன், இராசேந்திரதேவன், குலோத் துங்கன் முதலிய மன்னர்களின் காலத்தவை கல்வெட்டு களில் திருக்கோவலூர் ''சயங்கொண்ட சோழமண்டலத்து மலாடான ஜகந்நாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூர்'' எனக்குறிக்கப் பட்டுள்ளது.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

கனைகொளிருமல் சூலைநோய்
    கம்பதாளி குன்மமும்
இனைய பலவு மூப்பினோ
    டெய்திவந்து நலியாமுன்
பனைகள் உலவு பைம்பொழில்
    பழனஞ் சூழ்ந்த கோவலூர்
வினையை வென்ற வேடத்தான்
    வீரட்டானஞ் சேர்துமே''

— திருஞானசம்பந்தர்

# 62. திருக்கோளூர்

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில் ஒன்று திருக்கோளூர் திருப்பதி. இத்திருப்பதி திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலி இரயில் நிலையத்திற்குக் கிழக்கே 26 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. நவநிதிகள் இங்கு மறைத்து வைக்கப்பட்டுள்ளன என்று அதருமம் குபேரனுக்குக் கோள் சொல்லிய இடமாதலால் இத்திருப்பதி திருக்கோளூர் எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர்.

## பதி மகிமைகள் :

இத்திருப்பதியில் கோவில் கொண்டுள்ள எம்பெருமான் வைத்தமாநிதி. தாயார் கோளூர் வல்லி. தீர்த்தம்

குபேரதீர்த்தம்; தாம்பிர வருணி எம்பெருமான் பாம் பணையில் கிடந்த கோலத்தில் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார்.

இப்பதி நம்மாழ்வாரின் தூய மாணவரான மதுர-கவி ஆழ்வார் தோன்றிய சிறப்புடையது.

நம்மாழ்வார் இப்பதியை மங்களாசாசனம் செய் துள்ளார்.

உண்ணுஞ் சோறு பருகுநீர்
    தின்னும்வெற் றிலையுமெல்லாம்
கண்ணன் எம்பெருமா னென்றென்
    றேகண்கள் நீர்மல்கி
மண்ணி னுள் அவன்சீர் வளம்மிக்
    கவனூர் வினவி
திண்ண மென்னிள மான்புகு
    மூர்திருக் கோளூரே

— நம்மாழ்வார்

# 63. திருச்சக்கரப்பள்ளி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருச்சக்கரப்பள்ளி. இத்தலம் தஞ்சாவூர் மாவட்டத் தில் ஐயம்பேட்டை இரயில் நிலையத்திற்கு மேற்கே 4 கி. மீ. தொலைவில் விளங்குகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் ஆலந்துறை நாதர். இறைவி அல்லியங்கோதை. திருமால் இத்தலத்து இறைவனை வழிபட்டுச் சக்கரம் பெற்றமையால் சக்கரப் பள்ளி என இத்தலம் பெயர் பெற்றுள்ளது.

இந்திரன்மகன் சயந்தன், பிரமி, தேவர்கள் ஆகியோர் வழிபட்டுப் பேறுபெற்ற சிறப்புடையது இத்தலம் திருவூர்கள் ஏழனுள் இத்தலம் முதலாக விளங்குகின்றது. அவை முறையே சக்கரப்பள்ளி அரிமங்கை, சூலமங்கை, நந்தி மங்கை, பசுபதிமங்கை, தாழமங்கை, புள்ளமங்கை என்பன. அவை முறையே பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைணவி, வராகி, மகேந்திரி, சாமுண்டி என்னும் எழுவரால் வழிபட்டவையாகும்.

இத்தலத்தைப் போற்றித் திருஞானசம்சந்தர் பாடியுள்ளார்.

''படையினார் வெண்மழுப்
பாய்புலித் தோலரை
உடையினா ருமையொரு
கூறனா ரூர்வதோர்
விடையினார் வெண்பொடிப்
பூசியார் விரிபுனல்
சடையினா ருறைவிடஞ்
சக்கரப் பள்ளியே

என்பது அவர்தம் பாமாலைகளில் ஒன்று.

# 64. திருச்சிராப்பள்ளி

சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையிலுள்ள சிவத்தலம் திருச்சிராப்பள்ளி இத்திருத்தலம். சென்னை மாநகரிலிருந்து தென்மேற்கில் சுமார் 312 கி. மீ. தொலைவில் அமைந்திருக்கின்றது. பண்டைக் காலத்தில் சோழ மன்னர்களின் தலைநகராக உறையூர் விளங்கியது. இக்காலத்தில் உறையூர் ஒரு பகுதியாக அமைய திருச்சிராப்பள்ளி மாபெரும் நகராக விளங்குகின்றது. திருச்சிராப்பள்ளி இரயில் சந்திப்பு, டவுன் இரயில் நிலையம், கோட்டை இரயில் நிலையம் என மூன்று இரயில் நிலையங்கள் உள்ளன. விமான நிலையம் இருக்கின்றது.

## தல வரலாறு :

இத்திருத்தலத்தில் மூன்று சிகரங்களுடைய மலை இருக்கின்றது. அதனால் இத்தலம் திரிசிரம், திரிசிகம், திரிசிகரபுரம் எனப் பெயர் பெற்று நாளடைவில் திருச்சிராப்பள்ளி என வழங்கி வருகின்றது.

சமண பௌத்த துறவிகள் தங்கித்தவம் புரிந்து வந்த இடத்தைப் 'பள்ளி' எனப் பண்டையோர் குறித்தனர். திரிசிராப்பள்ளி என்பதே நாளடைவில் திருச்சிராப்பள்ளி ஆயிற்று என்பர்.

சமண முனிவர்கள் இக்குன்றின்மீது பள்ளிகளை அமைத்தனர். 'சிரா' என்ற சமண முனிவர் அவர்களின்

தலைவராக விளங்கினார் எனவும் அதனால் இத்தலம் சிராப் பள்ளி எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர். இம் மலைமேல் உள்ள சமணர் படுக்கை ஒன்றில் 'சிரா' என்று எழுதப்பட்டுள்ளது.

மூன்று தலைகளையுடைய அசுரன் வழிபட்டதால் திரிசிரபுரம் என்று பெயர் பெற்றதாகவும் கூறுவர். இத்தி ருத்தலம் தேவாரத்தில் 'சிராப்பள்ளி' என்றே குறிக்கப் பெற்றுள்ளது. இங்குள்ள குன்றின்மேல் பல்லவக் குகையில் கி. பி. 11 - ஆம் நூற்றாண்டில் பொறித்த கல்வெட்டிலும் சிராப்பள்ளி என்றே காணப்பெறுகின்றது. இப்பெயரே விஜயநகர மன்னர்கள் காலம்வரை கல்வெட்டுக்களிலும் இலக்கியங்களிலும் வழங்கி வந்துள்ளது. விஜயநகர மன்னர் காலக் கல்வெட்டுக்கள் சிலவற்றிலேதான் திருச்சிராப்பள்ளி என்ற பெயர் காணப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தின் நடுநாயகமாக விளங்கும் சிராமலை கி.மு 2-ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே விளங்கி வருகின்றது மலைமீது திருக்கோவில் விளங்குகின்றது, கோவிலில் எழுந் தருளியுள்ள இறைவன் தாயுமானவர். இறைவன்பால் பேரன்பு வாய்ந்த மாது ஒருத்தி கருவுற்றிருந்தாள். மகப் பேற்றுக்காலம் வந்துவிட்டது. காவிரிப் பெருவெள்ளத் தால் அவள்தன் தாய்வந்து அவளுக்கு உதவமுடியவில்லை சிவபெருமானே தாயைப் போல் வந்து உதவி புரிந்தருளி னார். அதனால் தாயுமானவர் எனப் போற்றப் பெறு கின்றார்.

இறைவி மட்டுவார் குழலம்மை. தீர்த்தம் காவிரி, நன்றுடையான், தீயதில்லான்.

திருக்காளத்தி, திருக்கோணமலை, திரிசிராப்பள்ளி ஆகிய மூன்று தலங்களும் தென்னாட்டுக் கைலை மலைகள் (தட்சிணகயிலாயம்) எனப்போற்றப் பெறுவன. இத்தலத்தில் இறைவன் மேற்கு நோக்கி அருள் பாலிக்கின்றார். தென்னிந்திய மலைக்கோவில்களில் இஃது ஒன்றே சுவாமி சந்நிதி வரையில் படிகள் வெய்யில் படாமல் கருங்கல் பாவிய கூரையையுடையதாக விளங்குகின்றது.

## உச்சிப் பிள்ளையார்கோவில் :

மலையின் உச்சியில் இப்பிள்ளையார் எழுந்தருளியிருப்பதால் உச்சிப்பிள்ளையார் எனப் போற்றப் பெறுகின்றார். மலையுச்சியில் இவருக்குக் கோவில் உண்டு. அங்கிருந்து இத்தலத்தைக் காணும்காட்சி கண்கொள்ளாக் காட்சி! இக்கோவில் அருகில் ஒருபாறையில் ஈசுவரன் இலிங்க மூர்த்தியாக அமர்ந்து அன்பர்களுக்கு அருள் பாலிப்பதால் திருமலைக்கொழுந்தீசுவரன் எனப் போற்றப் பெறுகின்றார்.

வானவர்கோன், நான்முகன், இராமன், அனுமன், நாககன்னியா முதலியோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் திருச்சிராப்பள்ளி அனுமன் வழிபட்டதன் அடையாளமாக அனுமக்கொடியும் முத்திரையும் கோவில் உரிமையாக உள்ளன. தாயுமானவர் உறைந்து அருமறை கேட்ட சிறப்புடையது இத்தலம்.

மலையுச்சியிலிருந்து பார்த்தால் காவிரியாறும் கொள்ளிடமும், திருவானைக்கா, திருவரங்கம் கோவில்களின் கோபுரங்களும் மிக அழகாகவும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வகையிலும் விளங்குகின்றன.

திருஞானசம்பந்தர் ஒரு பதிகமும் திருநாவுக்கரசர் ஒரு பதிகமும் இத்தலம் பற்றிப் பாடியுள்ளனர்.

நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே
றொன்றுடையானை யுமையொருபாகம் உடையா
னைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூற என்னுள்ளங் குளிரும்மே

--திருஞானசம்பந்தர்

தாயுமாயெனக் கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையும் ஆண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னாரென நம்வினை நாசமே

— திருநாவுக்கரசர்

இத்தலத்தின் தலபுராணம் செவ்வந்திப் புராணம் எனப் பெயர் பெற்றுள்ளது. இதனை இயற்றியவர் சைவ எல்லப்ப நாவலர் ஆவார்.

# 65. திருச்சுழியல்

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவதலங்களில் ஒன்று திருச்சுழியல். இத்திருத்தலம் காமராசர் மாவட்டத்தில் அருப்புக்கோட்டையிலிருந்து 13 கி.மீ. தொலைவில் இருக்கின்றது. விருதுநகர் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 24 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

'சுழி' என்னும் சொல் சுழலுகை, நீர்ச்சுழி, உச்சி, கடல் எனப் பலவாறு பொருள் தரும். இத்தலம் குண்டாறு

என்னும் ஆற்றின்கரையில் அமைந்திருப்பதால் வெள்ளப் பெருக்கால் ஏற்படும் சுழி, சுழலுகை ஆகியவற்றின் காரண மாகச் சுழியல் எனப்பெயர் பெற்றிருக்கலாம்.

பார்வதி அம்மையார், சிவபெருமான் தம்மைத் திரும மணம் புரிந்துகொள்ளுதல் வேண்டி வழிபட்ட திருத்தலம் இது. அதன் காரணமாகவும் இத்தலம் சுழியல் எனப் பெயர் பெற்றிருக்கலாம். பாடல்பெற்ற தலமாதலால் 'திரு' என்னும் அடை சேர்க்கப்பெற்று திருச்சுழியல் ஆயிற்று.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் கோவில் கொண்டுள்ள இறைவன் திரு மேனிநாதர். இறைவி துணைமாலைநாயகி. தீர்த்தம் பிரளயதீர்த்தம். கோவிலுக்கு எதிரில் உள்ள தீர்த்தம் கவ்வைக் கடல்.

பச்சிலை மூலிகைகளாலான நடராசர் திருவுருவம் கோவிலில் இருப்பது இத்தலத்தின் தனிச்சிறப்பாகும். மகாபாரத வீரனான அர்ச்சுனன் இவ்வூருக்கு வந்ததாகக் கூறப்பெறுகின்றது. அர்ச்சுனன் தீர்த்தம் ஒன்றும் உள்ளது.

சதாநந்த முனிவர் வழிபட்டுப் பேறுபெற்ற சிறப் புடையது இத்தலம். இரமண மகரிஷி தோன்றிய பெரு மையுடையது இத்தலம்.

## இலக்கியங்கள் :

கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவியைப் போற் றிப் பிள்ளைத்தமிழ் இலக்கியம் பாடப்பெற்றுள்ளது. ஆறாவமுத ஆச்சாரியாரால் திருச்சுழியல் தலபுராணம்

இயற்றப் பெற்றுள்ளது. மணிவாசகர் திருக்கோவையாரில் இத்தலம் பற்றிப் பாடிய பாடல் ஒன்றுள்ளது. சுந்தரர் இத்தலம் பற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார்.

சவ்வைக்கடல் கதறிக்கொணர் முத்தங்கரைக்
கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார்குடைந் தாடுந்திருச்
சுழியல்
தெய்வத்தினை வழிபாடுசெய் தெழுவாரடி
தொழுவார்
அவ்வத்திசைக் கரசாகுவர் அலராள்பிரி யாளே

— சுந்தர மூர்த்தி நாயனார்

# 66. திருச்செங்காட்டங்குடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருச்செங்காட்டங்குடி. இத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் நன்னிலம் இரயில் நிலைத்திற்குக் கிழக்கிலுள்ள திருப்புகலூருக்குத் தென்கிழக்கே சுமார் 3 கி.மீ. தொலைவில் இருக்கின்ற .

## தல வரலாறு :

ஆனைமுக அசுரனைப் பிள்ளையார் போரிட்டுக் கொன்றார். அவனைக் குத்திக் கொன்றபொழுது குருதி வெள்ளமென எங்கும் பாய்ந்து செங்காடாயிற்று. அதனால் இத்தலம் செங்காட்டங்குடி எனப் பெயர் பெற்றது என்பர்.

பிள்ளையார் ஆனைமுக அசுரனைக் கொன்ற பாவம் நீங்கச் சிவலிங்கம் நிறுவி வழிபட்டார். அதனால் இத்தலத்திலுள்ள கோவில் கணபதீச்சுரம் எனப்பெயர் பெற்றது என்பர்.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் கணபதீசுவரர் இறைவி திருகுகுழல் மாதம்மை. தல விருட்சம் திருவாத்தி, இது உற்சவமூர்த்தியின் எதிரில் உள்ளது. தீர்த்தம் சூரிய தீர்த்தம்.

சிறுத்தொண்டநாயனார் பிள்ளைக்கறி சமைத்துச் சிவனடியார் கோலத்தில் வந்த இறைவனுக்குப் படைத்துப் பேறுபெற்ற மகிமையுடையது இத்தலம். சிறுத்தொண்ட நாயனார், அவர்தம் வாழ்க்கைத்துணைவியார் திருவெண்காட்டுநங்கை, சீராளதேவர், சந்தனத்தாதியார் ஆகியோர் திருவுருவங்கள் திருச்சுற்றின் கீழ்ப்பக்கத்தில் உள்ளன சிறுத்தொண்டநாயனாரின் சிவப்பற்றினைத் தேவாரப் பதிகங்கள் போற்றுகின்றன. சித்திரை நிறைநிலாவில் சிறுத்தொண்டர் திருவமுது படைத்தல் திருவிழா நடைபெறுகின்றது. தலத்தின் தெற்கு வீதியில் சிறுதொண்டர் மடம் இருக்கின்றது.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் பாடல் பெற்ற மகிமையுடையது இத்தலம்.

நறைகொண்ட மலர்தூவி விரைபளிப்ப நாடொறும்
முறை கொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்டவண்டறையும்செங்காட்டங்குடியதனுள்
கறை கொண்ட கண்டத்தான் கணபதீச்சரத்தானே."

— திருஞானசம்பந்தர்

அரியபெரும் பொருளாகி நின்றான் றன்னை
யலைகடலி லாலால மமுது செய்த
கரியதொரு கண்டத்துச் செங்க ணேற்றுக்
கதிர்விடுமா மணிபிறங்கு காட்சி யானை.
உரியபல தொழில்செய்யு மடியார் தங்கட்
குலகமெலா முழுதளிக்கு முலப்பி லானைத்
தெரிவை யொரு பாகத்துச் சேர்த்தி னானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டே னானே

— திருநாவுக்கரசர்

# 67. திருச்செங்கோடு

கொங்கு நாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களின் ஒன்று திருச்செங்கோடு. இத்தலம் சேலம் மாவட்டத்தில் சேலம் மாநகருக்குத் தென்மேற்கில் சேலத்திலிருந்து 35கி. மீ. தொலைவில் உள்ளது. சங்ககிரியிலிருந்து 10கி. மீ. தொலைவிலும் ஈரோட்டிலிருந்து 20கி. மீ. தொலைவிலும் இருக்கின்றது.

## தல வரலாறு

'கோடு என்பது மலை எனப் பொருள்படும் மலையின்கண் உள்ள பாறைகள் செம்மைநிறம் கலந்துள்ளதால் செங்கோடு ஆயிற்று. இம்மலையில் இறைவன் கோவில் கொண்டுள்ளதால் 'திரு' என்னும் அடை சேர்க்கப்பெற்று திருச்செங்கோடு என இத்தலம் வழங்குகின்றது.

திருக்கொடிமாடச் செங்குன்றூர், தெய்வத்திரு மலை, நாககிரி, அரவகிரி, நாகாசலம், கோதையூர், நந்தி கிரி என இத்தலத்திற்குப் பல பெயர்கள் உண்டு. மேலை வீதியிலிருந்து பார்த்தால் இம்மலை நாகம்போல் தோன்றும். அதனால் நாககிரி, அரவகிரி, நாகாசலம் என்னும் பெயர்கள் தோன்றின.

## தல மகிமைகள் :

மலைமீதுள்ள கோவிலில் மூலத்தான மூர்த்தியாக அர்த்தநாரீசுவரன் எழுந்தருளியுள்ளார். பாடல்பெற்ற திருத்தலங்களில் இத்தலத்தில்தான் இறைவன் இவ்வடிவத்தில் விளங்குகின்றார். இடப்பால் பெண் உருவும் வலப்பால் ஆண் உருவுமாகச் சூழியக் கொண்டையோடு நின்ற திருக்கோலத்தில் அருள் பாலிக்கின்றார் உமையொரு பாகமுடையான்! இறைவி பாகம்பிரியாள். மலையில் சுனைகள் பல உள்ளன. அவற்றுள் இறைவன் திருவடியில் தேவதீர்த்தமென ஒரு தீர்த்தம் உள்ளது. அன்பர்களுக்கு விபூதி முதலியவற்றோடு இத்தீர்த்த பிரசாதமும் வழங்கப் பெறுகின்றது.

ஆதிசேடனும் காமதேனுவும் வழிபட்டுப் பேறுபெற்றதலம் இது. மலையில் பஞ்சபாண்டவர் படுக்கை என்னும் பெயரில் இயற்கைக் குகை ஒன்று உள்ளது. மலைக்கோவிலிலிருந்து உச்சிப் பாண்டீசுரன் கோவில் செல்லும் வழியிலுள்ள தனிக்காட்டில் இக்குகை அமைந்துள்ளது.

மலைக்கோவிலின் கீழ்ப்புறமாகவும் ஒரு இயற்கைக் குகை இருக்கிறது. இங்கு நான்கு படுக்கைகள் உள்ளன. இவற்றால் இம்மலை பண்டைக் காலத்தில் சமணத்தலமாக விளங்கியிருக்கலாம் என்பர்.

## முருகன் உறைவிடம் :

திருச்செங்கோடு என்றாலே முருகன் நினைவுக்கு வருவான். பாடல்பெற்ற முருகன் உறைவிடமாகவும் இத்தலம் விளங்குகின்றது. முருகப் பெருமான் இறைவனுக்கும் இறைவிக்கும் நடுவில் தனியாகக் கோவில் கொண்டுள்ளார் இராஜகோபுர வாயில் வழியாகச் சென்று உடனே சுமார் பதினைந்து படிகள் கீழே இறங்கிப் பின்னர் கிழக்குப் பக்கமாகச் சென்று மீண்டும் தென்புறமாகத் திரும்பிச் சென்றால் செங்கோட்டு வேலவன் சன்னதியைக் கண்டு களிக்கலாம், வலதுகரத்தில் வேல் ஏந்தியும் இடது கரத்தை இடுப்பில் வைத்தும் வேலவர் திருக்காட்சி நல்குகின்றார்.

இத்தலத்தில் பல தீர்த்தங்கள் உள்ளன. அவற்றுள் செங்கோட்டு வேலவனால் உண்டாக்கப் பெற்ற தீர்த்தம் குமாரதீர்த்தம் மிகவும் சிறப்புடையது இத்தீர்த்தம் மலையின் உச்சியிலுள்ள விநாயகர் கோவிலுக்குச் செல்லும் வழியில் உள்ளது.

இத்தலம் மிகவும் பழைமையானது. பண்டைக் காலத்தில் வேலவன் எழுந்தருளியிருந்த இடங்களில் திருச்செங்கோடும் ஒன்று எனச் சிலப்பதிகார அடிகளால் அறியலாம்.

> ''சீர்கொழு செந்திலும செங்கோடும் வெண்குன்றும்
> ஏரகமும் நீங்கா இறைவன்''

எனவரும் சிலப்பதிகார அடிகளிலுள்ள 'செங்கோடு' என்பதற்கு அரும்பத உரையாசியர் திருச்செங்கோடு என உரை வரைந்துள்ளார்.

> மாலோன் மருகனை மன்றாடி
> மைந்தனை வானவர்க்கு

பேலான தேவனை மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேனியிற்
சேலார் வயற்பொழில் செங்கோடனைச்
சென்று கண்டுதொழ
நாலாயிரங்கண் படைத்தில
னேயந்த நான்முகனே

என அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில் செங்கோட்டு வேலவனைத் தரிசிக்கப் பிரமன் தனக்கு நாலாயிரம் கண் களைப் படைக்கவில்லையே! என வேலவனைப் போற்று கின்றார்!

## கண்ணகி விண்ணுலகு அடைந்தது :

மதுரையைத் தீக்கிரையாக்கிய கண்ணகி இரவும் பகலுமாக 14 நாட்கள் நடந்து சென்று'

நெடுவேள் குன்றம் அடிவைத்தேறிப்
பூத்த வேங்கைப் பொங்கர்க் கீழ்

இருந்துப் புட்பக விமானத்தில் ஏறி விண்ணுலகு அடைந் தாள் என்பது திருச்செங்கோடு மலை என அரும்பதவுரை யாசிரியர் பொருள் தருகின்றார். இதனால் கண்ணகி விண்ணுலகு அடைந்தது திருச்செங்கோடுமலையில்தான் என்பது வெள்ளிடைமலை கண்ணகி இம்மலையில் தங்கி விண்ணுலகு அடைந்ததனை அடிப்படையாகக் கொண்டு இத்தலத்தில் ஆண்டுதோறும் வைகாசி விழாவின்போது பத்தினித்தெய்வமான கண்ணகியின் விழாவும் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. சான்றோர்கள் இத்தலத்தில் கண்ணகிக்கு ஒரு கோட்டம் அமைக்கவும் முயன்று வருகின்றனர்.

மலையடிவாரத்தில் ஒரு முருகன் கோவில் இருக் கின்றது. கோவிலில் முருகப் பெருமான் தேவிமாருடன்

காட்சி அளிக்கின்றார். நகரின் நடுவே கைலாசநாதர் கோவில் உள்ளது. இவற்றைத் தவிர. இன்னும் சுமார் 80 கோவில்கள் இத்தலத்தில் இருக்கின்றன.

## தல புராணம் தரும் வரலாறு :

செங்கோட்டின் நிறம் செம்பொன்னின் நிறம் பண்டைக்காலத்தில் இம்மலை செம்பொன்நிறமாக விளங்கியது. மன்னர்கள் இம்மலையைப் பொன்மலை என்றே கருதினர். அதனால் இம்மலையை இரும்புச் சங்கிலியால் இணைத்து யானை கட்டி இழுத்தார்கள் அப்பொழுது இம் மலையில் கோவில் கொண்டுள்ள செங்கோட்டு வேலவன் தமது வேலை இரும்புச் சங்கிலி பிணைக்கப் பட்டிருந்த இடத்தை நோக்கி வீசினார். அவ்வேல் சங்கிலியைத் துண்டுபடுத்தி விட்டு வேலவனிடம் திரும்பிச் சென்றது. இரும்புச் சங்கிலி துண்டுபட்ட மலையிடம் பள்ளமானது. இப்பள்ளத்தை இன்றும் காணலாம்.

மேருமலையைத் தேவர்கள் மத்தாகக் கொண்டு திருப்பாற்கடலை அமுதம் வேண்டிக் கடைந்தனர், அதற்குற் கயிறாக ஆதிசேடன் பயன்படுத்தப் பட்டார். அப்போது கயிறாகப் பயன்பட்ட ஆதிசேடனின் ஒரு பகுதி இம்மலையில் வந்து விழுந்தது. இதன் அறிகுறியாக இம் மலையிலுள்ள பாறையின் மீது ஐந்து தலைகளைக் கொண்ட அறுபது அடி நீளமுள்ள நாகர் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. இச்செய்திகளை இத்தலத்துத் தல புராணத்தால் அறியலாம்.

## கல்வெட்டுகள் :

திருசெங்கோட்டில் இதுவரை சுமார் 20 கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. ஆதித்த சோழன் (கி-பி 871-907) காலத்திலிருந்து கல்வெட்டுகள் கிடைத்துள்ளன.

சோழர் காலக்கல்வெட்டுகள் அதிகமாகக் கிடைத்துள்ளன. இவற்றைத் தவிரபாண்டியர், விஜயநகரத்தார், மதுரை நாயக்கர், காங்கேயர் ஆகியோர் காலத்திய கல்வெட்டு களும் கிடைத்துள்ளன.

## இலக்கியங்கள் :

திருஞானசம்பந்தர் பாடல்பெற்றது, இத்தலம். புறநானூறு, பதிற்றுப்பத்து, கந்தபுராணம், பெரியபுரா ணம், திருப்புகழ், கந்தரநுபூதி, கொங்குமண்டலசதகம் முதலிய நூல்களில் இத்தலம் பற்றிய வரலாறும் சிறப்புக் களும் உள்ளன.

திருச்செங்கோட்டுப் புராணம், திருச்செங்கோட்டுத் திருப் பணிமாலை, திருச்செங்கோட்டுத் திருமுகவிலாசம், திருச் செங்கோட்டு மான்மியம்' திருச்செங்கோட்டுப் பதிகம், திருச்செங்கோட்டுச்சதகம், திருச்செங்கோட்டுக்கலம்பகம், செங்கோட்டு வேலவர்பள்ளு, திருச்செங்கோட்டு வேலவர் பிள்ளைத்தமிழ். திருச்செங்கோட்டுக் குறவஞ்சி முதலிய நூல்கள் இத்தலத்தை மையமாகக் கொண்டெழுந்தவை யாகும்.

வாருறு கொங்கைநல்ல மடவா
டிகழ்மார்பி னண்ணும்
காருறு கொன்றை யொடுங்
கதநாகம் பூண்டருளிச்
சீருறு மந்தணர்வாழ் கொடிமாடச்
செங்குன்றூர் நின்ற
நீருறு செஞ்சடையான்
கழலேத்த வீதியே

— திருஞானசம்பந்தர்

# 68. திருச்செந்தூர்

செந்தில் பதியில் எழுந்தருளிய கந்தவேள் அருட்கடலாக நின்று அன்பர்களின் துயர்களைந்து வருகின்றார். முருகப் பெருமான் அருள் பாலிக்கும் அறுபடைவீடுகளில் இரண்டாவது படைவீடாகத் திருச்செந்தூர் விளங்குகின்றது திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலிக்குக் கிழக்கில் 44 கி, மீ- தொலைவில் கடற்கரையில் இத்திருத் தலம்அமைந்துள்ளது. திருநெல்வேலியிருந்துஇத்தலத்திற்குச் செல்ல இரயில் வசதியும் பேருந்து வசதியும் உண்டு.

## தல வரலாறு :

இத்திருத்தலம் இடைவிடாது மன்னார் குடாக்கடல் அலைகளால் தவழப் பெறும் காரணத்தால் ,அலைவாய்' எனப் பெயர் பெற்றது; திரு' என்னும் அடை சேர்ந்து திருச்சீரலைவாய் ஆயிற்று.

பண்டைக் காலத்தில் இத்தலம் செந்தில் எனவழங்கியது அப்பெயரில் அமைந்த இல்என்றசொல் இக்காலத்தில் 'ஊர்' என மாறியது திரு சேர்ந்து திருச்செந்தூார் ஆயிற்று என்றும் கூறுவர்

செந்திலாண்டவன் திருக்கோயில் கடற்கரையில் மணல் மேட்டில் கடல் அலைகள் வந்து தழுவுமாறு அமைந்துள்ளது பண்டைநாளில் இக்கோவில் கருவறை சந்தனசைலம் என்று அழைக்கப் பெற்ற கல்லும் மணலும்

கலந்த குன்றைக் குடைந்து கட்டப்பட்டதாகவும் பிற்காலத்தில் பாண்டியர், சேர மன்னர்கள் திருப்பணிகள் செய்தனர் என்றும் கூறுவர்.

கடற்கரையில் கோவில்! ஆங்காங்குச் சோலைகள் மணல் மேடுகள்! நீலத்திரைக்கடல்! இவையனைத்தும் ஒருங்கே அமைந்த இன்பக்காட்சி! அதிகாலையில் செந்நிற மேனியனாக இளஞாயிறு நீலவானத்தில் எழுதரும் இயற்-கை கொஞ்சும் எழிற்காட்சி செந்திற் பெருமான் நீலமயில் மீது தோன்றும் திருக்காட்சியாக விளங்குகின்றது!

திருச்செந்தூர் நகரிலிருந்து கடற்கரைக் கோவிலுக்குச் செல்லும் வழியின் தொடக்கத்தில் தூண்டுகை விநாயர் கோவில் விளங்குகின்றது. இவ்விநாயகரை வழிபட்ட பின்னரே முருகன் கோவிலுக்குச் செல்லவேண்டும் என்பது ஐதிகம். இவ்விநாயகர் தன் தம்பியாகிய செந்தில் வேலவன் எழுந்தருளியிருக்கும் இடத்தை அன்பர்களுக்குத் தூண்டிக் காண்பிக்கும் வகையில் எழுந்தருளியிருப்பதாகக் கூறுவர். இங்கிருந்து முருகன் கோவில் மூன்று பர்லாங்குத்தூரம் கொண்டது. வழி நெடுக வெயில் மழை முதலியன படா வண்ணம் நீளமான கல் மண்டபம் அமைக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள்

கோவில் மூன்று பிரக ரங்களுடனும் மேற்குத்திசையில் மட்டும் எழில்மிக்க சிற்பங்கள் நிறைந்த ஒன்பது நிலைகளை -யுடைய இராஜ கோபுரத்துடனும் விளங்குகின்றது. கோவிலின் மூன்றாவது வெளிப்பிரகாரம் கோவிலைச்சுற்றி கடற்கரை ஓரமாகச் செல்கிறது. இப்பிரகாரத்தின் வடபா-கத்தில் வள்ளிநாயகி கோவில் விளங்குகின்றது. இது குன்றைக்குடைந்து அமைக்கப்பட்ட குகைக்கோவில்.

இக்கோவிலில் அர்த்தசித்திர வடிவில் வள்ளிநாயகி காட்சி அளிக்கின்றாள். இக்குகை கோவிலின் முன் பதினாறுகால் மண்டபம் ஒன்று அழகாக விளங்குகின்றது. இக்குகை கோவிலின் மேற்குப் பகுதியில் சோலையின் நடுவண் குமரப் -பெருமான் எழுந்தருளும் காற்று வாரிதி மண்டபம் விளங்கு -கின்றது. மேற்குப்பகுதியில் வசந்தமண்டபமும், தெற்கு பகுதியில் சண்முக விலாச மண்டபமும் விளங்குகினறன. சண்முகவிலாசத்தின் முகப்பில் ஆறுபடை வீடுகளைக்குறிக் -கும். அழகியசிற்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன,

சண்முகவிலாசத்தின் அருகில் கடற்கரை தீர்த்தம் இருக்கின்றது. அதனை வதனாம்பரதீர்த்தம் என்பர் இத் தீர்த்தத்தில் நீராடினால் சாப விமோசனக கிட்டும், என் பது அன்பர்கள் நம்பிக்கை இத்தீர்த்தத்தில் நீராடிய பின்னர் நாழிக்கிணற்றில் நீராடவேண்டும் என்பது ஐதிகம் கோவிலுக்கு அருகில் கடற்கரை ஓரமாக 24 தீர்த் தங்கள் உள்ளன. அவை காயத்ரி மத்திரத்தின் 24 எழுத் துக்களைக் குறிப்பன என்பர்.

சண்முகவிலாச மண்டபத்திலிருந்து படிக்கட்டுகள் நில மட்டத்திற்குக் கீழே சிவலி மண்டபம் என்று கூறப் படுகின்ற இரண்டாவது பிரகாரத்திற்கு அழைத்துச் செல் லுகின்றன. இப்பிரகாரத்தின் தூண்களில் பாலசுப்பிர மணியர், சண்முகர்' நடராசர், விநாயகர், தட்சிணமூர்த்தி ஆகியோரின சிற்பங்கள் நுண்ணிய வேலைபாடுகளுடனும் கலையழகுடனும் விளங்குகின்றன, இப்பிரகாரத்தின் மேற் குப் பகுதியில் மயில்மீது அமர்ந்தகோலத்தில் முருகன் சூரனுடன் போர் புரிவதாகவும் அதன் எதிரில் சூரன் மார்பில் வேல் பாய்ந்திருப்பதாகவும், அவன் பின்னர், சேவல் உருவில் எம்பெருமானை எதிர்த்துப் பாய்ந்து வரு வதாகவும் வடிக்கப் பெற்றுள்ள சிற்பங்க கலையழகு மிக் கவை! காண்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்பவை

இப்பிரகாரத்தின் வடக்குப் பகுதியில் ஒரு கோவில் உள்ளது. அக்கோவிலில் வெங்கடாசலபதி, சந்தான கிருட்டினன் சந்நிதிகள் உள்ளன.

முதல்பிரகாரத்தின் தெற்குப் பகுதியில் காணப்படும் கோவிலில் சயந்திநாதர் என்று அழைக்கப் பெறும் குமார விடங்கக் பெருமான் வள்ளி தேவயானையுடன் காட்சி நல்குகின்றார். இப்பிரகாரத்தின் தென்மேற்குப் பகுதியில் வள்ளி நாயகிக்கும் வடமேற்குப் பகுதியில் தேவயானையம் மனுக்கும் பளிங்குக் கற்காலமைந்த தனித்தனிக் கோவில் கள் விளங்குகின்றன. இப்பிரகாரத்தின் மேற்குப் பகுதியில் சங்கர நாராயணர் காசிவிசுவநாதர், விசாலாட்சி முதலி யோர்க்கும் வடக்குப் பகுதியில் மாணிக்கவாசகர், காரைக் காலம்மையார் முதலியோர்க்கும் சந்நிதிகள் உள்ளன.

கருவரையில் ஆறுமுகப் பெருமான் வள்ளி, தேவ யானையோடு திருக்காட்சி நல்குகின்றார். இவரை ஆறு முக நயினார் என்றும் போற்றுவர். கோவிலின் வெளியி லுள்ள சண்முகவிலாச மண்டபத்திலிருந்தும் ஆறுமுகப் பெருமானைக் கண்ணாரக் கண்டுகளிக்கலாம் ?

## சூரபன்மனை வதைத்தது :

முருகப் பெருமான் சூரபன்மன்மீது படையெடுத்து வரும்பொது வழியில் எதிர்ப்பட்ட தாரகாசுரனையும் அவனுக்குத் துணையாகநின்ற கிரௌஞ்ச மலையையும் அழித்துவிட்டுத் தன்படைகளுடன் திருச்செந்தூரில் வந்து தங்கித் தேவகுருவாகிய வியாழ பகவானிடம் அசுரர்களின் வரலாற்றை அறிந்தார்.

இத்தலத்தில் தங்கிய முருகன் வீரவாகு தேவரைச் சூரபன்மனுக்கு அறிவுரைகள் கூறுமாறு தூது அனுப்பினார்.

அத்துாது பயன் அளிக்காது போகவே, முருகப்பெருமான் சூரபன் மீது போர் தொடுக்கின்றார்.

போரில் சூரபதுமன் பல சாகசங்களைப் புரிகின்றான் அறுமுகப் பெருமான்மீது ஆழிப்படையை விடுக்கின்றான். தன் சாயாகிய மாயவள் உதவியினால் இறந்த படைகளை உயிர்ப்பிக்கின்றான் இந்திர ஞாலத்தேர் சூலப்படை முதலியன ஏவியும் முருகப் பெருமானை வெல்லமுடியவில்லை, சக்கரவாளப் பறவையின் வடிவெடுத்துப் போர்புரிகின்றான். முருகப்பெருமான் பேருருவம் காட்டி அவனை அடக்குகின்றான. இறுதியில் சூரபதுமன் முகில்களைப் போலக் கிளைகளைப் பரப்பி நுாறாயிரம் யோசனை அகன்ற மாமரமாய் உருவெடுத்து நிறகின்றான். மாமரமாக வடிவெடுத்து நிற்கும் சூரபதுமனை முருகன் திருக்கரத்தினின்று சென்ற வேல் பிளவுபடுத்துகின்றது. பின்னர் அவன் சேவலும் மயிலுமாய் ஆர்த்தெழுந்து நின்றபோது முருகப் பெருமான் அவன்மீது மறக்கருணை செலுத்தினார். அவன் ஆணவம் அழிந்தது. சேவலைப் பார்த்து நம்முடைய தேரில் கொடியாக அமர்ந்து. கூவுவாயாக என அருள்பாலித்தார். மயிலைத்தம் ஊர்தியாக ஏற்றுக் கொண்டார். இவ்வரலாறு இத்தலத்தில்தான் நடந்தது.

முருகப்பெருமான் திருக்கையினின்று சென்றவேல் மாமரமாக நின்ற சூரபன்மனைப் பிளவுபடுத்திய இடம் திருச்செந்துாலிருந்து ஆறுமைல் தொலைவில் கடற்கரை ஓரமாக உள்ள மாப்பாடு என்ற பதியே என்பர். அப்பதி இன்று மணப்பாடு என வழங்குகின்றது.

## குமரகுருபரருக்கு அருள் வழங்கியது :

திருநெல்வேலியிலிருந்து 23 கி. மீ. தொலைவில் உள்ளது. திருவைகுண்டம் இதன் வடபகுதியில உள்ளது

திருக்கயிலாயம். அப்பதியில் சண்முகக்க விராயருக்கும் சிவகாம சுந்தரிக்கும் தவப்புதல் வராகக் குமரகுருபரர் தோன்றினார். அவர் ஐந்து ஆண்டுகள் வரை பேசாது ஊமையாகவே இருந்தார். அவர்தம் பெற்றோர் பல வகையிலும் முயன்றனர். பலன் இல்லை. இறுதியில் குழந்தையை எடுத்துக்கொண்டு திருச்செந்தூர் சென்றுமுருகன் கோவிலின் முன்புள்ள சண்முக விலாச மண்டபத்தில் தவமிருந்தனர். செந்தில்வேலவன் ஒருநாள் இரவில் தோன்றிக் குழந்தையின் நாவில் தமது வேலினால் எழுதி 'குருபரா' என விளித்து மறைந்தார். வேலவன் திருக்காட்சி கண்ட குமரகுருபரர் முருகா! முருகா! என்ற குரலோடு எழுந்தார். தங்கள் குழந்தை பேசுவதைக் கண்டபெற்றோர்கள் வேலவனின் திருவருளை வியந்து போற்றினர். குமரன் திருவருளால் பேசும்ஆற்றல் பெற்ற குருபரர் அக்குமரன்மீது கந்தர்கலிவெண்பா பாடினார். அந்நூலே சைவசித்தாந்தத்தின் சாரம் எனப் போற்றப் பெறுகின்றது.

## பகழிக்கூத்தருக்குத் திருவருள் நல்கியது :

இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்தவர் பகழிக் கூத்தர். அவர் ஒரு வைணவப் பெரியார். பெரும் புலவர் இவர் கடுமையான வயிற்று வலியால் துன்புற்றார். அவர் கனவில் செந்திலாண்டவன் தோன்றி ''பிள்ளைத்தமிழ் பாடுக'' எனப் பணிந்தருளினார். பகழிக்கூத்தர் அவ்வாறே அப்பெருமான் மீது ''திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்'' என்ற நூலைப் பாடினார் பாடி முடித்ததும் அவரது நோய் நீங்கியது. செந்திலாண்டவனின் திருவருளை வியந்த பகழிக்கூத்தர் அந்நூலைச் செந்திலாண்டவன் சந்நிதியில் அரங்கேற்றினார். முருகப்பெருமான் மாணிக்கப் பதக்கம் அளித்துப் போற்றியதாக வரலாறு.

# இலக்கியப் புகழுரைகள் :

"அலைவாய்ச் சேறலும் நிலைகிய பண்பே"
"உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்"

எனத் திருமுருகாற்றுப் படையும்'

"சீர்கெழு செந்தில்"

எனச் சிலப்பதி காரமும்,

"வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்"

எனப் புறநானூறும்

"செந்தமிழ் மணக்கும் திருச்செந்தில்"

எனத்திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழும்

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மேந்திய
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீ இச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம்"

எனக் கந்தபுராணமும்'

சீரார் குமரரோ - என்கண்ணே
திருச்செந்தூர் வேலவரோ

என நாட்டுப்புறப் பாடலும் இத்தலத்தினையும் செந்தி லாண்டவனையும் போற்றுகின்றன.

தந்தனா தந்தனத் தந்தனா தந்தனத்
தந்தனா தந்தனத் - தனதான
பங்கமே வும்பிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனில் தடுமாறிப்
பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்
தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கைமால் கொண்டிகளைத் தயரா தே

தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ யன்புவைத் தருள்வாயே
அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுஞ் படவேதான்
அஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
கண்டர்லோ கங்கொடுத் தருள்வோனே!
திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
றொஞ்சடா பஞ்சரத் துறுதோகை
சிந்தையே தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ் பெருமாளே!

என வரும் அருணகிரிநாதரின் திருப்புகழ் நாளும் ஓதி இன்புறத் தக்கது.

## திருவிழாக்கள் :

திருச்செந்தூர் கோவிலில் ஆவணி, ஐப்பசி, மாசி மாதங்களில் நடைபெறும் விழாக்கள் சிறப்புடையவை. ஆவணித் திருவிழாவின்போது ஏழாம்நாள் விழாவில் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என்னும் பஞ்சமூர்த்திகளாக முருகப் பெருமான் இருந்து படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் இயற்றி உலகைக் காப்பதை உணர்த்தும் வகையில் திருக்காட்சி நல்குகின்றார்! அவ்விழாவில் எம்பெருமான் தங்கப் பல்லக்கில் அமர்ந்து முன்புறம் ஆறுமுகத் தோற்றத்திலும் பின்புறம் நடராசர் கோலத்திலும் அளிக்கும்காட்சி கண்கொள்ளா காட்சி!

# 69 திருச்செம்பொன் கோவில்

இத்திருத்தலம் சோழநாட்டிலுள்ள வைணவப்பதி களில் ஒன்று. இத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழி இரயில் நிலையத்திற்குக் கிழக்கே 6கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

## பதி மகிமைகள் :

இத்திருப்பதியில் எம்பெருமான் கோவில் நடுநாயக மாக விளங்குகின்றது. கோவிலின் பெயர் திருச்செம்பொன் செய்கோவில். அக்கோவில் பெயரே தலத்திற்கும் பெய ராக வழங்குகின்றது. இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் பேரருளாளன். எம்பெருமான் கிழக்கே நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் அல்லி மாமலர் நாச்சியார். தீர்த்தம் கனக தீர்த்தம்.

இத்திருப்பதி திருமங்கையாழ்வாரால் மங்களாசா சனம் செய்யப்பெற்ற பெருமையுடையது.

பிறப்பொடு மூப்பொன் றில்லவன் தன்னைப்
பேதியா இன்பவெள் ளத்தை
இறப்பெதிர் காலம்கழிவும் ஆனானை
ஏழிசை யின்சுவை தன்னை

சிறப்புடை மறையோர் நாங்கைநன் னடுவுள்
செம்பொன் செய் கோயிலி னுள்ளே
மறைப்பெரும் பொருளை வானவர் கோனைக்
கண்டுநான் வாழ்ந் தொழிந் தேனே"

— திருமங்கையாழ்வார்

# 70. திருச்சேய்ஞலூர்

சோழநாட்டிலுள்ள பாடல் பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருச்செய்ஞலூார். தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்ப கோணத்திற்கு வடகிழக்கே 12 கி. மீ. தொலைவில் இந் தலம் விளங்குகின்றது. இத்தலத்திற்கு அண்மையில் திருப்பனந்தாளும் திருவாப்பாடியும் இருக்கின்றன.

## தல வரலாறு :

சிவபெருமான் ஆணைப்படி 'சேய்' என்னும் பெயரையுடைய முருகன், தேவர்களின் பகைவனான சூர பதுமனை அழிப்பதற்கு எழுந்தருளினன். முருகன் அவ்வாறு எழுந்தருளி வரும் பொழுது வழியில் இத்தலத்தில் தங்கிச் சிவலிங்கம் அமைத்து வழிபட்டார். அதனால் இத்தலம் சேய் நல்லூார் எனப் பெயர் பெற்று நாளடைவில் .சேய்ஞலூார்ஆயிற்றுபாடல்பெற்றதலமாதலால் திருச்சேய்ஞலூார் என வழங்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள்

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சத்தகிரீசுரர். இறைவி சகிதேவி. தீர்த்தம் மண்ணியாறு. முருகன்

வேல் பெற்ற மகிமையுடையது இத்தலம் சண்டேசுவர நாயனார் வழிபட்டு அருள்பெற்ற பெருமையுடையது. இத்திருத்தலம். திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

பீரடைந்த பாலதாட்டப்
    பேணாத வன்றாதை
வேரடைந்து பாய்ந்ததாளை
    வேர்த்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித்
    தலைமைவ குத்ததென்னே
சீரடைந்த கோயின்மல்கு
    சேய்ஞலூர் மேயவனே

— திருஞானசம்பந்தர்

# 71. திருச்சேறை

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதியாகவும் சிவத் தலமாகவும் திருச்சேறை விளங்குகின்றது தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணம் இரயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கில் 12 கி.மீ. தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது.

## பதியின் வரலாறு :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் சாரநாதன். தாயார் சாரநாயகி. விமானம் சாரவிமானம்

தீர்த்தம் சார தீர்த்தம். நிலம் சாரசேத்திரம். ஐந்து சாரங்களும் இங்கு ஒருசேர அமைந்திருத்தலால் இப்பதி திருச்சேறை என வழங்கப் பெறுகின்றது. வடமொழியில் இப்பதியை "பஞ்ச சார சேத்திரம்" எனப்போற்றுவர்.

மகாவிஷ்ணு மண் எடுத்துக் கடம் செய்து அதில் நான்கு வேதங்களையும் பிறசாத்திர புராணங்களையும் ஆவாகனம் செய்து சம்புத்வீபத்தில் தாபிக்கும்படிப் பிரம்ம தேவருக்குக் கட்டளையிட்டார். பிரம்மதேவர் பலபதிகளுக்கும் சென்று மண் எடுத்துக் கடம் செய்து அதில் வேதங்களை ஆவாகனம் செய்தபோது கடம் பின்னமாகிக் கொண்டேவந்தது. பிரம்மதேவர் கலக்கமுற்று மகாவிஷ்ணுவிடம் முறையிட்டார். அவர் தமக்கு மிகப்பிரியமான சார சேத்திரத்திலுள்ள சார தீர்த்தத்தில் மண் எடுத்து கடம் செய்து ஆவாகனம் செய்யுமாறு அருளினார்.

பிரம்மதேவரும் அவ்வாறே இப்பதியிலுள்ள சார தீர்த்தத்தில் மூழ்கி மண் எடுத்துக்கடம் செய்து வேதங்களை ஆவாகனம் செய்து பிரளய வெள்ளத்திலிருந்து அவற்றைக் காத்தார் கடம் தாபித்த இடம் கும்பகோணம். அதன் வாயில் குடவாசல் சாரதீர்த்தத்தின் மண்ணால் செய்த கடம் பின்னமுறாமையால் தலம் சாரசேத்திரம் எனப் பெயர் பெற்றது என்பது தல புராண வரலாறு.

## பதி மகிமைகள் :

மூல மூர்த்தியாகிய சாரநாதப் பெருமாள் நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கின்றார். மூலவருக்கு வடபுறமாகக் காவேரி தாயாரும் தென்புறமாகக் மார்க்கண்டேயரும் எழுந்தருளியிருக்கின்றனர். மாமதலைப் பிரானாகச் சன்னிதியில் எழுந்தருளியிருக்கின்றார் சந்தான கிருஷ்ணன் உற்சவ மூர்த்திக்குப் பக்

கத்தில். உற்சவர் பக்கத்தில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய மூன்று நாச்சியார்கள் எழுந்தருளியுள்ளனர். திரு விண்ணகரில் பெருமாளுக்குத் தமது மகளைத் திருமணம் செய்வித்த மார்க்கண்டேய முனிவர் இங்கே இறைவனை ஆசிராதித்துப் வீடுபேறு அடைந்ததாக ஐதிகம்.

சாரதீர்த்தத்தின் மேல்கரையின் தென்மேற்குச் சாலையில் தல மரமாகிய அரசு இருக்கின்றது. அதற்கு அருகே (எம்பெருமான்) மாமதலைப் பிரானாகத் தோன்றிய குழந்தையை இடுப்பில் அணைத்த வண்ணம் காவேரித் தாய் கோவிலில் எழுந்தருளியுள்ளாள். பிரமனும் விஷ்ணுவும் காவேரிக்குச் சேவைசாதித்த வண்ணம் சிலாரூபிகளாய் விளங்குகின்றார்கள்.

திருக்கல்யாண மண்டபத்தில் உற்சவ மூர்த்தியாக கோதண்டராமர் வனவாச கோலத்தில் எழுதருளியிருக்கின்றார். சடைமுடியும் மரவுரியும் தரித்து அவர் விளங்குகின்றார். சாரநாயகி தனிக் கோவிலில் எழுந்தருளியுள்ளாள். கோவிலுக்கு எதிரே சாலையின் மறுபக்கம் புஷ்கரணி இருக்கிறது.

இப்பதியினைத் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்.

கண்சோர வெங்குருதி வந்திழிய
வெந்தழல் போல் கூந்த லாளை
மண்சேர முலையுண்ட மாமதலாய்
வானவர்தம் கோவே என்று
விண்சேரும் இளந்திங்கள் அகடுரிஞ்சு
மணிமாட மல்கு செல்வத்
தண்சேறை யெம்பெருமான் தாள்தொழுவார்
காண்மின்என் தலைமே லாரே''

என்ற பாமாலையில் திருமங்கையாழ்வார், எம்பெருமான் குழந்தைகயாக எழுந்தருளிய திருவிளையாடலை நினைந்து இன்புறுகின்றார். எம்பெருமானுடைய திருவடிகளைத் தினந்தோறும் சிந்திக்கின்ற பாகவதர்கள் தம் தலைமேல் வீற்றிருக்கக் கூடிய பெருமை வாய்ந்தவர்கள் என்று போற்றுவதை இப்பாமாலையில் காணலாம்.

## உடையார் கோவில் :

திருச்சேறையில் இருக்கின்ற சிவன்கோவில் உடையார்கோவில் என இந்நாளில் வழங்குகின்றது. கோவில் பெயர் செந்நெறி இறைவன் செந்நெறியப்பர். இறைவி ஞான வல்லி. தௌமிய முனிவர் இத்தலத்தில் வழிப்பட்டுப் பேறு பெற்றுள்ளார். திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

பாடின ரருமறை முறைமுறை
பொருளென வருநடம்
ஆடின ருலகிடை யலர்கொடு
மடியவர் துதிசெய
வாடினர் படுதலை யிடுபலி
யதுகொடு மகிழ்தரும்
சேடர்தம் வளநகர் செறிபொழி
றழுவிய சேறையே

— திருஞானசம்பந்தர்

பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே

— திருநாவுக்கரசர்

# 72. திருச்சோற்றுத்துறை

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருச்சோற்றுத்துறை. தஞ்சாவூர் மாவட்டத்தில் தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் வழியில் சுமார் 7கி. மீ. தொலைவிலுள்ள திருக்கண்டியூருக்குத் தென்கிழக்கே 2 கி: மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது. திருப்பழனத்திலிருந்து 2கி. மீ. தொலைவில் உள்ளது இத்தலம் இத்தலத்திற்கு வடக்கே குடமுருட்டியாறு, காவிரியாறு ஓடுகின்றன.

## தல மகிமைகள்

சிவபெருமானிடத்து மெய்யன்பு பூண்ட அருளாளன் ஒருவன் உலகு அழிபசியால் வருந்துவது கண்டு மிகவும் வாடித்துன்புற்றான். அதனையுணர்ந்த சிவபெருமான் எடுக்களடுக்கக்குறையாத உலவாச்சோற்றுக்கலம் தந்தருளினார். மறையவர் பசியால் வாடும் அனைவருக்கும் உணவளித்து மகிழ்ந்தார். அதனால் இத்தலம் சோற்றுத்துறை எனப் பெயர் பெற்றது. பாடல்பெற்ற தலமாதலால் திருச்சோற்றுத்துறை ஆயிற்று இத்தலத்திற்குத் தெற்கே சோறுடையான் வாய்க்கால் என ஒரு வாய்க்கால் இருக்கின்றது.

## தல மகிமைகள் :

இத்திருத்தலம் ஏழு திருவிடங்களில் மூன்றாவது இறைவன் தொலையாச் செல்வர், இறைவி ஒப்பிலா

வம்மை. வானவர்கோன், பகலோன், கௌதமர் முதலியோர் வருபட்டுப் பேறுபெற்ற தலம் இது கௌதமர் திருவுருவம் கோவிலுக்குள் தென்கிழ்பால் இருக்கின்றது.

பராந்தகன், முதலாம் இராசராசன் கோனேரின்மை கொண்டான், குலோத்துங்கன் முதலானோர் காலத்தைச் சார்ந்த கல்வெட்டுகள் கோவிலில் உள்ளன. இத்தலம் மூவர்தேவாரம் பெற்ற சிறப்புடையது.

துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறற்கா டரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்றாடும்
அடிகள் சோற்றுத் துறைசென் றடைவோமே

— திருஞானசம்பந்தர்

அங்கதி ரோனவனை
அண்ணலாக் கருதவேண்டா
வெங்கதி ரோன் வழியே
போவதற் கமைந்துகொண்மின்
அங்கதி ரோனவனை
யுடன்வைத்த ஆதிமூர்த்தி
செங்கதி ரோன்வணஎகுஞ்
திருச்சோற்றுத் துறையனாரே''

— திருநாவுக்கரசர்

இறந்தார் என்பும் எருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே

— சுந்தர மூர்த்தி நாயனார்.

# 73. திருத்தணி

முருகப் பெருமானுடைய அறுபடை வீடுகளில் ஐந்தாவதாக விளங்குவது திருத்தணி. இத்தலம் செங்கல்பட்டு மாவட்டத்தில் சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் சாலையில் இருக்கின்றது. அரக்கோணத்திலிருந்து வடக்கே 12 கி. மீ. தொலைவில் அமைந்திருக்கின்றது. இக்காலத் தமிழகத்தின் வட எல்லையாக இத்தலம் விளங்குகின்றது. சென்னையிலிருந்து திருப்பதி செல்லும் பேருந்துக்கள் இத்தலத்தின் வழியாக செல்லுகின்றன. திருப்பதி சென்று திருவேங்கடவனைத்தரிசித்த பக்தர்கள் இத்தலத்தையும் தரிசிக்க வேண்டும் என்பது ஐதிகம்.

## தல வரலாறு :

திருத்தணி திருத்தலம் ஒப்பற்ற பெருமையுடையது. இந்திரனுடைய விண்ணுலகத்தைப் போலவும், நான்முகனுடையசத்தியலோகத்தைப்போலவும், திருமாலுடைய வைகுண்டத்தைப் போலவும் சிவபெருமானுடைய சிவலோகத்தைப் போலவும் திருத்தணி சிறந்து விளங்கும். மேலும் நான்முகன் திருமால் சிவபிரான் என்னும் மும்மூர்த்திகளைப் போல் சிறப்பினைப் பிறர் சொல்லக்கேட்டாலும் இம்மலையை அடைந்து முருகக் கடவுளைப் போற்றி வழிபடுவோம் என்னுத் நோக்கத்தோடு திருத்தணியை நோக்கிப் புறப்பட்டாலும் புறப்பட்டவர்களுடைய இிவினை முற்றும் அழுந்தொழியும் முருகப் பெருமான் புகழ் பொருந்திய சரவணப் பொய்கையின்கண் பிறந்த காலத்தில் எழுந்தருளியிருந்த தன்மையைப்போல் எழுந்தருளியிருப்பர் எனத் திருத்தணிகைத் தலபுராணம் சிறப்பிக்கின்றது.

## பெயர் பெற்ற வரலாறு .

உயிர்களைப் பிணைத்துள்ள ஆணவம், கன்மம் மாயை ஆகிய மும்மலங்களே சூரபத்மன், சிங்கமுகன் தாரகன் ஆகிய அசுரர்கள் இவர்களோடும் வேடர்களோடும் புரிந்தபோரின் சோபம் தணிந்து முருகப்பெருமான் இப்பகுதியிலுள்ள மலையில் வீற்றியிருப்பதால் இம்மலை தணிகைமலை ஆயிற்று. தணிகைமலை என்பதே நாளடைவில் திருத்தணி என வழங்குகின்றது.

பொன்னுலகத்தில் உள்ள செல்வங்களெல்லாம் தன்னிடத்திலே நிறையப் பெற்ற காரணத்தால் இத்தலம் சீபூரணகிரி என்று பெயர் பெற்றது. அடியார்களுடைய விருப்பங்களை ஒரு கணப்பொழுதில் நிறைவேற்றுதலால் தணிகாசலம் என்று பெயர் பெற்றது. எல்லாவற்றிற்கும் மூலகாரணனாகிய சிவபெருமானே முருகக்கடவுளை மூல காரணன் என்று தொழுதபடியால் மூலாத்திரி என்று பெயர்பெற்றது. கருங்குவளை மலர்நாள்தோறும் மலர் தலின் அல்லகாத்திரி என்று பெயர்பெற்றது. இக்காரணத் தினால் நீலோற்பலகிரி, உற்பலகிரி, கல்லாரகுரி, காவி மலை, நீலகிரி, குவளைச்சிகரி எனப்பலவாறு பெயர் பெற் றுள்ளது. கற்பகத்தின் முடிவிலும் இந்நகர் அழியாமை யால் கற்பசித் என வழங்குதலும் உண்டு.

முருகக்கடவுள் பிரணவப் பொருளைச் சிவபிரானுக்கு உரைத்தருளியதால் பிரணவார்த்த நகரம் எனவும் இந்திரன் வரம்பெற்ற இடமாகையால் இந்திரி எனவும் நாரதர் விருப்பமுற்றஇடமாகையால் நாரதப் பிரியம் எனவும் அகோரன்என்னும் தவத்தினன் வீடுபெற்ற நகராகையால் அகோர கல்வயைப்ரதம் எனவும் கந்தக் கடவுள் எழுந்தருளியிருப்பதால் கந்தகிரி எனவும் இத்தலம் பலபெயர்களைப்

பெற்றுள்ளது. இவ்வளவு பெயர்களைப் பெற்றிருந்தாலும் திருத்தணி என்ற பெயரே இந்நாளில் வழங்கி வருகின்றது.

## தல மகிமைகள் :

தணிகைமலை இத்தலத்தின் நடுவில் சுமார் 400 அடி உயரத்தில் விளங்குகின்றது .நான் குபிரகாரங்களுடன் அழகு மிகுந்த அறுமுகப் பெருமானின் கோவில் விளங்குகின்றது. சுர்ப்பக்கிரகத்தில் தணிகைப் பிரான் சுந்தரவடிவினராய் வலக்கரத்தில் வேலினைத் தாங்கியும் இடக்கரத்தைத் தொடையில் வைத்தும் தனித்துநின்று அன்பர்கட்குத் திருக்காட்சி நல்குகின்றார். முருகப்பெருமான் வள்ளிமலையில் வள்ளிநாயகியை மணம் புரிந்துகொண்டு தணிகை மலையில் வந்துதங்கி அன்பர்கட்கு அருள் பாலிப்பதாகப் பக்தர்கள் போற்றுவர்.

## குமாரலிங்கம்

முருகக்கடவுள் ஞானசக்தியாகிய வேற்படையைப் பெற விரும்பினார். கயிலாயத்திலுள்ள கங்கையைத் தணிகைமலைக்கு வரவழைத்தார். தாம் எழுந்தருளியுள்ள இடத்திற்கு வடகீழ்ப் பக்கத்தில் ஆபத்சகாய மூர்த்தியை அமைத்து வழிபட்டார். சிவக்குறியினையும் நிலைநிறுத்திப் போற்றினார். சிவபிரான் முருகக்கடவுளின் முன் தோன்றி, '' உமக்கு வேண்டியது யாது '' என அருள முருகப் பெருமான் தமக்கு அவுணர்களுடைய உயிரைக் குடிக்கும் ஞானசக்தி வேண்டும் என்றார். அச்சிறப்பினை அருளிவிட்டுச் சிவலிங்கத்தில் மறைந்தருளினார் அந்த இலிங்கம் குமாரலி.ங்கம் எனப் போற்றப் பெறுகின்றது. இது மலை மீது கோவிலின் வடக்குச் சுற்றில் விளங்குகின்றது. ஞானசக்தி பெற்ற சுவாமிக்கு,

ஞானசத்திதரர் என்று பெயர். அவரால் வரவழைக்கப் பெற்ற கைலைக் கங்கைக்குக் குமார தீர்த்தம் என்று பெயர் மாசிமகத்தில் இப்புனித நீரில் நீராடிக் குமாரலிங்கத்தையும் ஞானசத்திதரரையும் போற்றி வழிபடுதல் சிறப்புடையது என்பர்.

## நான்முகன் தவம் செய்த தலம்

முருகப்பெருமானால் சிறையினின்றும் விடுபட்ட நான்முகன் மீண்டும் படைப்புத் தொழிலில் ஈடுபட்டார் ஆனால் தொழில் கைக்கூடவில்லை அதனால் இறைவனை நினைந்து தவம் செய்தார் இறைவனோ ''தணிகைமலையின் பெருமையை விளக்கித் தம் சேயைக் குறித்துத் தவம் செய்தால் உன் எண்ணம் நிறைவேறும்'' என்றார். நான்முகன் தணிகை மலையை அடைந்து மலைக்குக் கிழக்குப் பக்கத்தில் புனித நீர் ஒன்று உண்டாக்கி ஆபத்சகாய விநாயகரைப் போற்றினான். இறைவனையும் முருகனையும் வணங்கி முருகப் பெருமானைக் குறித்துத் தவம் செய்தான். முருகப்பெருமான் தோன்றி நான்முகன் விரும்பிய வரத்தினை அருளினார் வைகாசித் திங்கள் விசாகநாளில் பிரம தீர்த்தத்தில் நீராடுவது மிக சிறப்பாகும் என்பர்.

## நந்தி தேவர் அருளுரை பெறுதல்

நந்திதேவர் இறைவனிடம் சிவதத்துவ அமிர்தம் எனப் படும் புனிதநீரை வரவழைத்து அதில்யான் முழுகுமாறு செய்தருளுதல் வேண்டும். மேலும் பதி, பசு, பாச இலக்கணங்களை உணர்ந்து கடைத்தேறவும் அருள் புரிதல் வேண்டும்'' என வேண்டினார். இறைவன் ''தணிகை மலைக்குச் சென்று தவம் புரிந்தால் முருகன் நீ வேண்டியதை அருள்வான்'' என்றருள் செய்ய அவ்வாறே நந்திதேவரும் தணிகை சென்று தவம் புரிந்தார்.

முருகப்பெருமான் தணிகைக்கு திருதி திக்கில் இருந்து சிவதத்துவ அமிர்தம் எனப்படும் அப்புனித நீரை வரவழைத்தார். அது தணிகைமலையை வலமாக வந்து வீராட்ட காசத்தை அடைந்து கடலுக்குச் சென்றது. அத்திருத்த நீராற்றுக்கு நந்தி நந்தினி, நந்தியாறு என்னும் பெயர்கள் உண்டு. நந்திதேவர்தவம் செய்த குகை நந்தி குகை என்னும் பெயர்பெற்றது. நந்திதேவர் அவ்வாற்றில் மூழ்கிப் பதி பசு பாச இலக்கணங்களையெல்லாம் உரைக்கப் பெற்றார். இந்த ஆற்றில் தைப்பூசத் திருநாளில் நீராடுவது மிகுந்த பலனைத் தரும் என்பர். அருளுரை பெற்ற நந்திதேவர் திருக்கோவிலை வணங்கிப் பிறகு குன்றினை வணங்கிப்பிறகு நந்தியாற்றை வணங்கித் தணிகைமலை கண்ணுக்கு மறையும் வரையிலும் அம் மலையைத் தரிசித்துக் கொண்டு புறங்காட்டாது கயிலை சென்றார் என்பது தலபுராண வரலாறு.

## அகத்தியர் அருள் பெறுதல்

அகத்தியர் செந்தமிழ் மொழியைத்தமக்கு அறிவுறுத்தி மெய்யறிவினை வழங்குமாறு இறைவனிடம் வேண்ட இறைவன் தணிகையில் முருகனை நினைந்து தவம் செய்தால் உமது எண்ணம் நிறைவேறும் என அருளினார். அவ்வாறே அகத்தியர் முன்தோன்றி அகத்தியருக்குத் தமிழ் மொழியின் இலக்கணங்களையெல்லாம் உரைத்தருளினார். அகத்தியர் தணிகைமலையில் நெடுநாட்கள் இருந்து பின்னர் பொதியமலை அடைந்தார் என்பர்.

நாரணன், இந்திரன், இராமன், நாரதர் முதலனோரும் இத்தலத்தில் வழிபட்டு அருள் பெற்றனர்.

## திருவிழாக்கள்

இத்தலத்தில் ஆண்டு முழுவதும் பல்வேறு விழாக்கள் நடைபெறுகின்றன. ஆடிக்கிருத்திகை விழா மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இவ்விழாவின்போது இலட்சக்கணக்கான பால்காவடிகளையும் புஷ்பக் காவடிகளையும் அடியவர்கள் எடுத்துக் கொண்டு,

"வேல் முருகனுக்கு அரோஹரா"
"ஆறுமுகனுக்கு அரோஹரா"

என ஆனந்தக் குரல் எழுப்பிவரும் காட்சி கண்கொள்ளாக் காட்சி!

## இலக்கியங்கள்

அருணகிரிநாதர், நக்கீரர், கச்சியப்ப முனிவர், கந்தப்ப தேசிகர், பாம்பன்சுவாமிகள், தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் முதலானோர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்,

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்குஞ்
செகுத்தவர் உயிர்க்குஞ் சினமாகச்
சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென றறிவோம்யாம்
நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்
நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் செயல்தாராய்
தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுந்தந் தனபேரி

தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்குந்
தளத்துடன் நடக்குங் கொடுசூரர்
சினத்தையு முடற்சங் கரித்தம லைமுற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா
தினைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெதண்
திருத்தணி யிருக்கும் பெருமானே

என அருணகிரிநாதர் அருளியுள்ள இத்திருப்புகழ் பாமாலையினைத் தினந்தோறும் பாடுபவர்கள் எல்லாத் துன்பங்களும் நீங்கப்பெற்று பல்வளமும் வளமுடன் வாழ்வர்!

# 74. திருத்தண்கா

தொண்டை நாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில் ஒன்று திருத்தண்கா. இத்திருப்பதி செங்கல்பட்டு மாவட்டத்தில் காஞ்சிபுரம் இரயில் நிலையத்திற்குத் தெற்கே 3 கி.மீ. தொலைவில் விளங்குகின்றது 'கா' என்பது சோலை எனப் பொருள் பெறும். குளிர்ந்த சோலைகள்சூழ்ந்த பதியாதலால் 'தண்கா' ஆயிற்று, பாடல் பெற்ற பதியாதலால் திருத்தண்கா என வழங்குகின்றது.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் கோவில் கொண்டுள்ள எம்பெருமான் விளக்கொளிப் பெருமாள் தீபப்பிரகாசர், திவ்வியப்பிரகாசர் என்றும் போற்றப் பெறுவர். தாயார் மரகதவல்லி. தீர்த்தம் சரசுவதி தீர்த்தம். எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் மேற்குநோக்கி சேவை சாதிக்கின்றார் திருமங்கையாழ்வார் இத்திவ்விய தேசத்தை மங்களாசனம் செய்துள்ளார்.

முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை மூவா
மூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற
அளப்பரிய ஆரமுதை அரங்கம் மேய
அந்தணனை அந்தணர்தம் சிந்தை யானை
விளக்கொளியை மரகதத்தைத் திருத்தண் காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகஎன்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கி னாளே

என வரும் திருமங்கையாழ்வாரின் பாமாலை நாளும் ஓதி இன்புறத் தக்கது.

# 75. திருத்தண்கால்

பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற வைணவத்திருப்பதி திருத்தண்கால். காமராசர் மாவட்டத்தில் சாத்தூர் இரயில் நிலையத்திற்கு மேற்கே 16கி. மீ. தொலைவில் இத்திருப்பதி திகழ்கின்றது.

இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் தண் காலப்பன் அதனால் இப்பதி திருத்தண்கால் ஆயிற்று. எம் பெருமான் தென்றல்போலத்தன்னை வழிபடும் அன்பர் களின் உள்ளத்திற்கு இன்பம் நல்குவதால் திருத்தண்கால் என இத்திருப்பதி வழங்குகின்றது.

## பதி மகிமைகள் :

இப்பதியில் எம்பெருமான் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் அன்னநாயகி

அம்ருதநாயகி, ஜாம்பவதி என நால்வர் விளங்குகின்றனர். தீர்த்தம் பாவவிநாசம் திருமங்கையாழ்வாரும் பூதத்தாழ் வாரும் இத்தலத்தை மங்களாசசாஎனம் செய்துள்ளனர்.

பொங்கார்மெல் லிளங்கொங்கை பொன்னே பூப்பப்
பொருகயல்கண் ணீரரும்பப் போந்து நின்று
செங்கால மடப்புறவம் பெடைக்குப் பேசும்
சிறுகுரலுக்கு குடலுருகிச் சிந்தித்து ஆங்கே
தண்காலும் தண்குடந்தை நகரும் பாடித்
தண்கோவ லூர்பாடி யாடக்கேட்டு
நங்காய்நங் குடிக்கிதுவோ நன்மை என்ன
நறையூரும் பாடுவாள்நவில்கின் றாளே''

— திருமங்கையாழ்வார்

# 72. திருத்தண்டலை நீணெறி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருத் தண்டலை நீணெறி இத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருத்துறைப்பூண்டி இரயில் நிலையத்திலிருந்துவடக்கே 4 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. மணலி இரயில் நிலை யத்திற்கு அருகில் இத்தலம் உள்ளது.

## தல வரலாறு :

தண்டலை என்பது சோலை எனப் பொருள் பெறும் இத்தலதில் எழுந்தருளியுள்ள இறைவன் நீணெறிநாதர் சோலைகள் சூழ்ந்த பகுதியில் நீணெறிநாதர் கோவில்

கொண்டுள்ளமையால் தண்டலை நீணெறி என இத்தலம் வழங்குகின்றது இத்தலம் தண்டலைச்சேரி எனவும் வழங்கப்பெறும். பாடல்பெற்ற தலமாதலால் திருத்தண்டலை நீணெறி ஆயிற்று.

## தல மகிமைகள்

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவி ஞானாம்பிகை. கோவில்மரம் குருந்தம். திருமால் கூர்மவடிவத்தில் நெருக்குற்றுக் கடலைக் கலக்கினார். சிவபெருமான் அந்த ஆமையை அடக்கி அதன் ஓட்டை அணிந்துகொண்டது இத்திருத்தலத்தில் தான் !

63 நாயன்மார்களில் ஒருவரான அரிவாட்டாய நாயனார் செந்நெல்லரிசி, மாவடு, செங்கீரை கொண்டு சிவபெருமானை இத்தலத்தில் வழிபட்டார். அவருடைய ஊரான கணமங்கலம் இத்தலத்திற்குக் கிழக்கே அரை கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

தண்டலையார் 'சதகம்' என்னும் சிற்றிலக்கியம் இத்தலம் பற்றி எழுந்துள்ளது. இத்தலத்தைப் போற்றித் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

விரும்புந் திங்களுங் கங்கையும் விம்மவே
சுரும்புந் தும்பியுஞ் சூழ்சடை யார்க்கிடம்
கரும்புஞ் செந்நெலுங் காய்கமு கின்வளம்
நெருங்குந் தண்டலை நீணெறி காண்மினே''

— திருஞானசம்பந்தர்

# 80. திருநாமநல்லூர்

நடுநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருநாமநல்லூர். தென்னார்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டி இரயில் நிலையத்திலிருந்து 13 கி. மீ, தொலைவில் இத்திருத்தலம் இருக்கின்றது.
இத்தலத்திற்கு வடபுறம் பெண்ணையாறும் தென்புறம் கெடில ஆறும் ஓடுகின்றன.

திருநாமநல்லூர்ப் பகுதி நாவல் மரங்கள் நிறைந்த பகுதி மேலும் கோவில் மரம் நாவல். அதனால் இத்தலம் நாவல் நல்லூர் எனப் பெயர்பெற்றது. பாடல்பெற்ற திருத்தலம். எனவே திருநாவால் நல்லூர் எனப்பெயர் பெற்று நாளடைவில் பேச்சு வழக்கில் திருநாமநல்லூர் [illegible]கி வருகின்றது.

I :

[illegible] எழுந்தருளியுள்ள இறைவன் நாவலே [illegible]ந்தராம்பிகை தீர்த்தம் கோமுகி தீர்த் [illegible] தனியாகச் கோவில் உள்ளது. சிவன் [illegible]மன் கோவிலுக்கும் நடுவில் வரதராசப் [illegible] விளங்குகின்றது.

நாயன்மார்களில் சுந்தரமூர்த்தி நாய [illegible] தந்தையார் சடையநாயனார், தாயார் [illegible] அப்பகுதியை ஆண்ட நரசிங்க முனை [illegible] ஆகிய நால்வரும் அவதரித்த மகிமை [illegible]லு ஊர், சுந்தரர் நாவலூரில் தோன்றி

ரூட்டிக் குருவடிவுடன் எழுந்தருளி அருமறை உபதேசித்தனர் என்பர். சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் காட்சி கொடுத்த இறைவன் விமானத்தில் விளங்குகின்றார்.

நாரதர், வீமன், கதிரவன் முதலானோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் இது! கோவிலுக்குள் நாரதர், வீமன், கதிரவன் வழிபட்ட இலிங்கங்கள் விளங்குகின்றன. அருணந்தி சிவாச்சாரியார் கோவிலும் சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட பெருமாள் கோவிலும் கோவிலுக்கு வெளியில் குளத்துக்கு அருகில் உள்ளன. சுந்தரர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

அரும்பார்ந் தனமல் லிகைகண் பகஞ்சாடிச்
சுரும்பாரக் கொணர்ந்தெற்றி யொர்பெண்ணை வடபால்
கரும்பார் மொழிக்கன் னியராடுந் துறையூர்
விரும்பா வுனைவேண்டிக் கொள்வேன் றவநெறியே
— சுந்தரமூர்த்தி நாயனார்

# 78. திருத்தேவனார் தொகை

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருப்பதி திருத்தேவனார் தொகை. தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழி இரயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 6 கி. மீ. தொலைவில் இத்திவ்வியத்தேசம் விளங்குகின்றது. இது வைணவத் திருப்பதியாகும்.

## பதி வரலாறு

தேவர்கள் பாற்கடலைக் கடைந்தபொழுது வெளிப் போந்த திருமகளை எம்பெருமான் இப்பதியில்தான் மணந்து கொண்டார். எம்பெருமான் திருமணத்திற்குத் தேவர்கள் திரண்டு வந்திருந்தனர். இதனால் இத்திருப்பதி தேவனார் தொகை எனப்பெயர் பெற்றது. பாடல்பெற்ற பதியாதலால் திருத்தேவனார் எனப் போற்றப் பெறு கின்றது.

## பதியின் வரலாறு :

இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் தெய் வநாயகப் பெருமாள். உற்சவமூர்த்தி மாதவப் பெருமாள். தாயார் கடல்மகள் நாச்சியார். தீர்த்தம் சோபன புஷ்கரிணி.

எம்பெருமான் திருமணம் நடைபெற்ற பதியாக இது விளங்குவதால் திருமணமாகாதவர்கள் இப்பதிக்கு வந்து வழிபாடுசெய்தால் விரைவில் திருமணம் நடப்பது இப்பதியின் மகிமையாகும். மகப்பேறு இல்லாதவர்களும் இப்பதிக்கு வந்து வழிபட்டால் மகப்பேறு அடைவர். இத் திவ்வியதேசத்தைத் திருமங்கையாவார் மங்களசாசனம் செய்துள்ளார்.

# 79. திருத்தேவூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருத்தேவூர். இத்திருத்தலம் தஞ்சாவூர் மாவட்

டத்தில் நாகப்பட்டினத்திற்கு மேற்கே 9 கி. மீ. தொலைவிலுள்ள கீழ்வேளூர் இரயில் நிலையத்திற்குத் தெற்கே 3 கி. மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன், தேவ குருநாதர். மேலும் தேவகுரு, இந்திரன் முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றனர். இக்காரணங்களால் இத்தலம் தேவூர் எனப்பெயர் பெற்றது. பாடல் பெற்ற தலமாதலால் திருத்தேவூர் என வழங்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள்

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவி மதுரமொழி அம்மை. தீர்த்தம் தேவதீர்த்தம் கோவில்மரம் வாழை, கௌதமன், குபேரன், பகலோன் முதலானோர் வழிபட்டுப் பேறுபெற்ற மகிமையுடையது இத்தலம். கட்டுமலையின் வடபகுதியில் கௌதமலிங்கம் விளங்குகின்றது. திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

வன்பு யத்தவத் தானவர்
புரங்களை எரியத்
தன்பு யத்துறத் தடவரை
வளைத்தவன் தக்க
தென்த மிழ்க்கலை தெரிந்தவர்
பொருந்திய தேவூர்
அன்பன் சேவடி அடைந்தனம்
அல்லலொன் றிலமே

— திருஞானசம்பந்தர்

# 77. திருத்துறையூ

நடுநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்
துறையூர். இத்தலம் தென்னார்க்காடு ப
பண்ணுருட்டி இரயில் நிலையத்திற்கு வடமே
தொலைவில் இருக்கின்றது. இத்தலம் தெ
பாற்றுக்கு வடகரையில் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

ஆறுகளில் மக்கள் இறங்கி நீரைப் ப
தற்குரிய படிகள் உள்ள இடம் 'துறை' எ
பெறும். அதே போன்று மக்கள் இறையருளை
வும் கோவில்களும் துறைகள் எனப் போற்றப்
இறைவன் கோவில் கொண்டிருப்பதாலும்
ருப்பதாலும் இத்தலம் திருத்துறையூர் எனப்
றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறை
நாதர். இறைவி பூங்கோதைநாயகி.

சிவஞான சித்தியார் என்னும் சைவசித்
இயற்றிய அருணந்தி சிவாசாரியார் பிறந்து வி
இது! சுந்தரமூர்த்தி நாயனார் தெய்வக்காட்
இது. இறைவன் சுந்தரமூர்த்தி நாயனாருக்

யதால் ' நாவலூரரர் ' என அழைக்கப் பெற்றார். சுந்தரர் தமது திருநாவலூார்த் தேவாரப் பதிகத்தின் இறுதிப் பாடலில்,

" நாதனுக்கு ஊர் நமக்கு ஊர் நரசிங்க முனையாரையன்
ஆதரித்து ஈசனுக்கு ஆட்செயும் ஊர் "

எனப் பாடியிருப்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

கோவிலுக்குள் தென்கிழக்கு மூலையில் சுந்தரர், பரவையார், சங்கிலியார் ஆகியோருக்கு ஒரு தனிக்கோவில் உண்டு. கோவிலில் சுந்தரர் பிறந்தநாள் விழா ( ஆவணி உத்திரம் ) வீடுபேறுற்ற நாள்விழா ( ஆடி - உத்திரம்- ஆகியவை சிறப்பாகக் கொண்டாய் பெறுகின்றன. கோவிலின் வடபால் சுந்தரர் பிறந்தமனையில் நினைவுக் குறியாக ஒரு மாளிகை கட்டப்பட்டு வருகின்றது.

## இலக்கியங்கள் :

சுந்தரர் இத்தலத்தைப் போற்றிப் பதிகம் பாடியுள்ளார் அருணகிரிநாதரும் திருப்புகழில் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார். திருநாவுக்கரசர் இத்தலம் பற்றித் தனியாகப் பதிகம் பாடவில்லை என்றாலும் தமது தெவாரத்தில் பூவனூர்த் திருக்குறுந்தொகை எட்டாவது பாடலில் திருநாவலூரைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார் இராசப்பநாவலர் இத்தலம் பற்றிப் புராணம் பாடியுள்ளார்

தன்மையினாலடி யேனைத்தா
மாட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள்பேசிட வன்றொண்ட
னென்பதோர் வாழ்வுதந்தால

புன்மைகள்பேசவும் பொன்னைத்தந்
தென்னைப்போ கம்புணர்த்த
நன்மையினார்க்கிட மாவதுநந்திரு
நாவலூரே''

— சுந்தரமூர்த்தி நாயனார்

# 81 திருநாரையூர்

சோழநாட்டில் காவிரிக்கு வடகரையிலுள்ள பாடல் பெற்ற சிவத் தலங்களில் ஒன்று திருநாரையூர், தென்னார்க் காடு மாவட்டத்தில் சிலம்பரத்திற்குத் தென்மேற்கில் 13 கி. மீ. தொலைவில் சிதம்பரம் மன்னார்குடி சாலையில் திரு நாரையூர் விளக்குகின்றது

## தல வரலாறு :

முற்கலர் புதல்வர்ான புக்சுஸ்டி முனிவரை நாராயண முனிவர் அவமதித்தார். அதனால் அவர்சபபம் பெற்று நாரை வடிவில் இத்லத இறைவனை வழிபட்டுப் பேறு பெற்றார். அதனால் இத்தலம் நாரையூர் எனப் பெயர் பெற்றது பாடல் பெற்ற தலமபதலால் இத்தலம் திருநாரையூர் ஆயிற்று.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சௌந்தரேசுரர் இறைவி திரிபுரசுந்தரி, தல விருட்சம் புன்ரைகம் தீர்த்தம் காருண்ய தீர்த்தம்.

## பொல்லாப் பிள்ளையார் கோவில் :

தேவாரத்தை இசைக்கேற்பத் திருமுறைகளாக வகுத்த நம்பியாண்டார் நம்பி பிறந்த தலம் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பின் தந்தையார் திருநாரையூரில் உள்ள பொல்லாப் பிள்ளையார் கோவிலில் திருப்பணி செய்து கொண்டிருந்தார் ஒருநாள் அவர்தம் தந்தையார் வெளியூர் சென்றுவிட்டார் அன்று நம்பியாண்டார்நம்பி பிள்ளையாரை நீராட்டி வித்து அமுது படைத்தார் ஆனால் பிள்ளையார் அமுதை உண்ணவில்லை. அது கண்டு நம்பியாண்டார்நம்பி பெரிதும் வருந்தினார், வழிபாட்டில் தாம் ஏதோ குற்றம்புரிந்துவிட்டதாகக்கருதிகருங்கல்லில்தம் மண்டையை மோதிக் கொண்டார் பிள்ளையார் தோன்றி அவரைத் தடுத்து நிறுத்தி அமுது உண்டார் என்பது வரலாறு.

வீடு திரும்பிய தந்தையாருக்கு நம்பியின் செயல் தெரிய வந்தது. அவர் பொல்லாப் பிள்ளையாரின் அருளை நினைந்து போற்றினார். சோழ மன்னன் இராசராசன் நம்பியின் பெருமையை அறிந்தான் அவன் தேவாரத்தைத் தேடியலைந்தான். தில்லையில் இருப்பதாக அறிந்தான். தில்லை சென்று மூவாயிரவரை வினவினான். "மூவர் வந்தால் மட்டுமே அறை திறக்கும் என்று கூறிவிட்டனர்.

நம்பியாண்டார் நம்பி பொல்லாப் பிள்ளையாரை வேண்டிக்கொண்டார். தேவாரப் பதிகங்கள் தில்லையம் பலத்தின் புறக்கடையில் வைத்துக் கையடையாள மிடப் பெற்றுள்ளதாக அருளினார் பிள்ளையார். மன்னர் மூவர் திருவுருவங்களையும் எழுந்தருளப்பண்ணி அம்பலவர்க்கு விழா நடத்தினான். பின்னர் கதவைத் திறந்து பார்த்த போது பெரிய கறையான் புற்றுக்காணப்பட்டது. அப்புற் றைக் கரைத்து உள்ளே பார்த்தபோது தேவார ஏடுகள்

கிடைத்தன. பின்னர் நம்பியாண்டார் நம்பி அதனை வகை தொகை வளப்படுத்தித் திருமுறைகளை வகுத்தார் என்ற வரலாற்றைத் திருமுறை கண்ட புராணத்தால் அறியலாம்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் இத் தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர். திருநாவுக்கரசர் தில்லையில் நடராசரைத் தரிசித்துக் கொண்டிருக்கும் காலத்தில் ஆளுடைய பிள்ளையார் ஞானப்பால் உண்ட வரலாற்றைத் தொண்டர் மூலம் அறிந்தார். இறையருள் பெற்ற அடியாரைத் தரிசிக்கும் பொருட்டுத்தில்லைக் கூத்தரிடம் விடைபெற்றுச் சீர்காழியை நோக்கிச் சென்ற திருநாவுக்கரசர் திருநாரையூரை இடைவழியில் தரிசித்தார் என்பர் சேக்கிழார் சுவாமிகள். திருஞானசம்பந்தர் திருக்கடம் பூரைத் தரிசித்துவிட்டுத் திருநாரையூரை அடைந்தார் என்பர்.

ஊழியும் இன்பமுங் காலமாகி
உயருந் தவமாகி
ஏழிசை யின்பொருள் வாழும்வாழ்க்கை
வினையின் புணர்ப்பாகி
நாழிகை யும்பல ஞாயிறாகி
நளிர்நாரை யூர் தன்னில்
வாழியர் மேதகு மைந்தர் செய்
யும்வகையின் விளைவாமே

—திருஞானசம்பந்தர்

செம்பொன்னை நன்பவளந் திகழு முத்தைச்
செழுமணியைத் தொழுமவர் தஞ் சித்தத்தானை
வம்பவிழு மலர்க்கணைவேள் உலக்க நோக்கி
மகிழ்ந்தானை மதிற்கச்சி மன்னு கின்ற
கம்பனையெங் கயிலாய மலையான் தன்னைக்
கழுகி னொடு காகுத்தன் கருதி யேத்தும்

நம்பனையெம் பெருமானை நாதன் தன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே

— திருநாவுக்கரசர்

# 82. திருநின்றவூர்

தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில் ஒன்று திருநின்றவூர். இத்திருப்பதி செங்கல் பட்டு மாவட்டத்தில் தின்னனூர் இரயில் நிலையத்திற்குத் தெற்கே ஒரு கி. மீ தொலைவில் இருக்கின்றது. சென்னைக் கும் திருவள்ளூருக்கும் இடையில் இத்திருப்பதி அமைந் துள்ளது.

## தல வரலாறு :

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் நின்றகோலத்தில் சேவை சாதிப்பதால் இத்திருப்பதி திரு நின்றவூர் எனப் பெயர் பெற்றது என்பர். இத்திருப்பதி நீர்வளம் வாய்ந்து வளங்கொழிக்கும் தலமாக விளங்குகின் றது. அதனால் திருநின்றவூர் எனப்பெயர் பெற்றது என் றும் கூறுவர்.

## பதி மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் பக்தவத்சலர் தாயார் என்னைப் பெற்ற தாயார். தீர்த்தம் வருணபுஷ்கரிணி. எம்பெருமானுக்குப் " பத்தராவிப் பெரு மாள் " என்ற பெயரும் உண்டு. பக்தர்களின் உயிருக்கு

உயிராய் இருப்பவர் இந்த எம்பெருமான் அதனால் அந் நாமம் பெற்றார்,

திருமங்கையாழ்வார் இத்திருப்பதியை மங்களாசா சனம் செய்துள்ளார்.

"பூண்டவத்தம் பிறர்க்கடைந்து தொண்டுபட்டுப்
பொய்ந்நூலை மெய்ந்நூலென் றென்றுமோதி
மாண்டுஅவத்தம் போகாதே வம்மின் எந்தை
என்வணங்கப் படுவானை கணங்க ளேத்தும்
நீண்டவத்தைக் கருமுகிலை எம்மான் தன்னை
நின்றவூர் நித்திலத்தைத் தொத்தார்சோலை
காண்டவத்தைக் கனலெரிவாய்ப் பெய்வித்தானைக்
கண்டதுநான் கடல்மல்லைத் தலசயனத்தே

என்ற பாமாலை பாடி இன்புறத் தக்கது.

" சீர் அறிந்து தோழிமீர் !
சென்று கொணர்ந்து எனக்குப்
போரர முலை முகட்டில்
பூட்டுமினோ - நேர் அவுணர்
பொன்றவூர் புட்கழுத்தில்
பொன்னைமா ணிக்கத்தை
நின்றவூர் நித்திலத்தை
நீர் "

எனத் திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் இந் திருப்பதியைப் போற்றியுள்ளார்.

# 83. திருநீர்மலை

தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில் ஒன்று திருநீர்மலை. சென்னை மாநகருக்கு அருகிலுள்ள பல்லாவரம் இரயில் நிலையத்திலிருந்து 5 கி. மீ. தொலைவில் இருக்கின்றது இத்திருப்பதி காண்டப வனம் என்றும் இத்திருப்பதியை வழங்குவர்.

## பதி வரலாறு :

திருமங்கையாழ்வார் பதிகள் தோறும் சென்று எம் பெருமானைத் தரிசித்து வந்தார். இப்பதிக்கு வந்தபோது இப்பதியினைச் சுற்றி நீர் நிறைந்திருந்தது. அதனால் இப் பதியினைச் சற்றுத் தொலைவிலுள்ள மந்திரகிரியில் ஆறு மாதங்கள் தங்கியிருந்து எம்பெருமானைத்தரிசித்தார். பின் னர் நீர் வற்றியது. ஆழ்வார் இப்பதிக்கு வந்து எம்பெரு மானைத் தரிசித்ததாக வரலாறு. இதனால் இத்திருப்பதி திருநீர்மலை எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர்.

பூதத்தாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் இத்திருப் பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர். திருவரங்கம், திருவேங்கடம், திருக்கோட்டியூர் ஆகிய திவ்வியத் தேசங் கள் மிகப்பழமை வாய்ந்தவை. அதைப் போன்றே இத் திருப்பதியும் மிகப்பழமையானது என்றும் எழில் கொழிக் கும் சோலைகள் சூழ்ந்தது என்றும் இந்நிலவுலகத்திற்கு அணிகலன் போன்று விளங்குவது என்றும் பூதத்தாழ்வார் இத்திருப்பதியின் தொன்மையினையும் சிறப்பினையும் எடுத் துரைத்துள்ளார்.

## பதியின் மகிமைகள் :

மலையின்மேலும் மலை அடிவாரத்திலும் எம்பெருமான் எழுந்தருளியுள்ளார். மலையின் மேலுள்ள கோவிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் அரங்கநாதன் தெற்கே நோக்கிய திருமுக மண்டலங்கொண்டு கிடந்த திருக்கோலத்தில் எம்பெருமான் சேவை சாதிக்கின்றார். எம்பெருமான் கொண்டுள்ள சயனத்திருக்கோலத்தை ''மாணிக்க சயனம்'' என்று போற்றுவர்.

சுற்றுப் பிராகாரத்தில் உலகளந்த மூர்த்தி நடந்த திருக்கோலத்தில் சேவை சாதிககின்றார். அப்பிராகாரத்திலேயே பிரகலாதனுக்குக் காட்சி அருளிய வீரநரசிங்க மூர்த்தி சாந்த மூர்த்தியாக இருந்த திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார்.

மலையடிவாரத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் நீர்வண்ணன். திருக்கோவிலின்முன் வாயிலை அடுத்து இந்த எம்பெருமான் எழுந்தருளியுள்ளார். நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுகமண்டலத்துடன் இவர் சேவை சாதிக்கின்றார்.

திருநாரையூரில் நின்ற திருக்கோலம்; திருவாலியில் நரசிங்க உருவில் வீற்றிருந்த திருக்கோலம்; குடந்தையில் பள்ளி கொண்டதிருக்கோலம்; திருக்கோவலூரில் உலகளந்தத் திருவடிகளை நீட்டி நடக்கும் திருக்கோலம்; இவ்வகையில் பதிக்கு ஒருவகைக் கோலமாகச் சேவை சாதிக்கும் எம்பெருமான் அந்தநால்வகைக் கோலத்திலும் திருநீர்மலையில் சேவை சாதிப்பதைக் கண்டு இன்புற முடிகின்றது.

தாயார் அணிமாமல் மங்கை. சக்கரவர்த்தித் திரு மகன் சந்நிதிக்கு இடப்புறமாகத் தாயார் சந்நிதி விளங்கு கின்றது. தீர்த்தம் மணிகர்ணிகாதீர்த்தம்.

பயின்றது அரங்கம் திருக்கோட்டி பல்நாள்
பயின்றதுவும் வேங்கடமே பல்நாள் பயின்றது
அணிதிகழும் சோலை அணிநீர் மலையே
மணிதிகழும் வண்தடக்கை மால்

— பூதத்தாழ்வார்

கண்டாவனம் என்பதோர் காடமரர்க்
கரையன்அது கண்டவன் நிற்கமுனே
மூண்டாரழல் உண்ணமு னிந்ததுவும்
அதுவன்றியும் முன்னுல கம்பொறைதீர்த்
தாண்டான்அவு ணன்அவன் மார்வகலம்
உகிரால்வகி ராகமுனிந்து அரியாய்
நீண்டான்குற ளாகிநி மிர்ந்தவனுக்
கிடம்மாமலை யாவது நீர்மலையே

— திருமங்கையாழ்வார்

# 84. திருநெல்வாயில்

நடுநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருநெல்வாயில். சோழநாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் நடுவில் உள்ள நாடு 'நடு நாடு' எனப்படும் தென்னார்க்காடு மாவட்டம் வடார்க்காடு மாவட்டத்தின்

சில பகுதிகள் நடுநாட்டில் அடங்கும். தென்னார்க்காடு மாவட்டம் சிதம்பரம் இரயில் நிலையத்திலிருந்து தென் கிழக்கில் 3 கி. மீ. தொலைவிலும் பெண்ணாகடம் இரயில் நிலையத்திலிருந்து 5 கி, மீ. தொலைவிலும் இத்தலம் விளங்குகின்றது. இத்தலம் ' நிவா ' நதி எனப்படும் வெள் ளாற்றின் வடகரையில் அமைந்துள்ளது.

ஆதித்துறை (காரியனூர்) திருவாலந்துறை, திரு மாந்துறை, ஆடுதுறை, திருவதிட்டதுறை (திட்டக்குடி) திருவரத்துறை, திருக்கைத்துறை என்னும் ஏழு துறைகளையும் ஏழு முனிவர்களும் பூசை செய்ய வேண்டி ' நீவா 'என்று அழைத்தர்ன என்றும் அது நிவா என மாறியது என்றும் கூறுவர், நிவா என்பது வெள்ளாறு எனப்பொருள்படும். ஊரின் வாயிலில் நெல்வயல்கள் பரந்து விளங்குவதால் நெல்வாயில் என்னும் பெயர்பெற்றது. பாடல்பெற்ற தலமாதலால் திருநெல் வாயில் ஆயிற்று.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் அரத் துறை நாதர். இறைவி ஆனந்த நாயகி. தீர்த்தம் வெள் ளாறு. திருஞானசம்பந்தர் பெண்ணாகடத்தை வழிபட் விட்டுத் திருஅரத்துறை நோக்கிச் சென்றார். மெல்ல நடட தார் திருவடிகள் நொந்தன. மாறன்பாடியில் தங்கினார். அரத்துறைநாதர் திருஞானசம்பந்தர் கனவில் தோன்றி முத்துப் பல்லக்கு முதலியன தருவதாக அருளினார். பின்னர் இத்தலத்தைத் திருஞானசம்பந்தர் அடைந்ததும் முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, முத்துச் சின்னங்கள் ஆகியவற்றை அந்தணர்கள் கொண்டு வந்து திருஞானசம்பந்தரிடம் கொடுத்தனர். திருஞானசம்பந்தர் அவற்றைப் பெற்று " எந்தையீச எனம்பெருமா " எனத் தொடங்கும் திருப் பதிகம் பாடித் திருவைந்தெழுத்தினை ஓதிப் பல்லக்கில் ஏறினார் என்பது வரலாறு.

கோவிலில் எட்டுத்திருமகள் உருவங்களும் மாடங்களில் உள்ள சிற்பங்களும் பாராட்டற் குரியன. மூவர் தேவாரம் பெற்ற சிறப்புடையது இத்திருத்தலம்.

எந்தை ஈசனெம் பெருமான்
ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால்
சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக்
கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில்
அரத்துறை அடிகள்தம் அருளே"

— திருஞான சம்பந்தர்

கல்வாய்ப அகிலுங் கதிர்மாமணியுங்
கலந்துந்திவரும் நிவவின்கரைமேல்
நெல்வாயிலரத் துறை நீடுறையுந்
நிலவெண்மதிசூ டியநின்மலனே
நல்வாயில் செய்தார் நடந்தாருடுத்தார்
நரைத்தாரிறந்தார் என்று நானிலத்தில்
சொல்லாய்க்கழிகின் றதறிந்தடியேன்
தொடர்ந்தேனுய்யப்போ வதொர்சூழல்சொல்லே

— திருநாவுக்கரசர்

# 85. திருநெல்வேலி

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற தலங்களில் ஒன்று திருநெல்வேலி சென்னைமாநகரிலிருந்து சுமார் 550

கி. மீ. தொலைவில் தாமிரவருணி ஆற்றங்கரையில் இத் திருத்தலம் அமைந்துள்ளது. வடக்கே மதுரையிலிருந்து தெற்கே நாகர்கோவில் – கன்னியாகுமரிக்குச் செல்லும் நெடுஞ்சாலை இந்நகர் வழியே செல்கின்றது.

## தல வரலாறு :

இத்திருத்தலம் நீர்வளம் நிலவளம் வாய்க்கப் பெற்றது. அரியநாயகபுரம் அணைக்கட்டிலிருந்து வரும் கோடகன்கால்வாய், பழவூர் அணையிலிருந்து வரும் பாளையங் கால்வாய், சுத்தமல்லி அணையிலிருந்து வரும் திருநெல் வேலிக் கால்வாய் ஆகிய இம்மூன்று கால்வாய்களும் இத் தலத்தைச் செழிப்பாக்குகின்றன. நெல் மிகுதியாகப் பயிரிடப்பெறுகின்றது. இந்நகரைச் சுற்றி நெல்வயல்கள் வேலி போன்று விளங்குவதால் நெல்வேலி என்று அழைத்தனர். பாடல்பெற்ற திருத்தலமாதலால் இத்தலம் திருநெல்வேலி என்று வழங்குகின்றது.

## இறைவன் வேலியிட்டான் :

வேதசருமா என்னும் அந்தணர் இறைவனுடைய வடிபாட்டிற்காக நெல் உலர்த்தி வைத்திருந்தார். பெருமழையின் காரணமாக வெள்ளம் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கியது. அப்பெருவெள்ளத்தில் நெல்லெல்லாம் அடித்துச் செல்லா வண்ணம் இறைவன் அவற்றை வேலி யிட்டுக் காத்ததனால் இத்தலம் நெல்வேலி என்று பெயர் பெற்றது என்பது புராண வரலாறு.

## வேணுவனம் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மூங்கில் அடியில் தோன்றியதால் வேணுவனம் என்றும் வழங்கப்

பெறும். தாருகாவனம். பிரமவிருத்தபுரம் என்ற பெயர்களும் இத்தலத்திற்கு உண்டு. கோவிலில் பள்ளமான இடத்திலுள்ள சுயம்பு வடிவம் இக்காலத்திலும் வேணுவனலிங்கம் என அழைக்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்திற்கு மதிப்பையும் மகிமையையும் அளிப்பது காந்திமதி - நெல்லையப்பர் திருக்கோவில். கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த நின்றசீர் நெடுமாறன் என்ற பாண்டிய மன்னன் காலத்திலிருந்து இத்தலம் மிகவும் புகழ்பெற்று விளங்கி வருகின்றது என்பர்.

கோவிலைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் மாடவீதிகள் விளங்குகின்றன, இவற்றை அடுத்து தேரோடும் திருவீதிகள் மிகவும் அகலமாக அமைந்துள்ளன. நகரின் மேற்கிலும் கிழக்கிலும் தேர்வீதிகளைச் சார்ந்து அணி அணியாகத் தெருக்கள் விளங்குகின்றன.

கோவிலின் முகப்பில் அம்மன் அம்பலம் விளங்குகின்றது. அடுத்து 96 தூண்களைக் கொண்ட ஊஞ்சல் மண்டபம்; இம்மண்டபத்திற்கு வடக்கே ஆயிரங்கால் மண்டபம்; இம்மண்டபத்தில்தான் அம்மையின் திருமணம் நடைபெறும். ஊஞ்சல் மண்டல்பத்தின் வடக்கே பொற்றாமரைக்குளம் விளங்குகின்றது. சிவபெருமான் இக்குளத்தில் நீர் வடிவாகத் தோன்றியதாகவும் பிரமன் அதன்மீது பொன் மலரோடு தோன்றியதாகவும் ஐதிகம். இக்குளம் சுற்றுக்கால் மண்டபத்துடன் விளங்குகின்றது.

கொடிமரத்தை அடுத்து மணி மண்டபம். அதற்கடுத்து நடு மண்டபம்; பின்னர் கருவறையில் காட்சிதரும் காந்திமதியம்மையைக் கண்டு இன்புறலாம். இறைவன் நெல்லையப்பருக்குத் தனிச்சந்நிதி விளங்குகின்றது மணி

மண்டபத்தை அடுத்துள்ள மகா மண்டபத்தைக் கடந்தால் வேணுவனநாதர் சந்நிதியைத் தரிசிக்கலாம். இச்சந்நிதிக்கு வடக்கே நெல்லை கோவிந்தர் பள்ளிக்கொண்டுள்ளார். தீர்த்தம் தாமிரவருணி, சிந்துபூந்துறை, பொற்றாமரை ஆகியன.

## தாமிரசபை :

நடராசன் திருக்கூத்தியற்றும் ஐந்துசபைகளில் ஒன்றான தாமிரசபை இத்தலத்தில் விளங்குகின்றது, நடராசர் திருவுரும் ஐந்தரை அடி உயரமுடையது இத்தலத்தில் கூத்தரசன் இயற்றிய தாண்டவம் முனிதாண்டவம் அல்லது காளிகாதாண்டவம் எனப் போற்றப் பெறுகின்றது. இத்தாண்டவம் படைப்புத் தொழிலுக்காக இறைவன் ஆடிய முதல் தாண்டவம் என்றும் ஏனைய தாண்டவங்கள் பின்னரே எழுந்தன என்றும் கூறுவர். நெல்லையப்பர் கோவிலில் பல மண்டங்களில் நடராசர் விளங்குகின்றார். 4 அடி உயரத்தில் நடராசர் செப்புருவம் ஒன்று திருவாவடுதுறை ஆதீனத்தாரால் நெல்லையப்பர் கோவிலில் பிரதிட்டை செய்யப் பெற்றுள்ளது. கோவிலில் சந்தன மரத்தாலான நடராசர் விளங்குகின்றார் இவருக்குச் சந்தனக்காப்பு அணிவிக்கப் பெறுகின்றது.

## இசை தூண்கள் :

சங்கிலி மண்டபம், வசந்த மண்டபம், சோமவார மண்டபம், ஊஞ்சல் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் ஆகிய மண்டபங்கள் கலையழகு மிக்கவை. இறைவன் திருக்கோவில் மணிமண்டபத்தில் ஒரு பெரிய கல்தூண் உள்ளது. அதனைச் சுற்றிலும் உருவிலும் உயரத்திலும் வேறுபட்ட 48 சிறு தூண்கள் உள்ளன. இவற்றை முழுக்கினால் இசையின்பத்தைப் பெற்றுமகிழலாம்.

## முருகன் சந்நிதி :

தாமிர சபைக்கு அருகில் முருகப் பெருமானுக்குத் தனிக் கோவில் விளங்குகின்றது. கோவிலில் முருகப்பெருமான் வள்ளி தெய்வயானை சமேதரராய் தோன்றும் திருக் காட்சி, கண்டு வழிபடுவோரை மெய் சிலிர்க்க வைக்கும் அற்புதக் காட்சி !

பெரிய கோவிலுக்குத் தெற்கில் தாமிரவருணி ஆறு ஓடுகின்றது. அதன் நடுவில்ஒரு திருகோவில் அமைந்துள்ளது அக்கோவிலுக்குக் குறுக்குத்துறை முருகன் கோவில் என்று பெயர். கோவிலில் முருகப் பெருமான் திருவுருவம் இத் துறையிலுள்ள கல்லாலேயே செய்யப்பெற்றது என்பர்.

பிரம்மா' விஷ்ணு, அகத்தியர் ஆகியோர் நெல்லைத் திருத்தலத்தை வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர்.

## திருவிழாக்கள் :

ஆனிமாதத்தில் தொடங்கும் பிரம்மோற்சவம் மிகவும் சிறப்புடையது. இவ்விழா 45 நாட்கள் நடைபெறுகின்றன. தைத்திங்களில்நெல்வேலிகட்டின திருவிழா சிறப்பாக நடைபெறுகின்றது, திருக்கல்யாண மகோற்சவம் ஐப்பசித் திங்களில் நடைபெற்று வருகின்றது.

## இலக்கியங்கள் :

'சொல்லைப் புடைத்தெடுக்கும் நெல்லை' என்று இத்திருத்தலத்தைப் பாராட்டுவார்கள். நெல்லையப்பப் பிள்ளை அவர்கள் 6891 செய்யுட்கள் அடங்கிய திருநெல் வேலித் தலபுராணத்தை இயற்றியுள்ளார். அழகிய சொக்க நாதப் புலவர் "காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்" பாடியுள்ளார். மேலும் மனோன்மணீயம், தேவாரம், திருத் தொண்டர்புராணம், திருவிளையாடல்புராணம் முதலிய இலக்கியங்கள் இத்தலத்தைச் சிறப்பித்துள்ளன.

## சான்றோர்கள் :

மதுரை மாநகரைப் போல நெல்லை மாநகரும் தமிழ் வளர்த்த பெருமையுடையது அக்காலம் முதல் இக் காலம் வரை சான்றோர்கள் பலர் தோன்றித் தமிழ் மொழியை வளர்த்து வந்துள்ளனர். ஈசானதேசிகர், மயி லேறும் பெருமாள் பிள்ளை, வடமலையப்பப் பிள்ளையன், நாராயணதீட்சதர் வெள்ளியம்பலவாணர், குமரகுருபரர், அழகிய சொக்கநாதர், நெல்லையப்பக் கவிராயர், சுந்தரர் பிள்ளை, பூரணலிங்கம்பிள்ளை, கா. சுப்பிரமணியபிள்ளை, ரா. பி. சேதுப் பிள்ளை முதலான சான்றோர்கள் இத் தலத்தில் தோன்றித் தமிழ்ப்பணி ஆற்றியுள்ளனர்.

இந்நகரில் தோன்றிய திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழ்மொழியில் பல் துறை நூல்களையும் வெளியிட்டுத் தமிழ் வளர்த்து வருகின்றது.

மருந்தவை மந்திரம் மறுமைநன்
    னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
    சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
    சொரிதரத் துன்றுபைம்பூஞ்
செருத்திசெம் பொன்மலர் திருநெல்வே
    லியுறை செல்வர் தாமே''

— திருஞான சம்பந்தர்

''கட்டின கட்டையிலே - கண்ணே
திருநெல்வேலி நாதர் துத்திப் பூ பூத்தாரோ''
''தெக்கத்தி வெங்கலமே
திருநெல்வேலிச் சந்தனமே''

— நாட்டுப் புறப்பாடல்

# 86. திருப்பட்டீச்சுரம்

சோழநாட்டிலுள்ள பாடல் பெற்ற சிவத்தலம் திருப்பட்டீச்சுரம் தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணம் இரயில் நிலையத்திலிருந்து தென்மேற்கே 5 கி. மீ. தொலைவில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. இத்தலத்திற்குக் கிழக்கே ஒரு கி. மீ. தொலைவில் முழையூர் இருக்கின்றது திருப்பட்டீச்சுரத்துக்கு அண்மையில் திருமலைராயன் என்னும் சிற்றாறு ஓடுகின்றது.

## தல வரலாறு :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருநாமம் பட்டீச்சுரநாதர். இத்தலத்து இறைவனைககாம தேனுவின் பெண்கள் நால்வரில் பட்டி என்பவள் வழிபட்டுப் பேறு பெற்றாள். இதனால் இத்திருத்தலம் பட்டீச்சுரம் எனப் பெயர் பெற்றது என்பர். பாடல் பெற்ற தலமாதலால் திருபட்டீச்சுரம் என வழக்கப் பெறுகின்றுது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவி பல்வளை நாயகி. தீர்த்தம் ஞானதீர்த்தம் விருட்சம் வன்னி கோடையின் வெம்மையைத்தணிக்க இறைவன் திருஞானசம்பந்தருக்கு முத்துப்பந்தர் நல்கிய திருத்தலம் இது ! மேலும் இராமனுக்குப் பிரமகத்தி நீக்கிய திருத்தலம் ! இந்நிகழ்ச்சி மார்கழித் திங்கள் அமாவாசையன்று நடைபெறுகின்றது

கோவில்நந்தி திருஞானசம்பந்தருக்காக விலகியிருக்கின்ற மகிமையுடையது இத்திருத்தலம். கோவிந்ததீட்சிதர் என்னும் அமைச்சர் அளவிறந்த திருப்பணிகள் செய்துள்ளார், அவர் திருவுருவமும் அவர்தம் துணைவியார் திருவுருவமும் அம்மன் திருமுன்பு இருக்கின்றன.

காலைமட வார்கள்புன லாடுவது
 கௌவைகடி யார்மறுகெலாம்
மாலைமண நாறுபழை யாறைமழ
 பாடியழ காயமலிசீர்ப்
பாலையன நீறுபுனை மார்பனுறை
 பட்டிசர மேபரவுவார்
மேலையொரு மால்கடல்கள் போல்பெருகி
 விண்ணுலக மாளுமவரே

— திருஞானசம்பந்தர்

# 87. திருப்பதிசாரம்

பாடல்பெற்ற வைணவத் திருப்பதியாக விளங்குகின்றது திருப்பதிசாரம். இத்திருப்பதி கன்னியாகுமரி மாவட்டத்தில் 5 கி. மீ. தொலைவில் பழையாற்றின் கரையில் அமைந்துள்ளது.

இத்திருப்பதி எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பதி அதனால் ஆதியில் இப்பதி திருவெண்பரிசாரம் என வழங்கியது, நாளடைவில் திருப்பதிசாரம் எனப் பெயர் பெற்றது.

## பதியின் மகிமைகள் :

திருப்பதிசாரத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருக்குறளப்பன், திருவாழ்மார்பன், எம்பெருமான் கிழக்கு நோக்கி வீற்றிருந்த கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் கமலவல்லி நாச்சியார். தீர்த்தம் லஷ்மி தீர்த்தம்.

நம்மாழ்வாருடைய தாயாராகிய உடைய நங்கையார் இத்திருப்பதியில் அவதரித்தார். சித்திரைத் திருவிழா நாள் இத்திருப்பதியில் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. நம்மாழ்வார் இப்பதியைப் போற்றிப் பாடியுள்ளார். அவர் திருநாமத்தால் விவேகாபிவிருத்தி புத்தக நிலையம் என்னும் நூலகம் இயங்கி வருகின்றது.

# 88. திருப்பத்தூர்

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருப்பத்தூர். தேவர் திருமகன் மாவட்டத்தில் மதுரைக்கு வடகிழக்கே 47 கி. மீ. தொலைவிலும் காரைக்குடி இரயில் நிலையத்திலிருந்து 15 கி. மீ. தொலைவிலும் அறந்தாங்கி இரயில் நிலையத்திலிருந்து 35 கி. மீ. தொலைவிலும் இத்திருத்தலம் இருக்கின்றது.

தேவாரத்தில் இத்தலம் திருப்புத்தூர் என்றே குறிக்கப்பட்டுள்ளது. புதியதாகத் தோன்றிய தல மாதலாலும் பாடல்பெற்றதாலும் திருப்புத்தூர் எனப் பெயர் பெற்று நாளடைவில் திருப்பத்தூர் என வழங்கி வருகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்திலுள்ள கோவில் ' திருத்தளி ' எனவும் ' ஸ்ரீதளி ' எனவும் வழங்கிவருகின்றது இறைவன் ஸ்ரீதளி

நாதர். இறைவி சிவகாமியம்மை தீர்த்தம் திருத்தளித் தீர்த்தம். விருட்சம் கொன்றை.

அம்பலவாணர் புரிந்தருளும் தாண்டவம் ஏழனுள் இத்தலத்தில் சிற்சபையில் (இரத்தினசபை) கௌரி தாண் டவத்தை அம்மைக்குக் காட்டியருளியதாக வரலாறு.

திருமகள் இத்தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றார். ஓங்காரம் கொன்றை மரமாக இத்தலத்தில் நின்று வழி பட்டது. அகத்தியர் இத்தலத்தில் வழிபட்டார். அவர் வழிபட்ட சிவக்கொழுந்து மரத்தின் கீழ் இருக்கின்றது.

வயிரவர்க்குத் தனிக்கோவில் இருக்கின்றது. வயிரவர் சந்நிதி சிறப்புடையது. திருஞானசம்பந்தரும் திருநாவுக் -கரசரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

வெண்ணி றத்த விரையோ டலருந்தித்
தெண்ணி றத்த புனல்பாய் திருப்புத்தூர்
ஒண்ணி றத்த வொளியா ரவர்போலும்
வெண்ணி றத்த விடைசேர் கொடியாரே''

— திருஞானசம்பந்தர்

கருமருவு வல்வினைநோ யகற்றி னான்காண்
காமருபூங் கச்சியே கம்பத் தான்காண்
பெருமருவு பேருலகிற் பிணிக டீர்க்கும்
பெரும்பற்றத் தண்புலியூர் மன்றா டிகாண்
திருமருவு கொண்டைத்தடக்கை யள்ளைக் கோன்றன்
சங்காத்தி யாரூரிற் றனியா னைகாண்
திருமருவு பொழில்புடைசூழ் திருப்புத் தூரில்
திருத்தளியான் காணவரென் சிந்தை யானே

— திருநாவுக்கரசர்

# 89. திருப்பந்துறை

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருப்பந்துறை. தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணம் இரயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கில் 8 கி. மீ. தொலைவில் அரிசிலாற்றின் தென்கரையில் இத்திருத்தலம் அமைந்திருக்கின்றது. கும்பகோணத்திலிருந்து பூந்தோட்டம் செல்லும் பேருந்து சாலையில் 13 கி. மீ. தொலைவில் இத்திருத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு :

'துறை' என்பது கோவில் என்றும் பொருள்படும். கோவிலின் சிறப்புக்காரணமாகப் பெருந்துறை என்றும் கோவில்கள் வழங்கப் பெறுகின்றன. இவ்வகையில் பெயர் பெற்றதே பெருந்துறை என்பது. இத்தலம் மாணிக்கவாசகரை ஆட்கொண்ட திருப்பெருந்துறையிலிருந்து வேறுபடுத்துவதக்காகத் திருப்பேணு பெருந்துறை எனப்பெயர் வ்ழங்கப் பெற்றது. பேணுதல் என்பது இங்கே விரும்புதல் எனப் பொருள் பெறும். திருப்பேணு பெருந்துறை என்பதே நாளடைவில் திருப்பந்துறை என வழங்குகின்றது.

கல்வெட்டில் இத்தலம் ''திருநறையூர் நாட்டுக் கிராமமான பேணுபெருந்துறை'' எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் கோவில் கிழக்குநோக்கி அமைந்துள்ளது. இறைவன் ஸ்ரீசிவானந்தேசுவரர். பிரணவ ஈசுவரர் என்றும் வழங்கப் பெறுவர். இறைவி மலையரசி. தீர்த்தம் மங்களம். விருட்சம் வன்னி.

சுவாமிமலையில் தந்தைக்குப் பிரணவமந்திரத்தைப் போதித்த பின்னர் முருகப் பெருமான் பேச்சிழந்தாகவும் இத்தலத்திற்கு வந்து மீண்டும் பேச்சாற்றல் பெற்றதாகவும் கூறுவர். இத்தலத்தில் குழந்தைகள் ஊமையர்கப் பிறப்பதில்லை. ஊமைக்குழந்தைகள் இத்தலத்தில் பேச்சாற்றல் பெறுகின்றனர்.

அம்மை, முருகன், நான்முகன், முதலியோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்,

நிலனொடுவானும் நீரொடுதீயும்
வாயுவும் ஆகியோர்ஐந்து
புலனொடுவென்று பொய்ம்மைகடேர்ந்த
புண்ணியர் வெண்பொடிப்பூசி
நலனொடுதீங்குந் தானலதின்றி
நன்கெழு சிந்தையராகி
மலனொடு மாசும் இல்லவர்
வாழும்மல்கு பெருந்துறையாரே

— திருஞானசம்பந்தர்

# 90. திருப்பரங்குன்றம்

பாண்டி நாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்றாகவும்அறுபடைவீடுகளில் முதலாவதுபடைவீடாகவும் திருப்பரங்குன்றம் திகழ்கின்றது மதுரை மாவட்டத்தில் மதுரைக்குத் தென்மேற்கில் 5 கி.மீ. தொலைவில் இத்திருத் -தலம் அமைந்துள்ளது மதுரை இரயில் நிலையத்திலிருந்து தெற்கே திருவனந்தபுரம் திருநெல்வேலி செல்லும் இருப்புப் பாதையில்இத்தலம்இரண்டாவது இரயில்நிலையம்இத்தலம் கடல்மட்டத்திற்குமேல் 1048 அடி உயரத்தில் உள்ளது.

## தல வரலாறு :

இத்தலத்திலுள்ள குன்றின் உயரம் ஏறத்தாழ 300 அடி சுற்றளவு 2 கி.மீ. இக்குன்று இத்தலத்தின் நடுவே இலிங்கவடிவமாகக் காட்சி அளிக்கின்றது பரன் என்னும் சொல் சிவ பெருமானைக் குறிக்கும் இலிங்க வடிவில் அமைந்துள்ள குன்று பரங்குன்று ஆயிற்று பாடல் பெற்ற தலமாதலால் திருப்பரங்குன்றம் என வழங்கப்பெறுகின்றது இக்குன்றத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பரங்கிரிநாதர் பரம்பொருள் எழுந்தருளிய குன்று பரங்குன்று ஆயிற்று என்றும் கூறுவர்.

## முதலாவது படை வீடு :

முருகப் பெருமான் சிறப்பாக எழுந்தருளியுள்ள படை வீடுகள் ஆறு அவை திருப்பரங்குன்றம்' திருச்சீரலைவாய்

திருவாவினன்குடி திருவேரகம் குன்று தோறாடல் பழமுதிர்ச்சோலை ஆகும்

முருகப்பெருமான் இந்திரன் புதல்வியாகிய தேவயானையைத் திருமணம் செய்து கொண்டு புதுமணக் கோலத்தில் இத்தலத்தில் காட்சி அளிக்கின்றார். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமான் சுப்பிரமணியசுவாமி அமர்ந்த திருக்கோலத்தில் அருள்பாலிக்கின்றார். அவருக்கு இடப்பக்கத்தே தெய்வயானையும் வலப்பக்கத்தே நாரத முனிவரும் காட்சி தருகின்றனர். முருகப்பெருமானுடைய திருவடியின் கீழ் அப்பெருமானுடைய வாகனங்களாகிய யானை ஆடு ஆகியவற்றின் உருவங்களும் காவல் தேவதைகளின் உருவங்களும் பாறையில் வடிக்கப் பெற்றுள்ளன. இந்த யானை இந்திரனுடைய ஐராவதம் என்றும் தேவயானையைப் பிரிய மனமில்லமல் முருகனுக்குத் தொண்டுபுரிய வந்தது என்றும் கூறுவர்.

## ஐந்துசந்நிதி :

அடுத்து ஏறக்குறைய ஓர் ஆள் உயரத்திற்குமேல் கற்பகவிநாயகர் சந்நிதி, பின்னர் பரங்கிநாதர் சந்நிதி. அவருக்கு எதிரில் பவளக் கனிவாய்ப் பெருமாள் மகா லஷ்மியுடனும் மதங்க முனிவருடனும் காட்சி அளிக்கின்றார். இந்த ஐந்து சந்நிதிகளையும் ஒரே இடத்திலிருந்தே கண்டு களிக்கலாம்' இந்தச்சிறப்பு வேறு எந்தக் கோவிலிலும் இல்லை. ஐந்து சந்நிதிகளுக்கும் கருவறையில் ஐந்து குகைக் கோவில்கள் தனித்தனியாக விளங்குகின்றன.

குன்றின் அடிவாரத்தில் சரவணப் பொய்கை விளங்குகின்றது. இப்பொய்கை முருகப்பெருமானுடைய திருக்கை வேலினால் உண்டாக்கப் பெற்றதாக நம்புவர்.

## தென்பரங்குன்றம் :

திருப்பரங்குன்றத்தின் தென்பகுதிதென்பரங்குன்றம் உமையாண்டவர்கோவில்எனவழங்கப் பெறும் குடைவரைக்

கோவில் இங்குள்ளது. இக்கோவிலின் உட்புறச் சுவரில் நடராசர் தாண்டவம் வள்ளி தேவயானையுடன் கூடிய முருகப்பெருமான் ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன. தென் பரங்குன்றத்தின் மேற்குப் பகுதியில் மலைமீது சிறிது தொலைவில் பஞ்சபாண்டவர் படுக்கைஎனவழங்கப்பெறும் குகை உள்ளது. அக்குகையில் கல்லில் செதுக்கப்பெற்ற ஐந்து படுக்கைகளும் சுனையும் உள்ளன.

மலை உச்சியில் காசி விசுவநாதர் கோவிலும் அதனருகில் வற்றாத காசிச் சுனைத் தீர்த்தமும் உள்ளன. இச்சுனை முருகனுடைய வேலினால் உண்டாக்கப்பட்டது என்றும் கங்கைக்குஇணையானது என்றும் கூறுவர்.

குன்றின் அடிவாரத்தில் வடபகுதியிம் சிறிதுதொலைவில் சத்திய கூபம் என்ற தீர்த்தம் உள்ளது. இத்தீர்த்தத்தில் பெருமானது தெப்பத் திருவிழா நடைபெற்று வருகின்றது.

## முருகன் வழிபட்ட தலம் :

திருப்பரங்குன்றம் முருகப்பெருமான் வழிபட்ட திருத்தலமாகவும் விளங்குகின்றது, சிவபெருமானும் முருகப் பெருமானும் ஒருவரே என்றாலும் பிரணவமந்திரவகையில் உலக நீதிக்குப் புறம்பாக நடந்துகொண்டமையால் நீதியை நிலைநிறுத்த வேண்டிக் குருமூர்த்தி திருப்பரங் குன்றத்தில் தவம் இயற்றினார், சிவனும் பார்வதியும் அவருக்குக் காட்சி அருளினர். அவர்கள் பரங்கிரிநாதர், ஆவுடை நாயகி எனப்பெயர் பெற்றனர், குமரப் பெருமானால் வழிபடப்பெற்ற பரங்கிரிநாதர் ஆவுடைநாயகி கோவில் இந்நாளில் மீனாட்சி சுந்தரேசுவரர் என வழங்கப்பெறுகின்றது. இக்கோவிலுக்குச் சென்று வழிபட்ட பின்னரே முருகப்பெருமானை வழிபட வேண்டும் என்பது ஐதிகம்.

## தல இலக்கியங்கள் :

திருமுருகாற்றுப்படை, பரிபாடல், மதுரைக்காஞ்சி கலித்தொகை, அகநானூறு, தேவாரம் முதலிய இலக்கி

யங்கள் இத்தலத்தைச் சிறப்பிக்கின்றன.

"கூடற் குடவயின் பரங்குன்று" - அகநானூறு.

மாடமலி மறுகிற் கூடற் குடவயின்
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி ஏற்படக்
கண்போல் மலர்ந்த காமர் சினைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந்து உறைதலும் உரியன்"

— திருமுருகாற்றுப்படை

திருப்பரங்குன்றத்தில் ஒரு பக்கம் யாழிசை ! மற்றொரு பக்கம் வண்டின் இசை ! ஒரு பக்கம் புல்லாங்குழல் இசை ! இன்னொரு பக்கம் தும்பிகளின் இராகம் ! ஒரு பக்கம் மத்தளத்தின் ஓசை ! மற்றொரு பக்கம் மலையிலிருந்து விழுகின்றஅருவிகளின் ஓசை ! இன்னொரு பக்கம் பாலைப்பண் ! எனப் பரிபாடல் திருப்பரங்குன்றத்தில் எழும் பல்வேறு வகையான ஓசைகளைப் பற்றிப் பரிபாடல் கூறுகின்றது.

ஒருதிறம் பாணர் யாழின் தீங்குரல்எழ
ஒருதிறம் யாணர் வண்டின் இமிரிசைஎழ
ஒருதிறம் கண்ணார் குழலின் கரைபுஎழ
ஒருதிறம் மண்ணார் முழவின் இசைஎழ
ஒருதிறம் அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப
ஒருதிறம் பாடல்நல் விறலியர் ஒல்குபு நுடங்க
ஒருதிறம் பாடினி முரலும் பாலையங் குரலின்
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற
ஒருதிறம் ஆடுசீர் மஞ்ஞை அரிகுரல் தோன்ற
மாறுமாறு உற்றனபோல் மாறெதிர் கோடல்
மாறட்டான் குன்றம் உடைத்து.

— பரிபாடல்

நீடலர்சோதி வெண்பிறையோடு நிரைகொன்றை

கூடலனந்திச் சுடரெரியேந்திச் சுடுகானில்
ஆடலனஞ்செர லணியிழையாளை யொருபாகம்
பாடலன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே"

— திருஞானசம்பந்தர்

# 91. திருப்பராய்த்துறை

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்று திருப்பராய்த்துறை, திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் காவிரியாற்றின் தென்கரையில் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே 13 கி. மீ. தொலைவில் இந்திருத்தலம் இருக்கின்றது. திருச்சிராப்பள்ளி ஈரோடு இரயில் பாதையில் இத்தலம் அமைந்துள்ளது. அகண்டகாவிரி என்று இத்தலம் கூறப்பெறுகின்றது. பராய் மரங்கள் நிறைந்திருந்தமையாலும் பாடல்பெற்ற தலமாதலாலும் திருப்பராய்த்துரை எனப் பெயர் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பராய்த்துறைநாதன். இறைவி பசும்பொன் மயிலாம்பிகை. கோவில் மரம் பராய்மரம் இத்தலத்தில் ஆண்டுதோறும் ஐப்பசி முதல் நாளன்று துலாமுழுக்குவிழா சிறப்பாக நடைபெறுகின்றது. அன்று இறைவன் அம்பிகையுடன் காவிரிக்கு எழுந்தருளித் திருமஞ்சனமாடுவது கண்கொள்ளாக் காட்சி! வைகாசியில் பெருவிழா நடைபெறுகின்றது. ஆடிப்பூரம், நவராத்திரி முதலிய விழாக்களும் நடைபெற்று வருகின்றன.

இத்தலத்திலுள்ள ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவனமும் ஸ்ரீ இராமகிருஷ்ண குடிலும் சமயத்தொண்டு கல்வித் தொண்டு முதலியவற்றைச் செவ்வனே ஆற்றி வருகின்றன.

வானவர்கோன் குபேரன் ஏழு முனிவர் முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றுள்ளனர் திருஞானசம் பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

கந்தமாமலர்க் கொன்றை கமழ்சடை
வந்த பூம்புனல் வைத்தவர்
பைந்தண்மாதவி சூழ்ந்த பராய்த்துறை
அந்தமில்ல வடிகளே

— திருஞானசம்பந்தர்

பட்ட நெற்றியர் பான்மதிக் கீற்றினர்
நட்ட மாடுவர் நள்ளிரு ளேமமும்
சிட்ட னார்தென் பராய்த்துறைச் செல்வனார்
இட்ட மாயிருப் பாரை யறிவரே

— திருநாவுக்கரசர்

# 92. திருப்பனந்தாள்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம். தஞ்சாவூர் மாவட்டத்தில் மாயவரம் - கும்பகோணம் இரயில் பாதையில் ஆடுதுறை இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 7 கி. மீ தொலைவில் இருக்கின்றது. பண்டைக்காலத்தில் இப்பகுதியில் பனைமரங்கள் மிகுந்திருந்தமையாலும்

கோவில் மரம் பனையாக விளங்குவதாலும் பாடல்பெற்ற தலமாதலாலும் திருப்பனந்தாள் என இத்தலம் வழங்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சடையப்பர் இறைவி பெரியநாயகி, திருச்சுற்றிலுள்ள இரண்டு ஆண்பனைகள் கோவில் மரமாகப் போற்றப் பெறுகின்றன. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் தாடகைக்கு வளைந்தும் குங்கிலியக் கலயர்க்கு நிமிர்ந்தும் அருட்காட்சி வழங்கியதாக வரலாறு திருக்கோவிலின் திருப்பெயர் தாடகையீச்சரம் தாடகை என்னும் மெய்யன்பு மிக்க அம்மையார் ஒருவர் இறைவனை வழிபட விழைந்தார். அந்த அம்மையாரின் பேரன்பின் பொருட்டு இறைவன் சாய்ந்து அருள் வழங்கினார். இந்த அம்மையார் வேறு. இராமாயணத்தில் வரும் தாடகை வேறு.

இறைவன் சாய்ந்திருப்பதைக் கண்ட மன்னன் நேர் நிறுத்தத் தானையும் யானையும் கொண்டு முயன்று பார்த்தான்' முடியவில்லை. இதனையறிந்த குங்குலியக் கலய நாயனார் சிவலிங்கத்தில் கயிற்றைப் பிணைத்து அக்கயிற்றின் மறுமுனையைத் தம் கழுத்தில் பூட்டி இழுக்கலுற்றார் மெய்யன்பர்கட்கு எளியவாரகிய இறைவன் நேர் நின்று அருளினார்.

திருப்பனந்தாள் காசிமடம் சமயத்தொண்டும் கல்வித்தொண்டும் இலக்கியத்தொண்டும் ஒருங்கே ஆற்றிவரும் சிறந்த அறநிலையமாகும். திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

விரித்துவ னான் மறையை மிக்க
  விண்ணவர் வந்திறைஞ்ச
எரித்தவன் முப்புரங் கள் ளிய

வேழமுலை கில்லுயிரும்
பிரித்தவன் செஞ்சடைமே னிறை
பேரொலி வெள்ளந்தன்னைத்
தரித்தவ னூர்பனந்தாட் டிருத்
தாடகை யீச்சரமே"

— திருஞானசம்பந்தர்

# 93. திருப்பனையூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருப்பனையூர் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவாரூருக்கு வடக்கே 8 கி. மீ. தொலைவிலுள்ள ஆண்டிப் பந்தல் என்னும் ஊருக்குக் கிழக்கே ஒரு கி. மீ. தொலைவில் இத் தலம் அமைந்துள்ளது.

பண்டைக்காலத்தில் இப்பகுதியில் பனைமரங்கள் நிறைந்திருந்தமையாலும் பனைமரம் கோவில் மரமாக விளங்குவதாலும் பாடல்பெற்ற தலமாதலாலும் திருப்பனையூர் என இத்தலம் பெயர் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சவுந்தர நாதர் இறைவி பெரியநாயகி. தீர்த்தம் புட்கரணி. இறைவன் திருக்கூத்தோடு சுந்தரர்க்கு இத்தலத்தில் காட்சி அருளினார். பராசர முனிவர் இந்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றார்,

சோழமன்னன் கரிகால்பெருவளத்தான் இத்தலத்தில் வளர்ந்தான் என்றும் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள பின்

ளையார் அவனுக்குத் துணையிருந்தார் என்றும் அதனால் அப்பிள்ளையார் துணையிருந்தபிள்ளையார் எனப் போற்றப் பெறுகின்றார் என்றும் கூறுவர்.

திருஞானசம்பந்தரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

அலரும் மெறிசெஞ் சடைதன்மேல்
மலரும் பிறையொன் றுடையானூர்
சிலரென் றுமிருந் தடிபேணப்
பலரும் பரவும் பனையூரே !

— திருஞானசம்பந்தர்

கொங்கையார்பல ருங்குடைந்தாட
நீர்க்குவளை மலர்தரப்
பங்கயம் மலரும்
பழனத் திருப்பனையூர்
மங்கை பாகமு மாலொர் பாகமுந்
தாமுடையவர் மான்மழுவினொ
டங்கைத் தீயுகப்பா
ரவரே யழகியரே !

— சுந்தர மூர்த்தி நாயனார்

# 94. திருப்பாசூர்

தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருப்பாசூர். இத்தலம் செங்கல்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர் இரயில் நிலையத்திற்கு வடமேற்கில் 6. கி. மீ. தொலைவில் இருக்கின்றது. கடம்பத்தூர் இரயில் நிலையத்திலிருந்து 5 கி. மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

பாசு என்பது மூங்கில் என்று பொருள்பெறும். இப் பகுதியிலுள்ள மூங்கிலின் அடியில் இறைவன் தோன்றிய தால் இப்பகுதியில் அமைந்த தலம் பாசூர் எனப் பெயர் பெற்றது. பாடல்பெற்ற தலமாதலால் திருப்பாசூர் ஆயிற்று.

கல்வெட்டில் இத்தலம் தொண்டை மண்டலத்து ஈக்காடு கோட்டத்துக் காக்கலூார் நாட்டுத் திருப்பாசூர் எனக்குறிக்கப் பெற்றுள்ளது. இராசராசன் குலோத்துங்கன், வீரகம்பணன் ஆகியோருடைய கல்வெட்டுகள் கோவிலில் உள்ளன.

## தல மகிமைகள் :

சோழமன்னன் கரிகால் பெருவளத்தானுக்குப் பகை மன்னானான குறும்பன் என்பவன் சமணர்கள் துணையுடன் ஒரு பெரும்பாம்பைக் குடத்திலடைத்துச் சோழ மன்னனி டம் அனுப்பினான். சிவபெருமான் சோழ மன்னனுக்குத் துணையாக அம்பாம்பை எடுத்து ஆட்டிய திருத்தலம் இது !

இத்தலத்தில் திங்கள் வழிபட்டுப் பேறுபெற்றது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

பேரும்பொழுதும் பெயரும்
பொழுதும் பெம்மானென்
றாருத் தனையு மடியா
ரேத்த வருள்செய்வார்
ஊரு மரவ முடையார்
வாழு மூர்போலும்
பாரின் மிசையார் பாட
லோவாப் பாசூரே

— திருஞானசம்பந்தர்

விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி
வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற
எண்ணாகி யெழுத்தாகி யியல்பு மாகி
ஏழுலகுந் தொழுதேத்திக் காண நின்ற
கண்ணாகி மணியாகிக் காட்சி யாகிக்
காதலித்தங் கடியார்கள் பரவ நின்ற
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே ''

— திருநாவுக்கரசர்

# 95 திருப்பாண்டிக் கொடுமுடி

கொங்குநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருப்பாண்டிக் கொடுமுடி. பெரியார் மாவட்டத்தில் ஈரோட்டிற்குத் தென்கிழக்கே சுமார் 26 கி. மீ. தொலைவில் காவிரியாற்றங்கரையில் இத்தலம் அமைந்துள்ளது இத்தலத்திற்கு இரயில் நிலையம் உண்டு.

## தல வரலாறு

இத்தலம் பண்டைநாளில் கறையூர் என வழங்கப் பெற்றது. கறையூரில் விளங்கிய திருக்கோவில் பாண்டிக் கொடுமுடி :

கற்றவர் தொழு தேத்தும் சீர்க்கறை
யூரில் பாண்டிக் கொடுமுடி
நற்றவா உனைநான் மறக்கினும்
சொல்லும்நா நமச்சி வாயவே ''

என்பது சுந்தரர் தேவாரம் இக்காலத்தில் கறையூர் என்ற பெயர் மறைந்து கொடுமுடி என்ற கோவில் பெயரே தலத்திற்குப் பெயராக வழங்குகின்றது. இது பாண்டிநாட்டைச் சேர்ந்த தலமாதலால் பாண்டிக் கொடுமுடி என்றும் பாடல்பெற்ற தலமாதலால் திருப்பாண்டிக் கொடுமுடி என்றும் வழங்குகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் கொடுமுடி நாதர். இறைவி பண்மொழி அம்மை. சீரங்கநாதர் சந்நிதி தனியே விளங்குகின்றது. வன்னி மரத்தடியில் நான்முகன் சந்நிதி உள்ளது. இதனைத் திருமூர்த்தித்தலம் என்றும் மும்மூர்த்தித்தலம் என்றும் கூறுவர்.

தீர்த்தம் காவிரி. இத்தலத்திலுள்ள காவிரியிலிருந்து தீர்த்தம் காவடிகட்டிஎடுத்துக்கொண்டு சென்று பழனியாண்டவருக்குத் திருமுழுக்காட்டுதல் உண்டு.

இத்தலத்தில்தான் சுந்தரமூர்த்தி நாயனார் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடியருளினார். திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

புத்தரும் புந்தியி லாத் சமணரும்
பொய்ம்மொழி யல்லான்
மெய்ந்தவம் பேசிட மாட்டார்வேடம்
பலபல வற்றால்
சித்தருந் தேவருங் கூடிச்செழுமலர்
நல்லன கொண்டு
பத்தர்க டாம்பணிந்தேத்தும் பாண்டிக்
கொடுமுடி யாரே

— திருஞானசம்பந்தர்

சிட்ட னைச்சிவ னைச்செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்

பட்ட னைத்திருப் பாண்டிக் கொடுமுடி
நட்ட னைத்தொழ நம்வினைநாசமே''

— திருநாவுக்கரசர்

செம்பொனேர் சடை யாய்திரிபுரந்
தீயெழச்சிலை கோலினாய்
வம்புலாங்குழ லாளைப் பாகம்
அமர்ந்துகாவிரிக் கோட்டிடைக்
கொம்பின் மேற்குயில் கூவமாமயில்
ஆடுபாண்டிக் கொடுமுடி
நம்பனே உனை நான்ம றக்கினுஞ்
சொல்லுநா நமச்சி வாயவே''

— சுந்தரமூர்த்தி நாயனார்

# 96. திருப்புகலூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்று திருப்புகலூர் தஞ்சாவூர் மாவட்டத்தில் நன்னிலம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 6 கி. மீ. தொலைவில் முடிகொண்டான் ஆற்றின் வடகரைக்கும் தென்மலை ராயன் ஆற்றின் தென்கரைக்கும் இடையில் இத்தலம் அமைந்திருக்கின்றது.

## தல வரலாறு :

சூரபத்மனின் தங்கை அஜமுகி. அவளுடைய புத்திரர்கள் வில்வலன், வாதாபி, இவர்கள் அந்தணச் சிறுவர்கள் போல் வேடந்தாங்கித் தண்டகாரண்யத்தில் ஓர் ஆசி

ரமம் அமைத்து வாழ்ந்து வந்தனர். அவ்வழியே செல்லும் முனிவர்களுக்கு உணவளித்து வரவேற்பதுபோல் நடித்து அவர்களைக் கொன்று தின்று வந்தனர்.

அவ்வரக்கர்களுக்கு அஞ்சிய தேவர்கள் அகழி சூழ்ந்த இத்தலத்தில் அடைக்கலம் அடைந்தனர், அதனால் இத்தலம் திருப்புகலூர் எனப்பெயர் பெற்றதுஎன்பதுபுராணவரலாறு.

அக்கினி தேவன் இத்தலத்தில் இறைவனை சிவலிங்க உருவில் அமைத்து வழிபட்டதாக வரலாறு இத்தலத்துக் கோவில் மதிலின் உட்பகுதியில் இலிங்கப் பிரானை அக்கினி வழிபடும் சிற்பம் உள்ளது கோவிலில் அக்கினியின் உற்சவத் திருவுருவம் விளங்குகின்றது அக்கினி வழிபட்ட காரணத்தால் இத்தலம் அக்கினீசம் என்ற பெயரையும் இங்கு வாகிசமூர்த்திகள் சரணம் அடைந்த காரணத்தால் சரண்யபுரம் என்ற பெயரையும் இங்கு புன்னைமரம் புனிதமரமாக உள்ளகாரணத்தால் புன்னைவனம் என்ற பெயரையும் இத்தலம் பெற்றுள்ளது.

வாணாசுரன் என்ற அரக்கன் தன் தாய் வழிபாட்டிற்காக 107 இலிங்கங்களைப்பழைய சிவாலயங்களிலிருந்து எடுத்து வந்துதந்தான் 108-வது சிவலிங்கமாக இத்தலத்திலுள்ள அக்கினீசுவரைப் பெயர்த்தெடுக்க வந்தான் அவனால் அந்த இலிங்கத்தைப் பெயர்த்தெடுக்க முடியவில்லை. எனவே அவன்தன் தாயை அழைத்து வந்து இத்தலத்திலேயேவழிபடச்செய்தான். அவளதுவழிபாட்டை ஏற்க விரும்பி இலிங்கம் சற்று சாய்வாக அமைந்தது அதனால் இத்தலத்து இறைவன் கோணப்பிரான் எனப் போற்றப் பெறுகின்றார்.

## தல மகிமைகள் :

கருவறையில் கிழக்கு நோக்கிக் காட்சியருளும் கோணப்பிரானது சிவலிங்கத் திருமேனி வாணாசுரனின்

தாய் வழிபாட்டால் வடபுறமாகச் சிறிது வளைந்து நின்ற கோணத்தில் இன்றும்கண்டுவழிபடலாம் இந்த இலிங்கத்தை அக்கினி பூசித்தகாரணத்தால்அக்கினீசுரர் என்றும்போற்றப் பெறுகின்றார்.

இக்கோவிலில் அக்கினியின் திருவுருவம் இரண்டு முகங்கள், ஏழுசுடர்கள், மூன்று பாதங்கள், ஏழுகரங்கள் ஆகியவற்றுடன் நின்ற திருக்கோலத்தில் விளங்கு கின்றது கருவறையைச் சுற்றியுள்ள கோஷ்டங்களில் அகத்தியர், நடராசர், கணபதி, தட்சிணாமூர்த்தி, இலிங்கோத்பவர்' அட்டபுயதுர்க்கை' சதுரபுயதுர்க்கை கௌரிலீலாவிநோதர் ஆகியோர் காட்சி தருகின்றனர்.

இறைவி கருந்தார்க் குழலம்மை. தீர்த்தம் அக்கினித்தீர்த்தம். தலவிருட்சம் புன்னை' திருக்கோவிலைச் சுற்றிமூன்று புறங்களிலுமுள்ள அகழியே அக்கினித்தீர்த்தமாகப் போற்றப்பெறுகிறது. இந்தத் தீர்த்தத்தின் தென்மேற்கு கரையில் ஞானவிநாயகர் கோவில் கொண்டுள்ளார். இவ்விநாயகரைப் போற்றி நெற்குன்ற வாணர் என்ற தெண்டைநாட்டுப் புலவர் .திருப்புகலூர் அந்தாதி பாடியுள்ளார்.

## சிந்தாமணியின் திருப்பணி :

கோவில் இரண்டு பிரகாரங்களுடனும் ஐந்து நிலைகளைக் கொண்ட இராஜுகோபுரத்துடனும் அகழியி யினிடையே அமைந்துள்ளது .கோவிலின்முதல்பிரகார மதிலையும் சிந்தாமணி மண்டபம் என்ற மண்டபத்தையும் சிந்தாமணி என்ற உருத்திரக் கணிகை கட்டியதாக வரலாறு. சிந்தாமணி என்ற தாசி முடிகொண்டான் ஆற்றின் கரையில் பெரியதொரு மாளிகை கட்டியிருந்தாள். அவ்வழியே சென்ற மன்னன் அதனைத் தேவாலயம் என்றுகருதி வணங்கினான். அதுதாசிவீடு என்று மன்னனுக்குத் தெரிவிக்கப் பட்டது மன்னன் மிகவும் சினந்து அதனை இடித்துத்தள்ளு

மாறு ஆணையிட்டான். தாசிஅதனைத் தடுத்துத்தானே வீட்டைஇடித்துக் கொள்வதாக வாக்களித்துப் பின்னர் மாளிகையை இடித்துவிட்டு அதற்குப் பிராயச் சித்தமாக முதல் மதிலும் சிந்தாமணி மண்டபமும் கட்டுவித்தாள் என்பது வரலாறு.

## அளவளவியா தலம் :

இறைவனுக்குத் திருமாலைத் திருப்பணி செய்து வந்த முருகநாயனார் வழிபட்டுப் பேறுபெற்ற திருத்தலம் திருப்புகலூர். இவர்தம் திருமடத்தில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சிறுத்தொண்டர் திருநீலநக்கர் முதலானோர் கூடியிருந்து அளவளாவியதாக வரலாறு.

## திருநாவுக்கரசர் பெருவாழ்வு :

திருநாவுக்கரசர் உழவாரப்பணி செய்து' புண்ணிய உன்னடிக்கேபோதுகின்றேன் புகலூர் மேவிய புண்ணியனே' எனப்போற்றி வழிபட்டு முத்தியடைந்த திருத்தலம் திருப்புகலூர் திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தி முதலிய தலங்களை வழிபட்டு விட்டு இத்தலத்திற்கு எழுந்தருளி உழவாரப்பணி மேற்கொண்டிருந்தார் அப்போது இறைவன் அவரைச்சோதிக்கஎண்ணிநவமணிக்கற்களைப் படுக்கைக்கற் -களிடையே கொட்டிவைத்திருந்தார்! திருநாவுக்கரசர் அவற்றைக் குப்பையோடு கூட்டி அள்ளி வெளியே கொட்டி விட்டார்.

• மேலும் இறைவன் திருவருளால் தேவலோகத்திலிருந்து அரம்பையர்கள் இறங்கி வந்து திருநாவுக்கரசர் முன் நின்று ஆடியும் பாடியும் மலர்களை அவர்மேல் எறிந்தும் அவரை அணைவோர்போல் நெருங்கியும் அவரை மயக்குவதற்கான முயற்சிகளை மேற்கொண்டனர் திருநாவுக்கரசர் அவற்றி லெல்லாம்மனம்சிறிதும்மயங்காதவராகி 'நான் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு அடிமையாகி

விட்டேன். ஆதலால் உங்கள் மாயத்திற்கு யான் ஆட்பட மாட்டேன் என்னும் கருத்தமைய 'பொய்ம்மாயப் பெருங்கடலில்' என்னும் திருத்தாண்டகத்தைப் பாடினார் என்பர்.

இவ்வகையில் இறைவனுடைய சோதனைகளை யெல்லாம் வென்ற திருநாவுக்கரசர் சித்திரை மாதம் சதயத்திருநாளில் இத்தலத்தில் சிவனடி அடைந்துப் பெரு வாழ்வு பெற்றதாகக் கூறுவர். சித்திரைச் சதயத்தைப் பத்தாம் நாளாகக் கொண்டு இத்தலத்தில் திருவிழா நடைபெற்று வருகின்றது இவ்விழாவில் திருநாவுக்கரசர் வரலாறு இடம் பெற்றுள்ளது. வைகாசித் திங்களில் இத்தலத்தில் பெருவிழா நடைபெறுகிறது.

## செங்கல் செம்பொன் ஆனது

சுந்தரர் பரவையாருக்குப் பொன் கொண்டு வருவதற்காகச் சென்றபோது வழி இடையில் இத்தலத்தில் இளைப்பாறினார். அப்போது அவர் கோவில் திருப்பணிக்கு வைத்திருந்த செங்கற்களைத் தலையணையாக வைத்துப் பள்ளி கொண்டார் திருப்புகலூர் இறைவன் திருவருளால் செங்கற்கள் செம்பொன்னாக மாறி யிருந்தன அவற்றைக் கண்டு இறையருளை வியந்த சுந்தரர்.

'தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ்
சார்வினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதே யெந்தைப்
புகலூர் பாடுமின் புலவீர்காள்'

எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடியருளினார்.

## வர்த்தமானீசுரர்

கோணப்பிரான் திருக்கோவிலில் ஒரு பகுதியாக கோணப்பிரான் சந்நிதிக்கு வடபக்கத்தில் வர்த்த மானீச்சரம் என்ற பாடல் பெற்ற திருச்சந்நிதி விளங்குகின்றது.

கோணப்பிரானைத்தேவாரம்அருளிய மூவரும்பாடியுள்ளனர் வர்த்தமானீசுரரைத் திருஞானசம்பந்தர்மட்டுமே போற்றிப் பாடியுள்ளா

பண்ணிலாவும் மறை பாடலினாநிறை
சேரும் வளையங்கைப்
பெண்ணிலாவவுடை யான்பெரியார்கழ
லென்றுந் தொழுதேத்த
உண்ணிலாவியவர் சிந்தையுள் நீங்கா
ஒரு வன்னிடமென்பர்
மண்ணிலாவும் அடியார் குடிமைத் தொழில்
மல்கும் புகலூரே

—திருஞானசம்பந்தர்

நீருமாய்த் தீயுமாகி
நிலனுமாய் விசும்புமாகி
ஏருடைக் கதிர்களாகி
யிமையவர் இறைசநின்ற
ஆய்வதற் கரியராகி
யங்கங்கே யாடுகின்ற
தேவர்க்குந் தேவராவார்
திருப்புக லூரனாரே'

—திருநாவுக்கரசர்

# 97. திருப்புட் குழி

தொண்டைநாட்டிலுள்ள பாடல் பெற்ற வைணவத் திருப்பதி திருப்புட் குழி. செங்கல்பட்டு மாவட்டத்தில் காஞ்சீபுரம் இரயில் நிலையத்திற்குத் தென்மேற்கே 7 கி.மீ. தொலைவில் இத்திருப்பதி விளங்குகின்றது.

புள்ளைக் குழியிலிட்டு மூடியது போல் எம்பெருமான் இப்பதியில் சேவைசாதிப்பதால் புட்குழிஆயிற்றுபுள் என்பது சடாயு. பாடல்பெற்றதலமாதலால் 'திரு' சேர்க்கப் பெற்று திருப்புட் குழி என வழங்குகின்றது.

## பதியின் மகிமைகள் :

இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் விஜய ராகவன். தாயார் மரகதவல்லி நாச்சியார் தீர்த்தம் சடாயுதீர்த்தம். எம்பெருமான் கிழக்கு நோக்கி வீற்றிருந்த கோலத்தில் சேவை சாதிக்கின்றார். திருமங்கையாழ்வார் இத்திருப்பதியை மங்களா சாசனம் செய்துள்ளார்

அலங்கெழு தடக்கை யாயன்வா யாம்பற்
கழியுமா லென்னுள்ளம் என்னும்
புலங்கெழு பொருநீர்ப் புட்குழி பாடும்
போதுமோ நீர்மலைக் கோமல வல்லி
கொடியிடை நெடுமழைக் கண்ணி
இலங்கெழில் தொளிக் கென்றினைந் திருந்தாய்
இடவெந்தை யெந்தை பிரானே

என்ற பாசுரம் நாளும் ஓதத் தக்கது.

# 98. திருப்புல்லாணி

பாண்டி நாட்டிலுள்ள பாடல் பெற்ற வைணவத் திருப்பதி திருப்புல்லாணி. இராமநாதபுரம் மாவட்டத்தில் இராமநாதபுரத்திலிருந்து 9 கி.மி. தொலைவில்இத்திருப்பதி திகழ்கின்றது.

இராமபிரான் இராவணனோடு போர்புரிய இலங்கைக்குச் செல்லக் கடல் கடக்க வேண்டிய தாயிற்று அதனால்ஏழு நாட்கள்வருணனை வேண்டித்தவம்கிடந்தார்

அப்பொழுது இராமபிரான் தனக்குத் தருப்பைப் புல்லையே தலையணையாகக் கொண்டார். அதனால் அப்பகுதியில் எழுந்த தலம் புல்லணை எனப் பெயர் பெற்றது. பாடல பெற்ற திருப்பதி. ஆதலால் திருப்புல்லணை ஆயிற்று. அப்பெயரே நாளடைவில் திருப்புல்லாணி என வழங்குகின்றது. வடமொழியில் இத் திருப்பதி தர்ப்பசயனம் என வழங்கப் பெறுகின்றது.

புல்லாரணிய முனிவர் இத்திருப்பதியில் வழிபட்டுப் பேறு பெற்றதால் திருப்புல்லாரணி எனப்பெயர் பெற்று நாளடைவில் திருப்புல்லாணி ஆயிற்று என்றும் கூறுவர்.

இலங்கைக்குச் செல்ல இராமபிரான் சேதுகட்ட இப் பதியில் தீர்மானித்ததால் இப்பதி ஆதிசேது என்றும் வழங் கப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் தெய்வச் சிலையார். கல்யாண ஜெகந்நாதன் என்று இரு நாமங்களால் போற்றப் பெறுகின்றார். இப்பதியில் எம் பெருமான் இராமபிரானுக்கு வில் ஒன்றை வழங்கியதால் தெய்வச் சிலையார் எனப் பெயர்பெற்றதாகக் கூறுவர், எம்பெருமான் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார் தாயார் கல்யாணவல்லி. தீர்த்தம் ஹேம தீர்த்தம். சக்கரதீர்த்தம். விருட்சம் அசுவத்த விருட்சம்.

கோவில் பிராகாரத்தில் சக்கரவர்த்தித் திருமகன் தர்ப்பைவில் சயனகோலமாகச் சேவை சாதிக்கின்றார், பட்டாபிராமன் சந்நிதியும் பக்கத்தில் இருக்கின்றது. இப் பதியில். அசுவத்தநாராயணன் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளார்.

திருமங்கையாழ்வார் இத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளார். கம்பரும் பாடியுள்ளார்.

உணரில் உள்ளம் சுடுமால்
வினையேன் தொழுதும் எழு

துணரி நாழல் நறும்போது
நம்சூழ் குழல்பெய்து பின்
தணரில் ஆவி தளரும் என
அன்பு தந்தான் இடம்
புணரி யோதம் பணிலம்
மணியுந்து புல்லாணியே

—திருமங்கையாழ்வார்

தருண மங்கையை மீட்பது
ஓர்நெறி தருகஎன்னும்
பொருள் நயந்துநல் நூல்நெறி
அடுக்கிய புல்லில்
கருணை அம்கடல் கிடந்தது
கருங்கடல் நோக்கி
வருண மந்திரம் எண்ணினன்
விதிமுறை வணங்கி

— கம்பர்

# 99 திருப்புள்ளம் பூதங்குடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதி திருப்புள்ளம் பூதங்குடி. தஞ்சாவூர் மாவட்டத்தில் மாயவரம் - திருச்சிராப்பள்ளி இருப்புப் பாதையில் சுவாமி மலை இரயில் நிலையத்திலிருந்து 4 கி. மீ, தொலைவில் இத்திருப்பதி விளங்குகின்றது.

இராமபிரான் சடாயுவைத் தகனம்செய்து அப்புள்ள ரசனைப் பூதங்கள் விளியும் நாளும் போக்கிலா உலகம் புகச்செய்தபதி இதுவாதல் பற்றிப் புள்ளம் பூதங்குடி ஆயிற்று என்பர். பாடல்பெற்ற திருப்பதி. ஆதலின் திருப் புள்ளம் பூதங்குடி என வழங்கப் பெறுகின்றது.

## பதியின் மகிமைகள் :

இப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் வல்வி ராமன். கிழக்கு நோக்கிய சயனத்தில் சேவை சாதிக்கின்றார் தாயார் பொற்றாமரையாள் தீர்த்தம் கிருத்திர தீர்த்தம் கிருத்திரராஜன் வழிபட்டுப் பேறுபெற்ற திருப்பதி இது. திருமங்கையாழ்வார் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளார்.

அறிவ தரியான் அனைத்துலகும்
உடையான் என்னை யாளுடையான்
குறிய மாணி யுருவாய
கூத்தன் மன்னி யமரும்இடம்
நறிய மலர்மேல் சுரும்பார்க்க
எழிலார் மங்கை நடமாட
பொறிகொள் சிறைவண் டிசைபாடும்
புள்ளம் பூதங் குடிதானே

என்பது அவர்தம் திருப்பாசுரங்களுள் ஒன்று. இப்பாசுரம் பலமுறை ஓதி இன்புறத் தக்க சிறப்புடையது.

# 100. திருப்புறவார் பனங்காட்டூர்

பாடல் பெற்ற சிவத்தலம் திருப்புறவார் பனங்காட்டூர் தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரம் இரயில் நிலையத்திற்கு வடக்கே 7 கி.மீ. தொலைவிலும் முண்டியம்பாக்கம் இரயில் நிலையத்திற்கு 2 கி.மீ தொலைவிலும் இத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு :

பனைமரங்கள்நிறைந்தகாட்டுப் பகுதியில் தோன்றிய தலமாதலின்பனங்காட்டூர் எனப்பெயர்பெற்றதுபுறாவிற்கு அடைக்கலம் கொடுத்த சிபிசக்கரவர்த்தி தன் கண்ணைப் பறித்திட்டவுடன் புறாவின் எடை சரியாகி விட்டது சிபி மன்னனுக்கு இறைவன் நேரே காட்சி கொடுத்தருளினார். இதன் காரணமாக இத்தலம் திருப்புறவார் பனங்காட்டூர் ஆயிற்று.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பனங்-காட்டீச்சுவரர் இறைவி புறவம்மை தல விருட்சம்பனை இத்தலத்தில் கதிரவன் வழிபட்டுப் பேறுபெற்றுள்ளான்.

சித்திரைத் திங்கள் ஒன்று முதல் ஏழு நாட்கள் வரையில் ஒவ்வொருநாள் காரையிலும் கதிரவன் தோன்றும் பொழுது கதிர்கள்முதலில்இறைவன் மீதும்அடித்து இறைவி மீதும் விழும் சிறப்பை இத்தலத்தில் காணமுடிகின்றது. திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்

செங்க யல்லொடு சேல்செருச் செயச்
சிறி யாழ்முர லேறினத் தொடு
பங்கயம் மலரும் புறவார் பனங்காட்டூர்க்
கங்கை யும்மதியுங்க மழ்சடைக்
கேண்மை யாளொடுங் கூடி மான்மறி
அங்கை யாடலனே யடியார்க் கருளாயே

என்னும் தேவாரப்பா மாலை பாடி இன்புறத் தக்கது.

# 101. திருப்புனவாயில்

பாண்டிநாட்டிலுள்ள பாடல் பெற்ற திருத்தலங்களில் ஒன்று திருப்புனவாயில் இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டத்தில் திருவாடானையிலிருது வடக்கே 15 கி. மீ. தொலைவில் பாம்பாற்றின் எதிர்க் கரையில் இருக்கின்றது. அறந்தாங்கி இரயில் நிலையத்திலிருந்து 37 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. வழியில் திருப்பெருந்துறையும் மீமிசலும் உள்ளன. பாண்டிநாட்டிலுள்ள பாடல் பெற்ற தலங்களுள் இஃது ஏழாவதாகும்.

## தல வரலாறு :

இத்தலம் தொன்மைச் சிறப்புடையது.அதனால்தான் இத்தலத்தை விருத்தபுரி, பழம்பதி எனப்போற்றுவர்

பண்டைநாளில் இது கடற்கரை அருகே இருந்திருக்க வேண்டும் ஆற்றின் வளமும் கடல் வளமும் இப்பகுதி பெற்றிருந்ததால் புனல் வாயில் என்னும் பெயர் பெற்றது பாடல் பெற்ற தலமாதலால் திருப்புனல் வாயில் என வழங்கப்பெறுகின்றது என்பர் இக்காலத்தில்கடல் இத்தலத்திலிருந்து 3 கி.மீ. தொலைவு தள்ளி இருக்கின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பழம்பதி நாயகர். இறைவி பரங்கருணை நாயகி. தீர்த்தம் இலட்சுமி, பிரம்மம். விருட்சம் புன்னை, மகிழம்-

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற 14 திருப்பதிகளும் இத்தலத்தில் ஒருங்கே அமைந்துள்ளன என்பது ஐதிகம், எனவே இங்குப் பதினான்கு சிவலிங்கங்கள் விளங்குகின்றன. இத்தலத்தில் நான்கு வேதங்களும் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளன,

இக்கோவிலில் விளங்குகின்ற நந்தியும் சிவக்கொழுதும் ஆவுடையாரும் மிகப் பெரியவை.

சிவக்கொழுந்துச் சுற்ற மூன்றுமுழ
    உடை வேண்டும் !
ஆவுடையாருக்குச் சுற்ற முப்பதுமுழ
    உடைவேண்டும் !
        அதனால்
மூன்று முழமும் ஒரு சுற்று
    முப்பது முழமும் ஒரு சுற்று

என்னும் பழமொழி வழங்கி வருகின்றது.

திருஞானசம்பந்தரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

மின்னியல் செஞ்சடை வெண்பிறை
யன் விரி நூலினன்
பன்னிய நான்மறை பாடியா
டிப் பல வூர்கள்போய்
அன்னமன் னந்நடை யாளொ
டும்மம ரும்மிடம்
புன்னைநன் மாமலர் பொன்னுதிர்க்
கும்புன வாயிலே

— திருஞானசம்பந்தர்

சித்த நீநினை யென்னொடு
சூளறும் வைகலும்
மத்த யானையி னீருரி
போர்த்தம ணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின்
றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்ட
றாப்புன வாயிலே

—சுந்தரமூர்த்தி நாயனார்

# 102. திருப்புன்கூர்

சோழநாட்டிலுள்ள பாடல் பெற்ற சிவத்தலம் திருப்புன்கூர். தஞ்சாவூர் மாவட்டத்தில் வைத்தீசுவரன் கோவில் இரயில் நிலையத்திலிருந்து மேற்கே 3 கி.மீ தொலைவில் இத்திருத்தலம் விளங்குகின்றது.

பண்டைக்காலத்தில் இப்பகுதியில் புன்கு மரங்கள் நிறைந்திருந்தமையாலும் இப்பகுதியில் எழுந்த கோவில் மரம் புன்கு மரமாதலாலும்பாடல்பெற்ற தலமாதலாலும் திருப்புன்கூர் எனப் பெயர் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சிவலோக நாதர் இறைவி சொக்கநாயகி அம்மை. நந்தனாராகிய திருநாளைப்போவார் தொட்ட திருக்குளம் இத்தலத்தில் விளங்குகின்றது. அக்காலத்தில் அவர்பொருட்டு விலகிய நந்தித்தேவர் இன்றும் அவ்வாறே உள்ளார் திருநாளைப் போவார் திருப்படிமமும் உள்ளது. நந்தனார் ஊராகிய ஆதனூர் இத்தலத்திற்கு வடக்கே ஒரு கி.மீ. தொலைவில் இருக்கின்றது.

சுந்தரரும் ஏயர்கோன் கலிக்காம நாயனாரும் இறைவன் திருவருளால் நட்பு பூண்டவுடன் இருவரும் சென்று வழிபட்ட பெருமையுடையதுஇத்தலம் ஏயர்கோன் கலிக்காமநாயனார் இறைவனுக்கு மழை வேண்டி பன்னிரண்டு வேலி நிலமும், மிகப்பெய்த மழையில் பெரு வெள்ளத்தைத்தவிர்க்க மீண்டும் பன்னிரண்டு வேலி நிலமும் கொடுத்ததை 'வையகமுற்றும்' எனத் தொடங்கும் சுந்தரர் தேவாரத்தால் அறியமுடிகின்றது. கலிக்காம நாயனார் திருவூராகிய திருப்பெருமங்லம் இவ்வூருக்கு வடக்கே ஒரு கி. மீ தொலைவில் இருக்கின்றது. மூவர்தேவாரம் பெற்ற சிறப்புடையது இத்திருத்தலம்.

முந்தி நின்ற வினைக ளவைபோகச்
சிந்தி நெஞ்சே சிவனார் திருப்புன்கூர்
அந்த மில்லா வடிக ளவர்போலும்
கந்த மல்கு மழ்புன் ர்டையாரே

— திருஞான சம்பந்தர்

# 103 திருப்பூவணம்

பாண்டிநாட்டிலுள்ள பாடல் பெற்ற சிவத்தலம் திருப்பூவணம். மதுரை, இராமநாதபுரம் சாலையில் மதுரையிலிருந்து 15 கி.மி. தொலைவில் வைகையாற்றின் தென்கரையில் இத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு :

இத்தலம்தொன்மைச் சிறப்புடையது. அக்காலத்தில் இப்பகுதியில் பலவகையான பூந்தோட்டங்கள் இருந்தமையால் பூவணம் எனப் பெயர் பெற்றது, பாடல் பெற்ற தலமாதலால் திருப்பூவணம் ஆயிற்று இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருப்பூவணநாதர் திருப்பூவணேசர் என்றும் போற்ற பெறுகின்றார் வடமொழியில் இத்தலத்தைத் புஷ்பதுனம் என வழங்குவர்

## தல மகிமைகள் :

இத்தலத்தில் உயிர்நீத்தால் மோட்சம் கிடைக்கும் என்பது மக்கள் நம்பிக்கை, அதனால்தான் இத்தலத்து இறைவன் ''அடைவார் வினை தீர்ப்பவர்'' எனப்போற்றப் பெறுகின்றார் இறைவி அன்னபூரணி, அழகியநாயகி, மின்னனையாள் எனப் போற்றப் பெறுகின்றார்.

இத்தலத்தில் கற்பக விநாயகர், மணி மந்திர விநாயகர், ஒட்டுக்கல் வெள்ளை விநாயகர் ஆகிய மூவர்

சந்நிதிகள் இருக்கின்றன. இத்தலத்து விருட்சம் பலா. தீர்த்தம் வைகை நான்முகன் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றார்

## விழாக்கள் :

ஆடிப்பூரம், பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் சிறப்பாக இத்தலத்தில் நடைபெறுகின்றன ஐப்பசித்திங்கள் ளில் பத்து நாட்கள் நடைபெறும் திருவிழாவில் அம்பாள் கோலாட்டம் போடுவது கண்கொள்ளாக் காட்சி ஆனித் திங்களில் பிரமோற்சவம் நடைபெறுகின்றது.

## இலக்கியங்கள் :

நால்வர் பாடிய சிறப்புடையது இத்திருத்தலம் கருவூர்த்தேவர் பாடிய திருவிசைப்பா ஒன்றும் இத்தலத் திற்கு உண்டு. இத்தலத்தைக் கருவாகக் கொண்டு திருப் பூவண நாதர் உலா என்ற உலா நூலும் எழுந்துள்ளது.

வடியேறு திரிசூலந் தோன்றும் தோன்றும்
வளர்சடைமே லிளமதியந் தோன்றும் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றும்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும்பூவணத்தெம் புனிதனார்க்கே

---திருநாவுக்கரசர்

# 104 திருப்பெண்ணாகடம்

தென்னார்க்காடு மாவட்டத்தில் விருத்தாசலத்திற்

குத்தென்மேற்கில் இத்தலம் இருக்கின்றது. இத்தலத்திற்கு இரயில் நிலையம் உண்டு திருமுதுகுன்றத்திற்குத் தென் மேற்கில்15கி.மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு:

தேவகன்னியரும் காமதேனுவும் வெள்ளையானையும் வழிப்பட்ட திருத்தலம் இது பெண்(தேவகன்னியர்)ஆ(காமதேனு) கடம்(வெள்ளையானை) மூன்றும் கூடிப்பெண்ணாகடம் எனப்பெயர் பெற்றுள்ளது. பாடல்பெற்றதிருத்தலம். ஆதலால் திருப்பெண்ணாகடம் ஆயிற்று திருக்கடந்தை எனவும் வெள்ளையானைச் சிறப்பின் காரணமாக வழங்கப் பெறுகின்றது.

கல்வெட்டில் இத்தலம் வடகரை இராசாதிராச வளநாட்டு மேற்கா நாட்டுப் பிரமதேயமான முடிகொண்ட சோழசதுர்வேதி மங்கலம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள்:

இத்தலக்கோவில் திருத்தூங்கானைமடம் எனப்போற்றப் பெறுகின்றது. இறைவன் திருநாமம் சுடர்க்கொழுந்து நாதர் இறைவி கடந்தை நாயகி.கலிக்காம நாயனார் இத்தலத்தில் வழிபட்டுப்பேறு பெற்றுள்ளார்.இறைவன் திருநாவுக்கரசர் வேண்டுகோளின் படி அவர் திருத்தோளின் மேல் சூலமும் இடபமும் பொறித்ததாக வரலாறு.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

சாநாளும் வாழ்நாளுந் தோற்றமிவை
சலிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
ஆமா றறியா தலமந்துநீர்
அயர்ந்துங் குறைவில்லை ஆனேறுடைப்
பூமாண் அலங்கல் இலங்கு கொன்றை

புனல் பொதிந்தபுன் சடையினானுறையும்
தூமான் கடந்தைத் தடங்கோவில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே

— திருநாவுக்கரசர்

# 105 திருப்பேரெயில்

பாடல்பெற்ற சிவத்தலமாகவும் வைணவத் திருப்பதியாகவும் இத்தலம் விளங்குகின்றது. பாண்டிநாட்டைச் சார்ந்தது. திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலி திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் ஆழ்வார் திருநகரியிலிருந்து4கி.மீ.தொலைவில் இத்தலம் விளங்குகின்றது குழிக்கரை இரயில் நிலையத்திலிருந்து தெற்கே4கி.மீ.தொலைவிலும் நாட்டியத்தான்குடி இரயில்நிலையத்திலிருந்து 7கி.மீ.தொலைவிலும் இத்தலம் இருக்கின்றது.பொருநையாற்றின் தென்கரையில் வளம்வாய்ந்த தலமாகத் திருப்பேரயில் விளங்குகின்றது.

## தல வரலாறு:

எயில் என்பது கோட்டையைக் குறிக்கும்.இப்பகுதியில் பண்டைக்காலத்தில் பெரிய கோட்டைஇருந்தது.அக்கோட்டையைச் சுற்றி எழுந்த ஊர் பேரெயில் ஆயிற்று பாடல் பெற்ற தலமாதலால் திருப்பேரெயில் என வழங்கப்பெறுகின்றது.

இத்தலம் ஓகை'ஓகைப்பேரயில்' வெங்காரப்பேரையூர் ஓகைப்பேரையூர் எனவும் வழங்கப் பெறும்.திருப்பேரை எனவும் இத்தலம் வழங்கப் பெறுகின்றது.வைணவத்திருப்பதிகளில் வடநாட்டில் திருப்பேர் என ஒரு பதி இருப்

பதால் இப்பதியைத் தென்திருப்பேரை என வழங்கப் பெறுகின்றது.தென்திருப்பேரி என்றும் இன்று வழங்குகின்றனர்.

## வைணவத்திருப்பதி:

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் மகர நெடுங்குழைக்காதர். தாயார் குழைக்காது வல்லி நாச்சையார். எம்பெருமான் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுகமண்டலத்துடன் சேவை சாதிக்கின்றார். இந்த எம்பெருமான் நிகரில் முகில்வண்ணன் என்றும் போற்றப் பெறுகின்றார். இத்திருப்பதியை நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்.

காலம் பெற என்னைக் காட்டு மின்கள்
    காதல் கடலின் மிகப் பெரிதால்
நீல முகில்வண்ணத் தெம்பெருமான்
    நிற்குமுன் னேவந்தென் கைக்கும் எய்தான்
ஞாலத் தவன்வந்து வீற்றி ருந்த
    நான்மறை யாளரும் வேள்வி யோவா
கோலச் செந்நெற்கள் கவரி வீசும்
    கூடு புனல்திருப் பேரெ யிற்கே

— நம்மாழ்வார்

## சிவத்தலம் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சேகதீசுரர் இறைவி பெண்ணமிழ்த நாயகி, அக்கினித் தீர்த்தம், தீர்த்தம்வருணன் அக்கினி வழிபட்டு பேறு பெற்ற சிவத்தலம் இது. திருநாவுக்கரசர் இத்தலத்து இறைவனைப் போற்றிப் பாடியுள்ளார்.

உழைத்துந் துள்ளியும் உள்ளத்து ளேயுரு
இழைத்தும் எந்தை பிரான் என்றிராப் பகல்
அழைக்கும் அன்பின ராய அடியவர்
பிழைப்பு நீக்குவர் பேரெயில் ஆளரே"

என்னும் திருநாவுக்கரசர் தேவராப் பாடல் நாளும் ஓதத் தக்க சிறப்புடையது.

# 106 திருப்போரூர்

தொண்டை நாட்டிலுள்ள பாடல் பெற்ற முருகன் திருத்தலங்களில் ஒன்று திருப்போரூர் செங்கல்பட்டு மாவட்டத்தில் சென்னை-மாமல்லபுரம் சாலையில் சென்னையிலிருந்து சுமார் 40 கி.மீ. தொலைவில் இத்திருத் தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

முருகப் பெருமான் சூரபத்மனிடம் மூன்று களங்களில் இருந்து போர் புரிந்து வென்றுள்ளார். தரையில் நின்று போர் புரிந்தது திருப்பரங்குன்றம். கடலில் நின்று போர் புரிந்தது திருச்செந்தூர். விண்ணில் சென்று போர் புரிந்தது திருப்போரூர். முருகப் பெருமான் இப்பகுதியில் விண்ணில் போரிட்டு வென்றதால் இத்தலம் திருபோரூர் ஆயிற்று.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் உள்ள சுப்பிரமணியர் கோவிலுக்குள் மூலவராக உள்ள முருகன் சுயம்பு மூர்த்தம். வள்ளி தெய் வயானையுடன் இருக்கும் முருகப் பெருமானின் ஒரு சிறிய திருப்படிமமும் கோவிலுக்குள் விளங்குகின்றது. கோவி

லுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் நுழைவாயில்கள் உண்டு. சந்நிதி கிழக்கு நோக்கிய வண்ணம் விளங்குகின்றது. தல விருட்சம் வன்னி.

சுப்பிரமணியர் கோவிலுக்குள் ஒரு சிறு சிவாலயம் இருக்கின்றது. இறைவன் திருநாமம் காசிவிசுவநாதர். இறைவி விசாலாட்சி இத்தலத்தில் பிரணவமலை என்னும் சிறிய மலையொன்று இருக்கின்றது. அதன்மேல் ஒரு சிவன் கோவில் இருக்கின்றது, இங்குக் கோவில் கொண்டுள்ள இறைவன் தியாக கைலாசநாதர். இறைவி பாலாம்பிகை.

சுப்பிரமணியர் கோவில் இருக்குமிடத்தில் 300 ஆண்டுகட்கு முன்பு சிவலாயம் இருந்ததாகக் கூறுவர். அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழில் இத்தலம் பற்றிய பாடல்கள் உள்ளன. சிதம்பரசுவாமிகள் இயற்றிய திருப்போரூர்ச் சந்நிதி முறை இத்தலத்தைக் கருவாகக் கொண்டு எழுந்த இலக்கியமாகும்.

உருக்கார் வாளிகண்கள்
பொருப்பார் வார்தனங்க
ளுரைத்தேன் வாலசந்த்ர நுதனுாலாம்
உருச்சேர் நீண்மருங்குல்
பணைத்தோ ளோதிகொண்ட
லுவப்பா மேல் விழுந்து திரிவோர்கள்
அருக்கா மாதர்தங்கள்
வரைக்கே யோடியின்ப
வலைக்கே பூணுநெஞ்சன் அதிபாவி
அசட்டால் மூடுகின்ற
மயக்கால் மாயுமிந்த
அவத்தா லீனமன்றி அருள்வாயே;
எருக்கார் தாளிதும்பை
மருச்சேர் போதுகங்கை
யினைச்சூ டாதிநம்பர் புதல்வோனே!
இருக்காலே நினைந்து
துதிப்பார் நாவினெஞ்சி

விருப்பார் யானைதங்கு மணிமார்பா!
செருக்கா லேமிகுந்த
கடற்சூர் மாளவென்ற
திறற்சேர் வேல்கை கொண்ட மருகோனே!
தினைக்கோர் காவல்கொண்ட
குறத்தேன் மாதுபங்க!
திருப்போ ரூரமர்ந்த பெருமாளே!

என்னும் இத்தலம் பற்றிய திருப்புகழ் நாளும் ஓதி இன்புறத் தக்கது.

# 107 திருமழபாடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருமழபாடி. தஞ்சாவூர் மாவட்டத்தில் புள்ளம்பாடி இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 15 கி. மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது. திருவையாற்றுக்கு மேற்கே 4 கி. மீ, தொலைவில் உள்ளது. இடையில் கொள்ளிடஆறு வடக்குநோக்கிச் செல்கின்றது.

## தல வரலாறு :

பண்டைக்காலத்தில் சிறந்து விளங்கிய படைவீரர்களில் ஒரு பகுதியினர் மழவர். இம்மரபினருக்கும் அரச குலத்தாருக்கும் உறவு முறையும் உண்டு. இத்தகையவர்களாகிய மழவர்கள் அக்காலத்தில் இப்பகுதியில் மிகுதியும் வாழ்ந்த காரணத்தால் இத்தலம் மழவர்பாடி எனப் பெயர் பெற்று நாளடைவில் திருமழபாடி என வழங்குகின்றது. கல்வெட்டில் இத்தலம் மழுவாடி என்று குறிக்கப் பட்டுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வச்சிரத் தம்பநாதர் இறைவி அழகம்மை. தல விருட்சம்பனை. மறைகளும் திருமாலும் வானவர்கோனும் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் திருமழபாடி.

தலந்தோறும் வழிபாடு மேற்கொண்ட சுந்தரர் திருவாலம் பொழிலை வழிபட்டு அங்குத்துயின்றார். இறைவன் அவர் கனவில் தோன்றி " மழபாடி வருவதற்கு மறந்தாயோ "என அருளியதாகவும் சுந்தரர் இத்தலத்திற்கு வந்து " பொன்னார் மேனியனே ! " எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியதாகவும் கூறுவர்.

இத்தலத்தில் பங்குனித்திங்களில் திருநந்திதேவருக்குத் திருமணம் நிகழ்கின்றது. அதன் பொருட்டுத் திருவையாற்றிலிருந்து ஐயாறப்பர், நந்திதேவர் ஆகிய இருவரும் எழுந்தருளி வருகின்றனர் நந்தி தேவர், அவர்தம் தேவியார் ஆகிய இருவருக்கும் கற்படிமங்கள் இருக்கின்றன.

மூவர் தேவாரம் பெற்ற சிறப்புடைது இத்தலம்.

விதியு மாம் விளைவா மொளி யார்த்ததோர்
கதியு மாங்கசி வாம்வசி யாற்றமா
மதியு மாம்வலி யாமழ பாடியுள்
நதியுந் தோய்சடை நாதனற் பாதமே

— திருஞானசம்பந்தர்

பொன்னார் மேனிய னே
புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல்
மிளிர் கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே
மழபாடியுள் மாணிக்கமே
அன்னே யுன்னை யல்லால்

சந்நிதிகள் இருக்கின்றன. இத்தலத்து விருட்சம் பலா. தீர்த்தம் வைகை நான்முகன் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றார்

## விழாக்கள் :

ஆடிப்பூரம், பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் சிறப்பாக இத்தலத்தில் நடைபெறுகின்றன ஐப்பசித்திங்கள் ளில் பத்து நாட்கள் நடைபெறும் திருவிழாவில் அம்பாள் கோலாட்டம் போடுவது கண்கொள்ளாக் காட்சி ஆனித் திங்களில் பிரமோற்சவம் நடைபெறுகின்றது.

## இலக்கியங்கள் :

நால்வர் பாடிய சிறப்புடையது இத்திருத்தலம் கருவூர்த்தேவர் பாடிய திருவிசைப்பா ஒன்றும் இத்தலத் திற்கு உண்டு. இத்தலத்தைக் கருவாகக் கொண்டு திருப் பூவணநாதர் உலா என்ற உலா நூலும் எழுந்துள்ளது.

வடியேறு திரிசூலந் தோன்றும் தோன்றும்
வளர்சடைமே விளமதியந் தோன்றும் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றும்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும்பூவணத்தெம் புனிதனார்க்கே

---திருநாவுக்கரசர்

# 104 திருப்பெண்ணாகடம்

தென்னார்க்காடு மாவட்டத்தில் விருத்தாசலத்திற்

குத்தென்மேற்கில் இத்தலம் இருக்கின்றது. இத்தலத்திற்கு இரயில் நிலையம் உண்டு திருமுதுகுன்றத்திற்குத் தென் மேற்கில் 15கி.மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது.

## தல வரலாறு:

தேவகன்னியரும் காமதேனுவும் வெள்ளையானையும் வழிப்பட்ட திருத்தலம் இது பெண்(தேவகன்னியர்)ஆ (காமதேனு) கடம்(வெள்ளையானை) மூன்றும் கூடிப்பெண்ணாகடம் எனப்பெயர் பெற்றுள்ளது. பாடல்பெற்றதிருத்தலம். ஆதலால் திருப்பெண்ணாகடம் ஆயிற்று திருக்கடந்தை எனவும் வெள்ளையானைச் சிறப்பின் காரணமாக வழங்கப் பெறுகின்றது.

கல்வெட்டில் இத்தலம் வடகரை இராசாதிராச வளநாட்டு மேற்கா நாட்டுப் பிரமதேயமான முடிகொண்ட சோழசதுர்வேதி மங்கலம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள்:

இத்தலக்கோவில் திருத்தூங்கானைமடம் எனப்போற்றப் பெறுகின்றது. இறைவன் திருநாமம் சுடர்க்கொழுந்து நாதர் இறைவி கடந்தை நாயகி.கலிக்காம நாயனார் இத் தலத்தில் வழிபட்டுப்பேறு பெற்றுள்ளார்.இறைவன் திருநாவுக்கரசர் வேண்டுகோளின் படி அவர் திருத்தோளின் மேல் சூலமும் இடபமும் பொறித்ததாக வரலாறு.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

சாநாளும் வாழ்நாளுந் தோற்றமிவை
சலிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
ஆமா றறியா தலமந்துநீர்
அயர்ந்துங் குறைவில்லை ஆனேறுடைப்
பூமான் அலங்கல் இலங்கு கொன்றை

புனல் பொதிந்தபுன் சடையினானுறையும்
துமாண் கடந்தைத் தடங்கோவில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே

— திருநாவுக்கரசர்

# 105 திருப்பேரெயில்

பாடல்பெற்ற சிவத்தலமாகவும் வைணவத் திருப்பதியாகவும் இத்தலம் விளங்குகின்றது. பாண்டிநாட்டைச் சார்ந்தது. திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலி திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் ஆழ்வார் திருநகரியிலிருந்து4கி.மீ.தொலைவில் இத்தலம் விளங்குகின்றது குழிக்கரை இரயில் நிலையத்திலிருந்து தெற்கே4கி.மீ.தொலைவிலும் நாட்டியத்தான்குடி இரயில்நிலையத்திலிருந்து 7கி.மீ.தொலைவிலும் இத்தலம் இருக்கின்றது.பொருநையாற்றின் தென்கரையில் வளம்வாய்ந்த தலமாகத் திருப்பேரயில் விளங்குகின்றது.

## தல வரலாறு:

எயில் என்பது கோட்டையைக் குறிக்கும்.இப்பகுதியில் பண்டைக்காலத்தில் பெரிய கோட்டை இருந்தது.அக்கோட்டையைச் சுற்றி எழுந்த ஊர் பேரெயில் ஆயிற்று பாடல் பெற்ற தலமாதலால் திருப்பேரெயில் என வழங்கப்பெறுகின்றது.

இத்தலம் ஓகை'ஓகைப்பேரயில்' வங்காரப்பேரையூர் ஓகைப்பேரையூர் எனவும் வழங்கப் பெறும்.திருப்பேரை எனவும் இத்தலம் வழங்கப் பெறுகின்றது.வைணவத்திருப்பதிகளில் வடநாட்டில் திருப்பேர் என ஒரு பதி இருப்

பதால் இப்பதியைத் தென்திருப்பேரை என வழங்கப் பெறு கின்றது.தென்திருப்பேரி என்றும் இன்று வழங்குகின்றனர்.

## வைணவத்திருப்பதி:

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் மகர நெடுங்குழைக்காதர். தாயார் குழைக்காது வல்லி நாச்சையார். எம்பெருமான் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுகமண்டலத்துடன் சேவை சாதிக்கின்றார். இந்த எம்பெருமான் நிகரில் முகில்வண்ணன் என்றும் போற்றப் பெறுகின்றார். இத்திருப்பதியை நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்.

காலம் பெற என்னைக் காட்டு மின்கள்
　　காதல் கடலின் மிகப் பெரிதால்
நீல முகில்வண்ணத் தெம்பெருமான்
　　நிற்குமுன் னேவந்தென் கைக்கும் எய்தான்
ஞாலத் தவன்வந்து வீற்றி ருந்த
　　நான்மறை யாளரும் வேள்வி யோவா
கோலச் செந்நெற்கள் கவரி வீசும்
　　கூடு புனல்திருப் பேரெ யிற்கே

— நம்மாழ்வார்

## சிவத்தலம்:

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் கைலாசநாதர் இறைவி அழகம்மை நாயகி, அக்கினித் தீர்த்தம், தீர்த்தம்வருணன் அக்கினி வழிபட்டு பேறு பெற்ற சிவத்தலம் இது. திருநாவுக்கரசர் இத்தலத்து இறைவனைப் போற்றிப் பாடியுள்ளார்.

உழைத்துந் துள்ளியும் உள்ளந்து ளேயுரு
இழைத்தும் எந்தை பிரான் என்றிராப் பகல்
அழைக்கும் அன்பின ராய அடியவர்
பிழைப்பு நீக்குவர் பேரெயில் ஆளரே''

என்னும் திருநாவுக்கரசர் தேவாரப் பாடல் நாளும் ஓதத் தக்க சிறப்புடையது.

# 106 திருப்போரூர்

தொண்டை நாட்டிலுள்ள பாடல் பெற்ற முருகன் திருத்தலங்களில் ஒன்று திருப்போரூர் செங்கல்பட்டு மாவட்டத்தில் சென்னை-மாமல்லபுரம் சாலையில் சென்னையிலிருந்து சுமார் 40 கி.மீ. தொலைவில் இத்திருத் தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

முருகப் பெருமான் சூரபத்மனிடம் மூன்றுகளங்களில் இருந்து போர் புரிந்து வென்றுள்ளார். தரையில் நின்று போர் புரிந்தது திருப்பரங்குன்றம். கடலில் நின்று போர் புரிந்தது திருச்செந்தூர். விண்ணில் சென்று போர் புரிந்தது திருப்போரூர். முருகப் பெருமான் இப்பகுதியில் விண்ணில் போரிட்டு வென்றதால் இத்தலம் திருபோரூர் ஆயிற்று.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் உள்ள சுப்பிரமணியர் கோவிலுக்குள் மூலவராக உள்ள முருகன் சுயம்பு மூர்த்தம். வள்ளி தெய் வயானையுடன் இருக்கும் முருகப் பெருமானின் ஒரு சிறிய திருப்படிமமும் கோவிலுக்குள் விளங்குகின்றது. கோவி

லுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் நுழைவாயில்கள் உண்டு. சந்நிதி கிழக்கு நோக்கிய வண்ணம் விளங்குகின்றது. தல விருட்சம் வன்னி.

சுப்பிரமணியர் கோவிலுக்குள் ஒரு சிறு சிவாலயம் இருக்கின்றது. இறைவன் திருநாமம் காசிவிசுவநாதர். இறைவி விசாலாட்சி இத்தலத்தில் பிரணவமலை என்னும் சிறிய மலையொன்று இருக்கின்றது. அதன்மேல் ஒரு சிவன் கோவில் இருக்கின்றது, இங்குக் கோவில் கொண்டுள்ள இறைவன் தியாக கைலாசநாதர். இறைவி பாலாம்பிகை.

சுப்பிரமணியர் கோவில் இருக்குமிடத்தில் 300 ஆண்டுகட்கு முன்பு சிவலாயம் இருந்ததாகக் கூறுவர். அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழில் இத்தலம் பற்றிய பாடல்கள் உள்ளன. சிதம்பரசுவாமிகள் இயற்றிய திருப்போரூர்ச் சந்நிதி முறை இத்தலத்தைக் கருவாகக் கொண்டு எழுந்த இலக்கியமாகும்.

உருக்கார் வாளிகண்கள்
பொருப்பார் வார்தனங்க
ளுரைத்தேன் வாலசந்த்ர நுதனூலாம்
உருச்சேர் நீண்மருங்குல்
பணைத்தோ ளோதிகொண்ட
லுவப்பா மேல் விழுந்து திரிவோர்கள்
அருக்கா மாதர்தங்கள்
வரைக்கே யோடியின்ப
வலைக்கே பூணுநெஞ்சன் அதிபாவி
அசட்டால் மூடுகின்ற
மயக்கால் மாயுமிந்த
அவத்தா லீனமன்றி அருள்வாயே;
எருக்கார் தாளிதும்பை
மருச்சேர் போதுகங்கை
யினைச்சூ டாதிநம்பர் புதல்வோனே!
இருக்காலே நினைந்து
துதிப்பார் நாவினெஞ்சி

விருப்பார் யானைதங்கு மணிமார்பா!
செருக்கா லேமிகுந்த
கடற்சூர் மாளவென்ற
திறற்சேர் வேல்கை கொண்ட மருகோனே!
தினைக்கோர் காவல்கொண்ட
குறத்தேன் மாதுபங்க!
திருப்போ ரூரமர்ந்த பெருமாளே!

என்னும் இத்தலம் பற்றிய திருப்புகழ் நாளும் ஓதி இன்புறத் தக்கது.

# 107 திருமழபாடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருமழபாடி. தஞ்சாவூர் மாவட்டத்தில் புள்ளம் பாடி இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 15 கி. மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது. திருவையாற்றுக்கு மேற்கே 4 கி. மீ, தொலைவில் உள்ளது. இடையில் கொள்ளிடஆறு வடக்குநோக்கிச் செல்கின்றது.

## தல வரலாறு :

பண்டைக்காலத்தில் சிறந்து விளங்கிய படைவீரர்களில் ஒரு பகுதியினர் மழவர். இம்மரபினருக்கும் அரச குலத்தாருக்கும் உறவு முறையும் உண்டு. இத்தகையவர்களாகிய மழவர்கள் அக்காலத்தில் இப்பகுதியில் மிகுதியும் வாழ்ந்த காரணத்தால் இத்தலம் மழவர்பாடி எனப் பெயர் பெற்று நாளடைவில் திருமழபாடி என வழங்குகின்றது. கல்வெட்டில் இத்தலம் மழுவாடி என்று குறிக்கப் பட்டுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வச்சிரத் தம்பநாதர் இறைவி அழகம்மை. தல விருட்சம்பனை. மறைகளும் திருமாலும் வானவர்கோனும் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் திருமழபாடி.

தலந்தோறும் வழிபாடு மேற்கொண்ட சுந்தரர் திருவாலம் பொழிலை வழிபட்டு அங்குத்துயின்றார். இறைவன் அவர் கனவில் தோன்றி " மழபாடி வருவதற்கு மறந்தாயோ "என அருளியதாகவும் சுந்தரர் இத்தலத்திற்கு வந்து " பொன்னார் மேனியனே ! " எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியதாகவும் கூறுவர்.

இத்தலத்தில் பங்குனித்திங்களில் திருநந்திதேவருக்குத் திருமணம் நிகழ்கின்றது. அதன் பொருட்டுத் திருவையாற்றிலிருந்து ஐயாறப்பர், நந்திதேவர் ஆகிய இருவரும் எழுந்தருளி வருகின்றனர் நந்தி தேவர், அவர்தம் தேவியார் ஆகிய இருவருக்கும் கற்படிமங்கள் இருக்கின்றன.

மூவர் தேவாரம் பெற்ற சிறப்புடைது இத்தலம்.

விதியு மாம் விளைவா மொளி யார்த்ததோர்
கதியு மாங்கசி வாம்வசி யாற்றமா
மதியு மாம்வலி யாமழ பாடியுள்
நதியுந் தோய்சடை நாதனற் பாதமே

— திருஞானசம்பந்தர்

பொன்னா மேனிய னே
புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல்
மிளிர் கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே
மழபாடியுள் மாணிக்கமே
அன்னே யுன்னை யல்லால்

முடையதுமான மலை இருக்கின்றது. இதன் உயரம் 2, 665 அடி. நாற்புறமும் நான்கு கிளைகளையுடைய ஒரு குன்றுத் தொகுதி போல் இது காட்சி அளிக்கின்றது.

அரியும் அயனும் தம்மில் யார் உயர்ந்தவர்கள் எனத்தம் பேதைமையால் போரிட்டுக் கொண்ட பொழுது சிவபெருமான் அவர்தம் செருக்கடக்கி நன்னெறிப் படரப் பேரொளிப் பிழம் பாய்த் தோன்றியருளிய மலையே இது! இம்மலை அருணாசலம் என்றும் அண்ணாமலை என்றும் போற்றப் பெறுகின்றது. அருணாசலம் என்பது சிவப்பு மலை எனப் பொருள். படும். இம்மலையின் ஒரு பகுதி அண்மைக்காலம் வரையிலும்கூட அக்கினியாக இருந்தது என்பர். சிவபெருமானின் திருவுருவம் ஒளிமயமான உருவில் உயர்ந்து நின்றதால் இம்மலை அண்ணாமலை எனப் போற்றப் பெறுகின்றது.

இம்மலையின் கீழ்ப் பகுதியில் அதன்தாழ் வரையில் ஒரு பெரியகோவில் விளங்குகின்றது. இக்கோவில் மலையின் பெயரையே பெற்று விளங்குகின்றது. இப்பகுதியில் எழுந்த தலம் மலையின் பெயராலேயே அண்ணாமலை என வழங்குகின்றது பாடல்பெற்ற தலமாதலால் திருவண்ணாமலை ஆயிற்று. இத்தலம் அருணகிரி, அருணமலை, அருணை, சோணகிரி எனப் பல பெயர்களைப் பெற்றுள்ளது.

## தல சிறப்புகள் :

பரந்த இவ்வுலகம் நிலம், நீர். தீ, வளி, வான் என்னும் ஐம்பூதங்களால் ஆனது அவை முறையே பிருதிவி. அப்பு, தேயு, வாயு, ஆகாயம் எனக்கூறப்பெறும். ஐம்பூதங்களின் இன்றியமையாமையினையும் நுட்பத்தினையும் உணர்ந்த ஆன்யோர்கள் ஒவ்வொரு பூதத்தின் பெயராலும் ஒரு திருத்தலத்தைத் தோற்றுவித்தனர். அவ்வகையில் அக்கினித்தலமாகத் திருவண்ணாமலை விளங்குகின்றது

## முக்தித்தலம் :

முக்தி அளிக்கும் தலங்களில் திருவண்ணாமலை முதன்மையாகத் திகழ்கின்றது. திருவாரூரில் பிறந்தால்தான் முக்தி. காசியில் இறந்தால்தான் முக்தி. தில்லையைக் கண்டால்தான் முக்தி. அண்ணாமலையை நினைத்தாலே முக்திகிட்டும் என்பது ஆன்றோர் நம்பிக்கை.

## கோவில் சிறப்பு :

தமிழ்நாட்டிலுள்ள பெரிய கோவில்களில் திருவண்ணாமலைக் கோவிலும் ஒன்று. இருபத்து நான்கு ஏக்கர் பரப்புடைய நிலத்தில் நாற்புறமும் மதில்களோடும் நான்கு பெரிய உயரமான கோபுரங்களுடனும் கோவில் திகழ்கின்றது.

கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவன் அருணாசலேசுவரர். இறைவி உண்ணாமுலையம்மை. தலவிருட்சம் மகிழமரம். திருக்கோவிலின் அகத்தும் புறத்தும் மலைப் பகுதியிலுமாக சுமார் 360 தீர்த்தங்கள் உண்டு, சிவகங்கை சு பிரமதீர்த்தம், அக்கினித்தீர்த்தம், இந்திர தீர்த்தம் முதலானவை மிகச்சிறந்தனவாகும்.

கோவிலின் நாற்புறங்களிலுமுள்ள நுழைவாயில்களில் விளங்கும் நான்கு பெரிய கோபுரங்களைத் தவிர ஐந்து நடுத்தரக் கோபுரங்களையும் ஆயிரக்கால் மண்டபம் நூற்றுக்கால் மண்டபம் எனப் பல மண்டபங்களையும் கொண்டு கோவில் விளங்குகின்றது.

கங்கை கொண்ட இராஜேந்திரன் (கி·பி·1028) காலத்துக்கு முன்பே திருக்கோவில் கற்றளியாக இருந்தது என்பதைக் கல்வெட்டால் அறியமுடிகின்றது. கிருட்டிண தேவராயர் கி·பி·1516-இல் ஆயிரக்கால் மண்டபத்தையும் எதிரிலுள்ள திருக்குளத்தையும் பதினொரு

நிலைக் கோபுரத்தையும் வேறுபல திருப்பணிகளையும் செய்தமையைக் கல்வெட்டால் அறியலாம்.

கிழக்குப் பக்கத்திலுள்ள பெரிய கோபுரம் வல்லாள மன்னன் எடுப்பித்தது' இதன் வடகிழக்கு மூலையில் சக்தி விலாச முள்ளது. மேற்கு நோக்கி உடன்சென்றால் கிளிக் கோபுரம் விளங்குகின்றது. கோவில்மரத்துக்கு மேற்கே கல்யாண மண்டபம் இருக்கின்றது.

## சுற்றுக்கோவில்கள்

திருவண்ணாமலையில் திருவண்ணாமலைக்கோவில் ஆட்சிக்கு உட்பட்டு மூன்று கோவில்கள் இருக்கின்றன' அவற்றுள் ஒன்று அணி அண்ணாமலைக்கோவில். இக் கோவில் திருவண்ணாமலையார் கோவிலுக்கு முந்தியது. ஆதி அருணாசலம் எனப் போற்றப் பெறுகின்றது. இக் கோவில் திருவண்ணாமலை நகருக்கு வடமேற்கில் 7கி'மீ. தொலைவில் இருக்கின்றது.

கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவன் அணி அண்ணாமலையார்' இறைவி உண்ணாமுலையம்மை. மணி வாசகருக்கு ஒருகோவில் தனியாக இருக்கின்றது. அவர் இக்கோவிலில்தான் திருவம்பாவை அருளினார். கார்த்திகைத் தீபத்திருநாளில் திருவண்ணாமலைக் கோவிலில் நடைபெறும் விழாக்கள் போன்று இங்கும் நடைபெறுகின்றன. நகரத்தார் பல திருப்பணிகள் செய்து கோவிலை அழகுபடுத்தியுள்ளனர்.

## சஞ்சீவிராயர்கோவில் :

திருவண்ணாமலைக் கோவிலுக்குக் கிழக்கே அரை கி.மீ. தொலைவில் ஐயங்குளம் என்னுமிடத்தில் இக்கோ வில் இருக்கின்றது. இறைவன் சஞ்சீவிராயர். உற்சவரும் சஞ்சீவிராயரே. தீர்த்தம் இந்திர தீர்த்தம்.

## துர்க்கை அம்மன் கோவில் :

திருவண்ணாமலைக் கோவிலுக்கு அருகிலேயே இக்கோவில் இருக்கின்றது. இறைவன் பாபநாச ஈசுவரர் இறைவி அன்னபூரணி. அன்னை துர்க்காம்பாள் ஆற்றலின் திருவுருவமாக விளங்கி அருள்பாலிக்கின்றாள்.

இக்கோவிலில் நவராத்திரி விழா சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. கார்த்திகைத் திங்களில் இங்கு மூன்று நாட்கள் முறையே துர்க்கைக்கும் பிடாரிக்கும் விநாயகருக்கும் விழா நடைபெற்ற பிறகே திருவண்ணாமலைக் கோவிலில் கார்த்திகை விழா தொடங்கப் பெறுகின்றது.

## திருவிழாக்கள் :

திருவண்ணாமலைத் திருக்கோவிலில் ஆண்டு முழுவதும் விழாக்கள் நடந்தவண்ணமாகவே இருக்கின்றன ஒவ்வொரு திங்களும் அமாவாசை கார்த்திகை, பிரதோஷம், சுக்கிரவாரம், சோமவாரம் எனப் பஞ்சப் பருவ விழாக்கள் நடைபெறுகின்றன.

சித்திரைத் திங்களில் பத்து நாட்கள் சித்திரை விழா வைகாசியில் விசாகத் திருவிழா, ஆனியில் தட்சிணாயனம் பத்து நாள் விழா, ஆடியில் ஆடிப் பூரம் பராசக்தி விழா பத்து நாட்கள், பத்தாம்நாளில் வளைகாப்பு, தீமிதித்தல், ஆடி இறுதியில் அருணகிரிநாதர் விழா, ஆவணியில் மூல விழா. புரட்டாசியில் நவராத்திரி விழா பத்து நாட்கள், ஐப்பசியில் கந்தர்சஷ்டி விழா ஆறு நாட்கள், கார்த்திகையில் தீபதரிசனப்பெரு விழா பதினான்குநாட்கள், மார்கழியில் உத்திராயணத் திருவிழா பத்து நாட்கள், திருவாதிரைத் திருவிழா, தைத்திங்களில் திருவூடல் விழா, மாசித் திங்களில் வல்லாள மகராஜா திருவிழா, மகாசிவராத்திரி விழா, பங்குனியில் பங்குனி உத்திர விழா ஆறுநாட்கள்

எனத்திருவண்ணாமலைக் கோவிலில் ஆண்டு முழுவதும் விழாக்கள் நடந்த வண்ணமாகவே இருந்து வருகின்றன.

## இலக்கியங்கள் :

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் மாணிக்கவாசகர், மறைஞான சம்பந்தர், ஈசான்ய ஞான தேசிகர், விருப்பாட்சித்தேவர், வடலூார் வள்ளலார் அருட்கவி அருணகிரிநாதர், கணபதி சாஸ்திரிகள், சேஷாத்திரி சுவாமிகள் இரமண மகரிஷி. சண்முகயோகினி பாணிபத்திரர், பத்திராசல சுவாமிகள், ஈசுவர சுவாமிகள் யாழ்ப்பாணம் ஞானப்பிரகாசர், யோகிராம் சூரத்குமார் முதலான ஆண்டோர்கள் இத்தலத்தை வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். இவர்களில் பலர் இத்தலம் பற்றிச் சிறப்பான பாடல்களைப் பாடியுள்ளனர்.

அருணகிரிபுராணம், அருணாசலப்புராணம் திருவருணை கலம்பகம் திருவருணை அந்தாதி, அருணகிரி அந்தாதி, திருவண்ணாமலைக் கோவை, சோணசைல மாலை, உண்ணாமுலையம்மன் பதிகம், உண்ணாமுலையம்மன் சதகம், அருணாசல சதகம், அருணாசலேசர் விருத்தம், அருணாசல அட்சர மாலை, கார்த்திகைத் தீப வெண்பா, அண்ணாமலை நான்மணி மாலை அருணாசல நவமணி மாலை, முதலான தமிழ் இலக்கியங்களும் கேனோபநிஷத், அருணாசல தோத்திரங்கள், அருணாசலாஷ்டகம் முதலான வடமொழி இலக்கியங்களும் இத்தலத்தைக் கருவாகக் கொண்டு எழுந்தவையாகும்.

## பவழக்குன்று மடம் :

திருவண்ணாமலைக்குக் கிழக்குப் பக்கத்தில் பவழக் குன்று இருக்கின்றது. அம்மை அப்பனின் இடப்பாகத்தைப் பெறும் பொருட்டு அருந்தவம் புரிந்ததபோவனமும் கௌத

மமுனிமர் திருவண்ணாமலையாரை நினைந்து கடுந்தவம் புரிந்த பர்ணசாலையும் இங்குதான் இருந்தன. துறவிகளும் சித்தர்களும் தவம் புரிந்து ஞானம் பெற்ற பெருமையு டையது இக்குன்று.

இம்மடத்தைத் தோற்று வித்தவர் அழகானந்த ஞானதேசிகர். குன்றின்மீது எழுந்தருளியிருக்கும் இறைவன் பவளகிரீசுவரர். இறைவி முத்தாம்பிகை. உற்சவமூர்த்தி சுப்பிரமணியன். வள்ளி, தெய்வானையுடன் ஆறுமுகம் சந்நிதியும் விளங்குகின்றது. இக்குன்றிலிருந்து நோக்கினால் திருவண்ணாமலைக் கோவிலும் நகரும் மிக அழகாகத் தோன்றும்.

உண்ணாமுலை உமையாளொடும்
உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான்மலை
திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள்
மழலைம் முழவதிரும்
அண்ணாமலை தொழுவார் வினை
வழுவா வண்ணம் அறுமே

— திருஞானசம்பந்தர்

விண்ணாளும் தேவர்க்கும்
மேலான வேதியனை
மண்ணாளும் மன்னவர்க்கும்
மாண்பாகி நின்றானை
தண்ணார் தமிழ் அளிக்கும்
தண்பாண்டி நாட்டானை
பெண்ணாளும் பாகனைப்
பேணு பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி

நாயேனை ஆட்கொண்ட
அண்ணா மலையானைப்
பாடுதுங்காண் அம்மானாய்

— மாணிக்கவாசகர்

தேடுவார் தேடும் செல்வமே! சிவமே
திரு அருணாபுரித் தேவே
ஏடுவார் இதழிக் கண்ணி எங்கோவே
எந்தையே எம் பெருமானே!
பாடுவார்க்கு அளிக்கும் பரம்பரப் பொருளே!
பாவியேன் பொய்யெலாம் பொறுத்து
நாடுவார் புகழும் நின்திருக் கோயில்
நண்ணுமா எனக்குஇவண் அருளே

— இராமலிங்க சுவாமிகள்

திருவண்ணாமலையைப் பற்றிய நாட்டுப் புறப் பாடல்.

கார்த்திகைத் தீபம்
அண்ணாமலைக்கு
எண்ணா விளக்கு
துளசி மணிமாலை
தொடுத்துநான் வைத்தேன்!
ஒருநாளும் அறியேன்
திருவண்ணாமலையை
மறுநாளும் அறியேன்
மண்டபப் படியை!

## பழமொழிகள் :

திருவண்ணாமலையின் சிறப்பினை விளக்குமுகமாகப் பழமொழிகள் பல தோன்றியுள்ளன.

விஷ்ணுவைப் பெரிதென்பர் சீரங்கத்தில்!
சிவனைப் பெரிதென்பர் அருணாசலத்தில்!
அருணாம்பரமே கருணாம்பரம்!
சோணாசலத்தில் சிறந்த தலமுமில்லை!
சோமவாரத்தில் சிறந்த விரதமுமில்லை!
அண்ணாமலையாரின் அருள் உண்டானால்
மன்னார்சாமியைக் கேட்பானேன்!

# 113. திருவரங்கம்

சோழநாட்டிலுள்ள பாடல் பெற்ற வைணவத்திருப் பதிகளில் ஒன்று திருவரங்கம். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருச்சிராப்பள்ளி நகரிலிருந்து 4 கி. மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

ஆற்றின் நடுவே அமைந்த இடைக்குறை 'துருத்தி' எனப் பெயர் பெறும். வடமொழியில் இதனை 'ரங்கம்' என்பர். இது சிறந்த வைணவத்தலம். இத்தலம் காவிரி ஆற்றுக்கும் கொள்ளிடத்திற்கும் இடையில் இருப்பதால் அரங்கம் எனப்பெயர் பெற்றது. பாடல் பெற்ற பதி. ஆதலால் திருவரங்கம் எனப் பெயர் வழங்குகின்றது.

இத்தலத்தில் பெரிய வைணவக் கோவில் இருக்கின்றது. கோவிலில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் அரங்கநாதர். எம்பெருமான் திருநாமத்தால் இத்தலம் திருவரங்கம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

இத்தலத்திற்கு அரங்கம், கோயில், போகமண்டபம் பூலோக வைகுண்டம் எனப் பல பெயர்கள் உண்டு

கல்வெட்டில் இத்தலம் 'வீங்குநீர்த் துருத்தி' என்று குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அரங்கநாதரை அரங்கன், அழகிய மணவாளன், பெரிய பெருமாள் எனப் போற்றுவர். தாயார் திருவரங்க நாச்சியார். தீர்த்தம் காவிரி, கொள்ளிட ஆறு. தல விருட்சம் புன்னை.

இப்பதியிலுள்ள கோவில் மிகப் பெரியது. ஏழு திருச் சுற்றுகள் இருக்கின்றன. திருமதில்களின் மொத்த நீளம் 32, 154 அடி. அதாவது சுமார் ஏழரை கி. மீ. மொத்தச் சுற்றுக்களின் உள்சதுர அமைப்பு நூற்று ஐம்பத்தரை ஏக்கர். மொத்தம் இருபத்தியொரு கோபுரங்கள் உள்ளன அவற்றுள் கிழக்குப் பக்கத்திலுள்ள வெள்ளைக் கோபுரம் உன்னதமானது. 1565-இல் விஜயநகரப் பேரரசு வலிமை குன்றியதால் திருப்பணி முற்றுப் பெறவில்லை. அகோபில மடத்தலைவர் அழகிய சிங்கர் ஜீயர் சுவாமிகளின் பெரு முயற்சியால்கோபுரம் இன்று 236 அடி உயரத்தில் வான ளாவ உயர்ந்து நிமிர்ந்து நிற்கின்றது. தமிழ்நாட்டிலுள்ள கோவில் கோபுரங்களில் இதுவே மிக உயரமானதாகும்.

## தலம் பற்றிய பாசுரங்கள் :

பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார். திரு மழிசையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப் பாணாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கை யாழ்வார் பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் இத்திருப்பதியைப் போற்றி 247 பாசுரங்கள் பாடியுள்ளனர்.

ஆமையாய்க் கங்கையாய் ஆழ்கடலாய்
அவனியாய் அருவ ரைகளாய்

நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த்
தக்கணையாய்த் தானு மானான்
சேமமுடை நாரதனார் சென்று சென்று
துதித்திறைஞ்சக் கிடந்தான் கோயில்
பூமருவாய் புள்ளினங்கள் புள்ளரையன்
புகழ்குழறும் புனல ரங்கமே

— பெரியாழ்வார்

எழிலுடைய அம்மனைமீர்
என்னரங்கத் தின்னமுதர்
குழலழகர் வாயழகர்
கண்ணழகர் கொப்பூழில்
எழுகமலப் பூவழகர்
எம்மானார் என்னுடைய
கழல் வளையைத் தாமும்
கழல்வளையே யாக்கினரே

— ஆண்டாள்

இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி யணிபணம் ஆயிரங்க ளார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அனந்த னென்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை யணையை மேவி
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டு என்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே

— குலசேகராழ்வார்

ஆறு இரண்டும் காவேரி
அதன் நடுவே சீரங்கம்!

என்பது இத்திருப்பதி பற்றிய நாட்டுப்புறப் பாடலடிகள்!

# 114 திருவலஞ்சுழி

பாடல்பெற்ற சோழநாட்டுத் திருத்தலங்களில் ஒன்று திருவலஞ்சிவி. இது சிவத்தலமாகும். தஞ்சாவூர் மாவட்டத்தில் சுவாமிமலை இரயில் நிலையத்திற்கு அருகில் இத்தலம் இருக்கின்றது. சுவாமி மலைக்குச் செல்வோர் இப்பிள்ளை யாரை வழிபட்ட பிறகு செல்ல வேண்டும் என்பது ஐதிகம்

## தல வரலாறு :

பாதாளம் சென்ற காவிரியாறு ஏரண்ட முனிவர் தம்மைப் பலி கொடுத்தமையால் வலஞ்சுழித்து எழுந்தது என்பர். இவ்வாறு காவிரியாறு இப்பகுதியை வலமாகச் சுழித்துச் சென்ற காரணத்தால் அப்பகுதியில் எழுந்த ஊர் வலஞ்சுழி ஆயிற்று பாடல்பெற்ற தலமாதலால் திருவலஞ்சுழி எனப் பெயர் வழங்குகின்றது. அம்முனிவர் திருவுருவமும் வலஞ்சுழிநாதர் என்னும் சிவக்கொழுந்தும் கோவிலில் விளங்குகின்றன.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் கபர்த்தீசர் இறைவி பெரியநாயகி. இத்தலம் பிள்ளையாரால் பெயர் பெற்ற தலம். இங்கு எழுந்தருளியுள்ள பிள்ளையார் வெள்ளைப் பிள்ளையார் எனப் போற்றப் பெறுகின்றார். சுவேத விநாயாகர், என்றும் இவரைப் போற்றுவர். இவ்விநாயகர் திருவுருவம் சுமார் 9 அங்குல உயரத்தில் கடல் நுரையினால் உருவாக்கப் பெற்றுள்ளது.

தேவர்கள் பாற்கடலைக் கடையும்பொழுது விநாயகரை வணங்காமலேயே செயல் மேற்கொண்டனர். அதனால் நஞ்சுதோன்றியது. சிவபெருமான் உலகத்தைக் காப்பதற்காக நஞ்சை உண்டார். பின்னர் மகாவிஷ்ணுவின் கட்டளைப் படி தேவர்கள் கடல்நுரையினால் விநாயகரின் உருவம் அமைத்து வழிபடவே அமுதம் தோன்றியது.

வெள்ளைப் பிள்ளையாரை இந்திரன் இத்தலத்தில் வழிபட்டு வந்தான். அவன் தீர்த்தயாத்திரை மேற்கொண்டபோது இப்பிள்ளையார்தான் இத்தலத்திலேயே இருக்க விரும்புவதாகவும் ஆண்டுதோறும் விநாயகர் சதுர்த்தி அன்று வந்து வழிபட்டுப் போகுமாறு கூறியதாகவும் அதன் படியே இந்திரன் வந்து வழிபடுவதாகவும் மக்கள் நம்பி வருகின்றனர்.

இதனை உணர்த்தும் வகையில் இத்தலத்தில் விநாயகரின் உற்சவ மூர்த்திக்கும் அருகில் மகாவிஷ்ணுவும் இந்திரனும் இருக்கின்றனர். வெள்ளைப் பிள்ளையாரை இத்தலத்தில் அன்றி வேறெங்கும் காணமுடியாது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்தைப் பாடியுள்ளனர்.

வீடு ஞானமும் வேண்டுதி
ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் ஆவதும்
எந்தைவ லஞ்சுழி
நாடிஞானசம் பந்தன
செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம்வல் லாரடி
சேர்வது ஞானமே

— திருஞானசம்பந்தர்

இளைய காலம் எம் மானை அடைகிலாத்
துளையி லாச்செவித் தொண்டர்காள், உம்முடல்

வரையுங் காலம் வலஞ்சுழி யீசனைக்
களைக ணாகக் கருதிநீர் உய்ம்மினே

— திருநாவுக்கரசர்

# 115 திருவல்லிக்கேணி

பாடல்பெற்ற வைணவத்திருப்பதி திருவல்லிக்கேணி இத்திருப்பதி தொண்டை நாட்டைச் சார்ந்தது.

## பதி வரலாறு :

கேணி என்பது குளத்தைக் குறிக்கின்றது. அல்லிக் கொடிகள் படர்ந்த குளமாதலால் அல்லிக்கேணி ஆயிற்று பாடல்பெற்ற பதியாதலால் திருவல்லிக்கேணி என வழங்கி வருகின்றது.

பண்டைக்கால வழக்குப்படி கண்ணபிரான் குடும்ப சமேதராய்க் கோவில் கொண்டுள்ள பதிகள் இரண்டு. அவற்றில் ஒன்று திருவல்லிக்கேணி. மற்றொன்று திருத் தங்கல். இவற்றில் திருவல்லிக்கேணியே சிறப்புடையது என்பர்.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் பார்த்தசாரதி. இவரை வேங்கடகிருஷ்ணன் என்றும் போற்றுவர். தாயார் உருக்குமணிப் பிராட்டியார். எம்பெருமான் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிச் சேவை சாதிக்கின்றார். எம்பெருமான் இங்கு வியாசரால் பிரதிட்டை செய்யப் பெற்றதாகக் கூறுவர்.

தீர்த்தம் இந்திர தீர்த்தம் சோமதீர்த்தம். மீனதீர்த்தம், அக்கினித் தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம் என்னும் ஐந்து தீர்த்தங்களும் சூழப்பெற்ற கைவரணி என்னும் சரசு.

இக்கோவிலில் மந்நாதன், அழகிய சிங்கா, சக்கரவர்த்தித்திருமகன், தேவப் பெருமாள் எனத் திருமாலின் வேறுபல மூர்த்திகளுக்கும் சந்நிதிகள் விளங்குகின்றன. பார்த்தசாரதி கோவிலின் முன்னால் அழகிய படித்துறைகளுடன் கூடிய குளம் ஒன்று உள்ளது. கோவிலில் அழகிய சிற்பங்களும் சிலைகளும் இருக்கின்றன. கோவிலுக்குள் உருக்குமணி, பலராமன், சாத்தகி ஆகியவர்களுடன் கிருஷ்ணன் வீற்றிருப்பதைக் காட்டும் சிற்பம் குறிப்பிடத்தக்கது.

இக்கோவில் பல்லவர் ஆட்சிக்காலத்தில் கட்டப்பெற்றதாகவும் சோழபாண்டியர்களால் பின்னர் விரிவாக்கப் பெற்றதாகவும் கூறுவர் பிருகு, அத்திரி மரீசி, மார்க்கண்டேயர் சுமதி, சப்தரோமர், ஜாவிஎன்னும் ஏழு முனிவர்களும் தவம் செய்து பேறு பெற்ற பெருமையுடையது.

இக்கோவில் குளமாகிய அல்லிக்கேணியில் நடுமண்டபம்மிக அழகாக விளங்குகின்றது. அனுமான் சஞ்சீவி மலையைச் சுமந்து கொண்டு விண்வழியாக இலங்கைக்குச் சென்றபொழுது அதிலிருந்து ஒரு சிறுபகுதி இக்குளத்தில் விழுந்திருப்பதாகவும் அதனால் இக்குளம் புனிதமானது என்றும் மக்கள் நம்புவர்,

பார்த்தசாரதி கோவிலில் எம்பெருமானுக்குத் திங்கள் தோறும் ஐம்பருவவிழாக்கள் நடைபெறுகின்றன. சித்திரைத் திங்களில் பெருவிழா நடைபெறுகின்றது. திருமங்கையாழ்வார். பேயாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகியோர் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர்,

விற்பெரு விழவும் கஞ்சனும் மல்லும்
வேழமும் பாகனும் வீழ
செற்றவன் தன்னைப் புரமெரி செய்த
சிவனுறு துயர்களை தேவை
பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு
பார்த்தன் தன் தேர்முன் நின்றானை
சிற்றவை பணியால் முடிதுறந்தானைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே

— திருமங்கையாழ்வார்

# 116. திருவழுந்தூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதியாகவும் சிவத்தலமாகவும் திருவழுந்தூர் விளங்குகின்றது. தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கும் மாயவரத்திற்கும் இடையே இத்தலம் விளங்குகின்றது. குற்றாலம் இரயில் நிலையத்திலிருந்து தென் கிழக்கே 3 கி மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது.

## தல வரலாறு :

தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் ஒருமுறை வழக்கு ஏற்பட்டது. அவ்வழக்கில் தீர்ப்பு வழங்கிய உபரிசரவசு என்னும் அரசன் நடுநிலை தவறித் தேவர்களுக்குச் சார்பாகத் தீர்ப்பளித்து விட்டான். இதனால் சினமடைந்த முனிவர்கள் வானவீதியில் உருண்டோடும் தன்மையுடைய அவன்தேர் நிலத்தில் அழுந்தட்டும் எனச் சாபமிட்டனர். அவர்கள் சாபத்தின்படி தேர் இவ்விடத்தில் அழுந்தியதால் இப்பகுதியில் அமைந்த தலம் தேரழுந்தூர் எனப் பெயர் பெற்று நாளடைவில் திருவழுந்தூர் என வழங்கலாயிற்று.

## சிறந்த சிவத்தலம் :

திருவழுந்தூர் சிறந்த பாடல்பெற்ற சிவத்தலம். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வேதபுரீசர் இறைவி சவுந்தரராம்பிகை தீர்த்தம் வேததீர்த்தம் வேதங்கள் அகத்தியர், விண்ணவர், திக்குப்பாலகர் முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். திருஞான சம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

தொழுமா றுவல்லார் துயர்தீ ரநினைந்
தெழுமா றுவல்லார் இசைபா டவிம்மி
அழுமா றுவல்லார் அழுந்தை மறையோர்
வழிபா டுசெய்மா மடமன் னினையே

— திருஞானசம்பந்தர்

## சிறந்த வைணவத்தலம் :

எம்பெருமான் திருக்கோவில் இவ்வூரின் மேல்பால் விளங்குகின்றது. எம்பெருமான் திருநாமம் ஆமருவியப்பன். கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார் தாயார் செங்கமல வல்லி. தீர்த்தம் தரிசன புஷ்கரிணி, உபரிசிரவசு, தருமதேவதை முதலானோர் இத்தலத்து எம்பெருமானை வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். காவிரியாறு பெண்வடிவில் வந்து வழிபட்டு அருள் பெற்றதாகக் கூறுவர். திருமங்கையாழ்வார் இத்திருப்பதியை மங்களா சாசனம் செய்துள்ளார்.

மாலைப் புகுந்து மலரணைமேல்
வைகி யடியேன் மனம்புகுந்து என்
நீலக் கண்கள் பனிமல்க
நின்றார் நின்ற ஊர்போலும்
வேலைக் கடல் போல் நெடுவீதி
விண்தோய் சுதைவெண் மணிமாடத்து

ஆலைப் புகையால் அழல்கதிரை
மறைக்கும் வீதி அழுந்தூரே

என்பது திருமங்கையாழ்வார் பாசுரங்களுள் ஒன்று.

## கம்பர் அவதரித்ததலம் :

இத்திருப்பதியில் தான் கம்பர் அவதரித்தார். கம்ப ராமாயணம் சிறப்புப் பாயிரத்தில் (தனியன்)சோழநாட்டுத் திருவழுந்தூர் உவச்சன். கம்பன் என வருவதும் தமிழ் நாவலர் சரிதையில் "நீ எந்த ஊர் என்று சோழன் கேட்டதற்குத் திருவழுந்தூர்த் தாசிபாடியது" என்னும் தலைப்பில் "கம்பன்... பிறந்தவூர்... அழுந்தூர்" என வருவதும் இதனைத் தெளிவுப் படுத்துகின்றது. மேலும் இவ்வூரிலுள்ள எம்பெருமான் கோவிலில்கம்பருக்குத் தனியே சிறுகோவில் உள்ளது. திருவழுந்தூருக்குத் தென் மேற்குக் கோடியில் 'கம்பன்மேடு' என்று ஓரிடம் இருக்கின்றது. அவ்விடத்தில் 'கம்பன்மேடு' எனப்பெயர்ப் பலகை வைக்கப் பெற்றிருக்கின்றது. அது மட்டுமின்றி இரயில் நிலையத்திலும் தேரழுந்தூர்-கம்பன்மேட்டுக்கு இங்கே இறங்குங்கள் என்னும் அறிவிப்பும் உள்ளது.

செயங்கொண்ட சோழவள நாட்டுத் திருவழுந்தூர் எனக் கல்வெட்டில் இவ்வூர்ப்பெயர் குறிக்கப் பெற்றுள்ளது.

# 117. திருவள்ளூர்

தொண்டை நாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதி திருவள்ளூர். செங்கல்பட்டு மாவட்டத்தில்

சென்னை மாநகரிலிருந்து 40 கி. மீ. தொலைவில் இத் திருப்பதி விளங்குகின்றது.

## பதி வரலாறு :

''உள் என்னும் சொல் ஊர்ப்பெயர்களில் மிக அரிதாக இடம் பெற்றுள்ளது, எம்பெருமான் கிழ அந்தணர் வேடம் பூண்டு காலி கோத்ர முனிவரிடம் அமுது செய் தருளினர். உண்ட களைப்புத் தொண்டனுக்கே இருக்கும் பொழுது பகவானுக்கு இல்லாமல் இருக்குமா? எம்பெருமான் முனிவரிடம் களைப்புத் தீரப் படுத்துறங்க வேண்டும் எவ்வுள்? என்றார். இப் பகுதியில் இந் நிகழ்ச்சி நடந்ததால் இவ்வூர் எவ்வுள்-எவ்வுள்ளூர் எனப் பெயர் பெற்றது. பாடல் பெற்ற பதியாதலால் திருஎவ்வுள்ளூர் ஆகி நாளடைவில் திருவுள்ளூர் ஆயிற்று,

## தல மகிமைகள் :

எம்பெருமான் வீரராகவப் பெருமாள் முனிவர்காலி கோத்ரர் வேண்டிய படியே எம்பெருமான் கிழக்கு நோக்கிய, சயனித்த திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் கனகவல்லி. தீர்த்தம் கிருத்தாப நாச தீர்த்தம் திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகியோரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற பெருமை யுடையது இத்திருப்பதி.

பால னாகி ஞாலமேழு
முண்டுபண் டாளலைமேல்
கால நாளும் பள்ளி கொள்ளும்
தாமரைக் கண்ணன் எண்ணிப்
நீலம் ஆர்வண் டுண்டுவாழும்
நெய்தலந் தண்சழனி
ஏலம் நாறும் பைம்புறவின்

எவ்வுள் கிடந்தானே

— திருமங்கையாழ்வார்

# 118. திருவாடானை

பாண்டி நாட்டிலுள்ள பாடல் பெற்ற சிவத்தலம் திருவாடானை, இராமநாதபுரம் மாவட்டத்தில் பரமக்குடி இரயில் நிலையத்திலிருந்து 40 கி. மீ. தொலைவிலும் அறந்தாங்கியிலிருந்து 38 கி மீ. தொலைவிலும் இவ்வூர் இருக்கின்றது. தமிழ் நாட்டிலுள்ள பெரிய ஏரிகளில் ஒன்றான இராஜசிங்க மங்கலம் கண்மாய் திருவாடானை வட்டத்தில் இருக்கின்றது.

## தல வரலாறு :

வருணனின் மகன் துருவாச முனிவரை வணங்கவில்லை. அதனால் அவனுக்கு ஆட்டுத்தலையும் ஆனை உடலும் ஆகுக எனச்சபித்தார். அவன் அவ்வுருவுடன் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றமையால் வாடானை எனப் பெயர் பெற்றது, பாடல் பெற்ற தலமாதலால் திருவாடானை எனப் போற்றப் பெறுகின்றது. வடமொழியில் இவ்வூரை அஜகஜபுரம் என்பர் அஜம்-ஆடு கஜம்-யானை எனப் பொருள்படும்,

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் ஆடானைநாதர் இறைவனை அஜகஜேஸ்வரர், ஆதிரத்னேஸ்வரர்

என்றும் போற்றுவர், இறைவி சினேகவல்லி. அம்பாயிர வல்லி என்றும் போற்றுவர். தலவிருட்சம் வில்வம். தீர்த்தம் சூரிய தீர்த்தம்.

நீலமணியால் சிவலிங்கம் அமைத்து ஞாயிறு வழிபட்டுப் பேறுபெற்ற பெருமையுடையது இத்தலம். இத்தலத்தைப் போற்றித் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

மங்கை கூறினன் மான்மறியுடை
அங்கையானுறை யாடானை
தங்கை யாற்றொழு தேத்தவல்லவர்
மங்கு நோய் பிணி மாயுமே

என்பது திருஞானசம்பந்தர் இத்தலம் பற்றிப் பாடிய பாமாலைகளுள் ஒன்று.

# 119. திருவாட்டாறு

திருவாட்டாறு பாடல்பெற்ற வைணவத் திருத்தலம். கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவிலிலிருந்து 30 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் விளங்குகின்றது.

இப்பகுதியில் ஓடும் ஆறு வளைந்து வட்டமாக ஓடுவதால் இந்த ஆறு வட்டாறு எனப் பெயர் பெற்றது. முப்புறங்களிலும் ஆறுசூழ அமைந்த இப்பகுதியில் எழுந்த ஊரும் ஆற்றின் பெயரையே பெற்றது. பாடல்பெற்ற தலமாதலால் திருவட்டாறு என வழங்குகின்றது.

## தல மகிமைகள் :

மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றனுள் இஃது ஒன்று. இப்பகுதியில் கோவில்கொண்டுள்ள எம்பெருமான் ஆதிகேசவப் பெருமாள். பாம்பணையில் கிடந்த திருக்கோலத்தில் சேவைசாதிக்கின்றார். தாயார் மரகதவல்லி நாச்சியார். தீர்த்தம்கடல் வாய்தீர்த்தம், இராமதீர்த்தம். இத்திருப்பதியில் ஐப்பசி, பங்குனித்திங்கள்களில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

அருவிக்கரையில் கண்ணன் கோவில் இருக்கின்றது. புறநானூற்றில் 396-ஆம் பாடலில் மாங்குடி கிழாரால் பாடப்பெற்ற வாட்டாறு எழினியாதன் என்னும் வள்ளல் இவ்வூரைச் சேர்ந்தவர் நம்மாழ்வார் இத்திருப்பதியைப் போற்றிப் பாடியுள்ளார்.

வானேற வழிதந்த
　　வாட்டாற்றான் பணிவகையே
நானேறப் பெறுகின்றேன்
　　நரகத்தை நகு நெஞ்சே
தேனேறு மலர்த் துளவம்
　　திகழ் பாதன் செழும் பறவை
தானேறித் திரி வான
　　தாளிணையென் தலைமேலே

என்பது நம்மாழ்வார் பாசுரங்களுள் ஒன்று.

# 120. திருவாதவூர்

பாண்டி நாட்டுத் திருத்தலம் திருவாதவூர் மதுரை மாவட்டத்தில் மதுரைக்குக் கிழக்கே 16 கி. மீ. தொலை

வில் மதுரைமா நகரிலிருந்து மேலூர் செல்லும் சாலையில் இத்தலம் விளங்குகின்றது, இத்தலத்தில் ஒரு பெரிய ஏரி உள்ளது. அதுவே இத்தளத்தின் வளந்திற்கு அடிப்படைக் காரணம்.

வாயு இத்தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றதால் வாதவூர் எனப் பெயர்பெற்றது. வாதபுரி என்றும் இத் தலத்தை வழங்குவர். திருவாதூார் என்னும் பெயரும் இதற்குண்டு அக்காலத்தில் சமயவாதிகள் இவ்வூரில் வாதங்கள் புரிந்ததால் வாதுரர் என வழங்குகின்றது இது என்றும் கூறுவர்.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வாத புரீசர் இவரைத் திருமறைநாதர் என்றும் போற்றுவர் அம் பிகை வேதநாயகி. இவரை ஆரணவல்லி என்றும் போற் றுவர். அம்பிகையின் கோவில் இறைவன் கோவிலுக்கு வலப்புறத்தே இருக்கின்றது. தல விருட்சம் மகிழ், அக்கினி தீர்த்தம், பொற்றாமரை, கபில தீர்த்தம், விஷ்ணுதீர்த் தம் எனப் பல தீர்த்தங்கள் இருக்கின்றன.

மாணிக்கவாசகர் அவதரித்த சிறப்புடையது இத் தலம் கோவிலுக்குத் தெற்கே அரை கி, மீ. தொலைவில் மாணிக்க வாசகர் கோவில் இருக்கின்றது. கோவில் இருக் கும் இடத்தில்தான் அக்காலத்தில் மாணிக்கவாசகர் வாழ்ந்த வீடு இருந்தது என்றும் சில ஆண்டுகட்கு முன்பே கோவில் கட்டப் பெற்றது என்றும் அறியமுடிகின்றது.

ஆவணி மூலவிழாவில் கோவிலிலிருந்து மாணிக்க வாசகர் மதுரைக்கு எழுந்தருளி அங்கே நான்கு நாட்கள் திருக்காட்சி வழங்குகின்றார் மார்கழித் திங்களில் மாணிக்கவாசகர் கோவிலில் பத்துநாட்கள் திருவெம்பாவை விழா நடைபெறுகின்றது. கபிலர் தோன்றிய சிறப்புடை துய இத்தலம்!

நம்பிதிருவிளையாடல், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல், திருவாதவூரர் புராணம் முதலிய இலக்கியங்கள் இத்தலத்தின் சிறப்புகளைக் கூறுகின்றன.

# 121. திருவாப்பனூர்

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருவாப்பனூர். மதுரை மாவட்டத்தில் மதுரை இரயில் நிலையத்திற்கு வடக்கே ஒரு கி. மீ. தொலைவில் வைகையாற்றுக்கு வடக்கே இருக்கின்றது.

## தல வரலாறு :

சோழாந்தகன் என்னும் பாண்டிய மன்னன் இறைவன் மீது கொண்டிருந்த அன்பின் காரணமாக இறைவன் ஓர் ஆப்பினிடத்துத் தோன்றிக்காட்சி அளித்ததால் இப்பகுதியில் தோன்றிய கோவில் ஆப்புடையார் கோவில் ஆயிற்று. ஊர் ஆப்பனூர் ஆயிற்று. பாடல்பெற்ற தலமாதலால் திருவாப்பனூர் என வழங்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் தோன்றியுள்ள இறைவன் ஆப்பனூர் நாதர். இறைவி அம்பிகை. அருச்சகராகிய சிவமறையவர் பொருட்டு இறைவன் உலையிலிட்ட வையையாற்று மணலை அன்னம் ஆக்கி அருளியதால் இறைவன் அன்னவினோதன் என வழங்கப்பெறுகின்றார். அம்பிகை குரவங்கமழ்குழல் அம்மையார் என்றும் போற்றப்பெறுவர். தீர்த்தம் இடபத்தீர்த்தம்.

திருப்பூவணம் கந்தசாமிப் புலவர் இவ்வூர்ப்பற்றிய தலபுராணத்தைப் பாடியுள்ளார். திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

கணணன் கடிக்கமல மலர்மே லினிதுறையும்
அண்ணற் களப்பரிதாய் நின்றங் கடியார்மேல்
எண்ணில் வினைகளைவான் எழிலாப்ப னூரானைப்
பண்ணின் இசைபகர்வார் வினைபற் றறுப்பாரே

என்பது அவர்தம் தேவாரப்பாடலுள் ஒன்று. இப்பாடல் நாளும் ஓதி இன்புறத் தக்கது.

# 122. திருவாரூர்

சோழநாட்டுலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருவாரூர். தஞ்சாவூர் மாவட்டத்தில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. சோழமன்னர்களுடைய ஐந்து தலைநகர்களில் இத்தலமும் ஒன்று. சோழர் ஆட்சிக்காலத்தில் மிகவும் சிறப்புடன் விளங்கியது.

'ஆர்' என்பது ஆத்தி மரத்தைக் குறிக்கும். பண்டைக் காலத்தில் இப்பகுதியில் ஆத்திமரங்கள் நிலைத்திருந்ததால் இம்பகுதியில் எழுந்த ஊர் ஆரூர் ஆயிற்று. பாடல்பெற்ற தலமாதலால் திருவாரூர் ஆயிற்று.

திருமகள் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றதால் திருவாரூர் ஆயிற்று என்றும் கூறுவர்.

திரு என்பது செல்வம் என்று பொருள்படும். ஆர் தங்குதல் ஆகும். செல்வம் தங்கியுள்ள ஊர் ஆதலின்

திருவாரூர் ஆயிற்று. கல்வெட்டில் இவ்வூர் திருவாரூர் என்றே குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வன்மீக நாதர். இறைவி அல்லியங்கோதை. திருக்கோவில் பூங் கோவில் எனப் போற்றப் பெறுகின்றது. இக்கோவிலுக்கு மூலட்டானம் என்ற பெயரும் உண்டு. எல்லாக் கோவில் களிலும் இறைவன் எழுந்தருளியிருக்கும் கருப்பக்கிரகத்தை மூலட்டானம் எனப்போற்றுவர். ஆனால் சிதம்பரம், திருவாரூர் ஆகிய இரண்டு தலங்களிலுள்ள கருவறைகளைமட்டும் திருமூலட்டானம் எனப் போற்றும் அளவிற்குச் சிறப்புடையதாக விளங்கு கின்றன. சிதம்பரத்தில் இறைவன் நடராசராக அருள் பாலிக்கின்றார். திருவாரூரில் தியாகராஜராக அருட்காட்சி அளிக்கின்றார்.

ஐம்பூதத் திருத்தலங்களில் இத்தலம் நிலத்தின் சிறப்பினையும் நுட்பத்தினையும் விளக்கும் தலமாக விளங்குகின்றது. உலகு உருவ இறைக்கு நிலைக்களன்கள் ஆறனுள் இத்தலம் மூலாதாரமாய் விளங்குகின்றது.

## சப்த விடங்கத்தலம் :

திருவாரூர் திருத்தலம் சப்தவிடங்கத் தலங்களில் ஒன்று. விடங்கர் என்பது கைபுனையாது தானே தோன் றிய திருவுருவம். சோழமன்னர்களின் முன்னோனாகிய முசுகுந்த சக்கரவர்த்தி இந்திரனுக்குச் செய்த ஓர் உதவிக் குப் பதிலாகத் தியாகராஜவிடங்க மூர்த்திகள் ஏழிடங் களில் தோன்றியதாக வரலாறு. ஏழு இடங்களாவன திருவாரூர், நாகப்பட்டினம், திருநள்ளாறு, திருக்காறா யில், திருக்கோளிலி, திருவாய்மூர், வேதாரணியம் என்ப

பவை. ஒவ்வொரு தலத்திலும் இறைவனுடைய வெவ்வேறு வகையான நடன ரூபங்க்களை கண்டின்புறலாம்.

## கூத்தரசனைக் காப்பாற்றியவர் :

தில்லைக் கூத்தரசனைக் காப்பாற்றிய பெருமை திருவாரூர் தியாகராசனுக்கு உண்டு. கி. பி. 18. ஆம் நூற்றாண்டில் தில்லையில் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் போர் நடந்தபொழுது தில்லைநடராசர் திருவுருவம் திருவாரூருக்குக் கொண்டு வரப்பெற்று பாதுகாப்பாக வைக்கப் பெற்றிருந்தது.

## தம்பிரான் தோழர் :

காஞ்சிபுரத்தில் இடக்கண் பெற்ற சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூரில் வலக்கண் பெற்றார். சுந்தரரை இறைவன் இத்தலத்தில்தான் தோழராக ஆட்கொண்டார். அதனால் சுந்தரர் "தம்பிரான் தோழர்" ஆனார். சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் பரவையாருக்கும் திருமணம் நிகழ்ந்து அவர்கள் வாழ்ந்ததலம் திருவாரூர். பரவை, நாச்சியார் திருத்தோற்றமுற்ற திருவூரும் திருவாரூரே!

சுந்தரர் திருத்தொண்டத்தொகை பாடியருள வாயிலாக இருந்த 'தேவாசிரியன்' என்னும் ஆயிரக்கால் மண்டபம் இத்தலத்தில் தான் இருக்கின்றது. சுந்தரர் திருமுதுகுன்றத்துச் சிவபெருமானின் திருவாணைப்படி அவர் அளித்தருளிய பொற்கட்டியினை ஆங்குள்ள மணிமுத்தாற்றில் இட்டு திருவாரூரிலுள்ள கமலாலயத் திருக்குளத்தில் எடுத்ததாக வரலாறு.

இறைவன் சுந்தரர் பொருட்டுப் பரவையாரிடம் தூது சென்ற பெருமையுடையது இத்தலம். இறைவன் ஆணைப் படி சேரமான் பெருமாள் நாயனார் இத்தலத்

திற்கு வந்து சுந்தரருடன் நட்பு பூண்ட பெருமையும் உடையது. மாணிக்கவாசகர் இறைவனை வழிபட்டு ஞான சித்தி பெற்ற பெருமையுடையது இத்தலம்.

விறல் மிண்டநாயனார், நமிநந்தியடிகள், செருத்துறை நாயனார், தண்டியடிகள், கழற்சிங்கநாயனார், முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றனர்.

சங்கீத மும்மூர்த்திகளான முத்துசாமி தீட்சிதர், சாமாசாஸ்திரிகள், தியாகையர் அவதரித்த சிறப்புடையது திருவாரூர். தமிழ்ப்பேரறிஞர் திரு.வி. கல்யாணசுந்தரனார் தோன்றிய பெருமையும் உடையது திருவாரூர்.

## பழமொழி :

இக்கோவில் தேர் புகழ்பெற்றது. தேர் புறப்பா கண்கொள்ளாக் காட்சி. அதனால்தான்,

" திருவாரூர் தேரழகு "

என்னும் பழமொழி தோன்றியது.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகியோர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

தந்தைதாய் தன்னுடன் தோன்றினார்
புத்திரர் தாரம் என்னும்
பந்தநீங் காதவர்க் குய்ந்து போக்
கில்லெனப் பற்றி னாயே
வெந்த நீ றாடியார் ஆதியார்
சோதியார் வேத கீதர்
எந்தைஆ ரூர்தொழு துய்யலாம்
மையல்கொண் டஞ்சல் நெஞ்சே!

— திருஞானசம்பந்தர்

கற்றவர்கள் உண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
அற்றவர்கட் காரமுதம் ஆனாய் போற்றி
அல்லலறுத் தடியேனை ஆண்டாய் போற்றி
மற்றொருவர் ஒப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
செற்றார்தம் புரம்எரித்த சிவனே போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

— திருநாவுக்கரசர்

பொன்னும் மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழைஎ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மையன் என்றறி ஒண்ணா
எம்மா னையெளி வந்த பிரானை
அன்னம்வை கும்வ யற்பழ னத்தணி
ஆரு ரானை மறக்கலும் ஆமே !

— சுந்தரமூர்த்தி நாயனார்

# 123. திருவாலங்காடு

தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருவாலங்காடு. செங்கல்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூரிலிருந்து மேற்கே 18 கி. மீ. தொலைவில் திருத்தணி செல்லும் சாலையில் இத்தலம் அமைந்துள்ளது. சென்னை மாநகரிலிருந்து சுமார் 65 கி.மீ. தொலைவில் இருக்கின்றது. பழையனூருக்கு அருகில் அமைந்துள்ளது.

பண்டைக்காலத்தில் இப்பகுதி ஆலமரங்கள் நிறைந்த காடாக விளங்கினமையால்-பாடல்பெற்ற தலமாதலால் திருவாலங்காடு எனப் பெயர் பெற்றது. கல்வெட்டில் இத்தலத்தின் பெயர் ''மணவிற் கோட்டத்து மேல்மாலை பழையனூார் நாட்டுத் திருவாலங்காடு'' என்றும் ஜெயங் கொண்ட சோழ மண்டலத்து மேல்மாலையாகிய பழைய னூார் நாட்டுத் திருவாலங்காடு என்றும் குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் கோவில்கொண்டுள்ள இறைவன் ஊர்த்துவத்தாண்டவர். இவரைத் தேவசிங்கப் பெருமான் என்றும் போற்றுவர். இறைவி வண்டார் குழலியம்மை. தீர்த்தம் முத்தி தீர்த்தம். தல விருட்சம் பலா.

## இரத்தின சபை :

இறைவனுக்குரிய ஐவகை சபைகளில் ஒன்றான இரத்தின சபை இத்தலத்தில் விளங்குகின்றது. இத்தலத்தில் நடராசப் பெருமான் கால்தூக்கி ஆடிக்காளியை வென்றார் ''ஆடினார் காளிகாண ஆலங்காட்டடிகளாரே'' எனத் திருஞானசம்பந்தர் இறைவனைப் போற்றியுள்ளார். இறைவன் நடராசர் என்னும் இரத்தின சபாபதி என்றும் போற்றப் பெறுகின்றார். நடராசர் கோவில் விமானம் பொன்வேயப்பெற்ற சிறப்புடையது. திருவாலங் காட்டு ஊர்த்துவத் தாண்டவமூர்த்தி ஏனையத் தலங்களில் உள்ளது போலத் திருவடி செங்குத்தாக உடலைச் சேரத் தூக்கப் பெறவில்லை. திருமாலின் திரிவிக்கிரமமூர்த்தி போல முன்பக்கம் நீட்டிமுகத்திற்கு நேராகத் தூக்கப் பெற்றிருக்கின்றது. திருக்கோவிலுக்கு வட மேற்கில் காளி கோவில் இருக்கின்றது.

ஐப்பசிமாத முழு நிலாவில் திருவாலங்காட்டு நடராசப் பெருமானின் ஊர்த்துவ தாண்டவத்தை வழி பட்டால் நால்வகைப் பேறுகளும் கிட்டும்! திருவாதிரைத் தரிசனத்துக்கும் நடராசனின் கவினுறு படிமங்களுக்கும் சோழர் வரலாறு பற்றிய கல்வெட்டுக்களுக்கும் சிதம்பரத் தைப் போலத் திருவாலங்காடும் புகழ்பெற்றது.

முனிவர் முஞ்சி கேசருடன் கார்க்கோடகன் திருக் கூத்து கண்டு வழிபட்ட சிறப்புடையது இத்தலம்.

## காரைக்காலம்மையார் :

திருக்கயிலையின்கண் இறைவனால் 'அம்மையே' என்றழைக்குப் பெற்ற காரைக்காலம்மையார் திருக்கயி லைக்குத் தலையால் நடந்து சென்றது போது சிவபெருமான் திருவாணைப்படி திருவாலங்காட்டுக்குத் தலையால் நடந்து வந்து திருக்கூத்து கண்டு இன்புற்றார். பேரின் பக்காட்சி கண்ட அம்மையார் இறையருளை வியந்து திருப்பதிகங்கள் பாடிப் போற்றியுள்ளார்.

காரைக்காலம்மையார் தலையாலே நடந்துவந்து வழிபட்ட திருத்தலம் திருவாலங்காடு எனத் திருஞானசம் பந்தர் காலால் மிதிப்பதற்கு அஞ்சிப் புறத்தே இருந்து வழிபட்டார். பின்னர் இறைவன் அழைப்பின் பேரில் கோவிலுக்கு வந்து வழிபட்ட பெருமையுடையது. சுந்தர மூர்த்தி நாயனாரும் இத்தலத்தை மிதிப்பதற்கு அஞ்சி அண்மையில் நின்றே பாடினார். திருநாவுக்கரசரும் இத் தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

''பட்டடி நெட்டுகிர்ப் பாறுகாற்பேய்
பருந்தொடு கூகை பகண்டை ஆந்தை
குட்டி யிடமுட்டை கூகைபேய்கள்
குறுநரி சென்றணங் காடுகாட்டில்

பிட்ட டித்துப்புறங் காட்டில்இட்ட
 பிணத்தினைப் பேரப் புரட்டி ஆங்கே
அட்டமே பாயறின் றாடும் எங்கள்
 அப்பன் இடந்திரு ஆலங்காடே''

— காரைக்காலம்மையார்

ஒன்றா வுலகனைத்தும் ஆனார் தாமே
 ஊழிதோ றூழி உயர்ந்தார் தாமே
நின்றாகி எங்கும் நிமிந்தார் தாமே
 நீர்வளிதீ ஆகாசம் ஆனார் தாமே
கொன்றாடுங் கூற்றை உதைத்தார் தாமே
 கோலப் பழனை உடையார் தாமே
சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் தாமே
 திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே

—திருநாவுக்கரசர்

# 124. திருவான்மியூர்

தொண்டை நாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத் தலம் திருவான்மியூர். செங்கல்பட்டு மாவட்டத்தில் இத் தலம் இருக்கின்றது. சென்னை மாநகரிலுள்ள மயிலாப் பூருக்குத் தெற்கே 4 கி. மீ. தொலைவில் கடற்கரை ஓரத் தில் இத்தலம் அமைந்துள்ளது.

## தல வரலாறு :

இராமாயணத்தைப் பாடிமுடித்த வால்மீகி முனிவர்

தாமும் இராமபிரானைப் போலச் சிவபூசை செய்ய விரும்பினார். தன் விருப்பத்தை மார்க்கண்டேய மகரிஷியிடம் தெரிவித்தார். அவர் சிவபூசை செய்வதன் சிறப்பினையும் முறையினையும் வால்மீகிக்கு எடுத்துரைத்துத் தென்திசை வந்த வால்மீகி இப்பகுதியில் வன்னி மரத்தடியில் அமர்ந்து சிவபூஜை செய்து தவம் இயற்றியதால் இப்பகுதியிலமைந்த தலம் வான்மீகியூர் ஆயிற்று, பாடல் பெற்ற தலமாதலால் திருவான்மியூர் என வழங்குகின்றது,

கோவில் பிரகாரத்தில் வான்மீகர் உற்சவச்சிலை இருக்கின்றது. ஊரின் வடமேற்கில் வான்மீகர் கோவில் ஒன்று இருக்கின்றது. முழுமதிநாள் தோறும் திருக்கோவிலின் மலைக்கோபுரவாயிலில் வான்மீகருக்குச் சிவபெருமான் நடனக்காட்சி தரும்விழா நடைபெறுகின்றது. நடனம் கோவிலைச் சுற்றியும் மாடவீதிகளிலும் நடைபெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பால்வண்ணநாதர். இறைவி சுந்தரநாயகி. வானவர்கள் மருந்தால் இத்தலத்தில் சிவக்குறி அமைத்து வழிபட்டதால் இறைவன் மருந்தீசர் எனப் போற்றப்பெறுவர்.

இத்தலத்தில் 108 சிவலிங்கங்கள் ஒருங்கே அமைந்துள்ளன. மார்கழித் திங்கள் பௌர்ணமி அன்றும் பங்குனிப் பெருவிழாப் பந்தம்பறி விழாவின் முடிவிலும் தியாகராஜப் பெருமான் திருநடனம் ஆடுவார். அந்நடனம் 18 வகைப்படும். அந்நடனக்காட்சி கண்கொள்ளாக் காட்சி !

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் மற்றும் அருணகிரிநாதர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

விரையார் கொன்றையினாய்
விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழாய்
உமைநங்கையொர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ்
திருவான்மி யூருறையும்
அரையா உன்னையல்லால்
அடையாதென தாதரவே

— திருஞானசம்பந்தர்

''ஒட்டை மாடத்தில் ஒன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டந் தீர்த்திடும் வான்மியூர் ஈசனே''

—திருநாவுக்கரசர்

திகழ் பால மாகமுற மணிமாட மேடையுயர்
திருவான்மியூர் மருவு பெருமானே !

— அருணகிரிநாதர்

# 125. திருவிடை மருதூர்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம். திருவிடை மருதூர். தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்ப கோணத்திலிருந்து மாயூரம் செல்லும்சாலையில் 7 கி.மீ, தொலைவில் இத்தலம் இருக்கின்றது. இத்தலம் இராச ராசன் காலத்தில் மிகவும் சிறப்புற்றிருந்தது.

## தல வரலாறு :

பண்டைக்காலத்தில் இப்பகுதியில் மருதமரங்கள் நிறைந்திருந்தமையால்இப்பகுதியில்அமைந்ததலம் மருதூார் ஆயிற்று. தென்னாட்டில் சிவபெருமானுக்கு விருப்பமான மருதமரங்கள் நிறைந்த தலங்கள் மூன்று, ஒன்று கிருட்டிணையாற்றின் கரையிலுள்ள ஸ்ரீமல்லிகார்ச்சுனம் இரண்டு தாமிரவருணி ஆற்றின் கரையில் அம்பா சமுத்திரத்திற்கருகிலுள்ள திருப்புடை மருதூார் இவ்விரண்டில் முன்னது வடக்கே இருக்கின்றது. பின்னது தெற்கு இருக்கின்றது. இவ்விரண்டின் இடையில் இத்தலம் அமைந்திருப்பதால் இடை மருதூார் எனப் பெயர் பெற்றது. பாடல் பெற்ற தலமாதலால் திருவிடைமருதூார் ஆயிற்று.

கல்வெட்டில் இத்தலம் உய்யக்கொண்ட சோழவள நாட்டுத் திரைமூர் நாட்டுத் திருவிடை மருதூார் எனப் பெயர் குறிக்கப் பெற்றுள்ளது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சண்பகாரணியர். இறைவி குன்றமுலைநாயகி. இறைவன் மருதவாணர் என்றும் போற்றப்பெறுவர். தீர்த்தம் சூரியபுட்கரணி

சந்திரன், சூரியன், ஐந்தலையரவு ஆகியோர் வழிபட்டுப் பேறுபெற்ற சிறப்புடையது இத்தலம். கோவிலில் சுந்தரமூர்த்தி நாயனார் திருப்படிமமும் அவர் பக்கத்தில் பரவைநாச்சியார் திருப்படிமமும் உள்ளன.

## பழமொழி :

திருவாரூர் தேர் அழகிற்குப் புகழ் பெற்று விளங்குவது போலத் திருவிடை மருதூார் தெருவழகிற்குப் புகழ் பெற்று விளங்குகின்றது. அதனால்தான்,

திருவாரூர் தேரழகு
திருவிடை மருதூர் தெருவழகு

என்னும் பழமொழி தோன்றியுள்ளது. திருவிடைமருதூரின் வெளிப்பிரகாரத்தை வலம் வருவதை அசுவமேதப் பிரதட்சணம் என வழங்குவர். அதுவே புனிதமானது.

## இலக்கியங்கள் :

சைவ சமயக்குரவர்நால்வர் பாடல் பெற்றது இத் தலம் மேலும் கருவூர்த்தேவர், பட்டினத்தார் ஆகியோர் பாடல் பாடியுள்ளனர் திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் தலபுராணம். மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் திருவிடை மருதூர் உலா முதலிய இலக்கியங்கள் இத்தலத்தைக் கரு வாகக் கொண்டு எழுந்தவை ஆகும்.

பொழிலவன் புயலவன் புயலியக்கும்
தொழிலவன் துயரவன் துயரகற்றும்
கழலவன் கரியுரி போர்த்துகந்த
எழலவன் வளநகர் இடைமருதே

— திருஞானசம்பந்தர்

இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும்
எம்மை யாளும் இடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார் வினை சிந்துமே

— திருநாவுக்கரசர்

# 127. திருவிண்ணகர்

இத்திருப்பதி சோழ நாட்டிலுள்ள பாடல் பெற்ற வைணவத்திருப்பதி தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திலிருந்து 6 கி. மீ. தொலைவில் இருக்கின்றது இத்திருப்பதியைத் திருவேங்கடமாகவே போற்றிப் பக்தர்கள் வழிபட்டு வருகின்றனர்.

## பதி வரலாறு :

எம்பெருமான் விண்ணுலகினின்றும் விரும்பிவந்து இப்பகுதியில் கோவில் கொண்டமையால் இப்பதி விண்ணகர் எனப் போற்றப் பெறுகின்றது பாடல் பெற்ற பதியாதலால் திருவிண்ணகர் ஆயிற்று.

மார்க்கண்டேயரும் துளசி தேவியும் தவம் புரிந்த பதியாதலால் மார்க்கண்டேய சேத்திரம் என்றும் துளசி என்றும் இப்பதியை வழங்குவர்.

## பதி மகிமைகள் :

இப்பதியில் கோவில் கொண்டுள்ள எம்பெருமான் உப்புலியப்பன். ஒப்பிலியப்பன் என்றும் அன்பர்கள் போற்றுவர். எம்பெருமான் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் பூமிதேவி, விமானம் விஷ்ணு விமானம். தீர்த்தம் புட்கரணி.

மார்க்கண்டேயர், பெரிய திருவடி, காவேரி, தர்ம தேவதை முதலானோர் வழிபட்டு அருள்பெற்ற திருப்பதி இது! திருமங்கையாழ்வார், பேயாழ்வார்! நம்மாழ்வார் ஆகியோர் இப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

காதல்செய் திளையவர் கலவிதரும்
வேதனை வினையது வெருவுதலாம்
ஆதலின் உனதடி யணுகுவன் நான்
போதலர் நெடுமுடிப் புண்ணியனே!

ஆண்டாய்! உனைக் காண்பதோர்
அருளெனக் கருளுதியேல்
வேண்டேன்மனை வாழ்க்கையை
விண்ணகர் மேயவனே!

— திருமங்கையாழ்வார்

என்னப்பன் எனக்காய் இகுளாய்
என்னைப் பெற்றவளாய்
பொன்னப்பன் மணியப்பன்
முத்துப்பன் என் அப்பனுமாய்
மின்னப்பொன் மதில் சூழ்திரு
விண்ணகர் சேர்ந்த அப்பன்
தன்னொப்பார் இல்லப்பன்
தந்தனன் தன தாள்நிழலே

— நம்மாழ்வார்

# 128. திருவில்லிபுத்தூர்

இத்திருப்பதி காமராசர் மாவட்டத்தில் விருதுநகர்

செங்கோட்டை இரயில்பாதையில் அமைந்திருக்கின்றது பாடல்பெற்ற வைணவத் திருப்பதியாகத் திகழ்கின்றது.

## பதி வரலாறு :

வில்லி என்னும் வேடனால் புதியதாக இத்திருப்பதி அமைக்கப்பெற்றதால் வில்லிப்புத்தூார் எனப்பெயர் பெற்ற தாகக் கூறுவர். பாடல்பெற்ற திருப்பதியாதலால் திரு வில்லிப் புத்தூார் ஆயிற்று.

வில்லி என்னும் வேடனால் இத்திருப்பதி புதுப்பிக்கப் பெற்றதால் வில்லிப் புத்தூார் ஆயிற்று என்றும் கூறுவர்.

இரணியாட்சன் என்றஅசுரன் பூமிக்கு பெரும் பாரமாக இருந்துகொண்டுமக்களுக்குக்கொடுமைகள் செய்துவந்தான் அக்கொடிய அசுரனை எம்பெருமான் வராக வடிவம் கொண்டு வதைத்தார். அப்பதியே வராகசேத்திரம் என வடமொழியில் வழங்குகின்றது என்பது தலபுராணம் தரும் வரலாறு.

இத்திருப்பதி அமைந்துள்ள பகுதி ஒரு காலத்தில் செண்பகக் காடாக இருந்தது. இப்பகுதியை மல்லி என்னும் வேடப்பெண்ணரசி ஆண்டு வந்தாள். எனவே இப்பதி மல்லிநாடு என்றும் வழங்கப்பெற்றது.

வில்லியர் என்னும் மரபினர் வாழ்ந்த காரணத்தால் வில்லியனூார் (புதுச்சேரி) வில்லிவாக்கம் (செங்கல்பட்டு) எனப் பெயர் பெற்றிருப்பது போல இத்திருப்பதியும் பெயர் பெற்றிருக்கலாம்.

இத்திருப்பதி சீவில்லிப்புத்தூர், செருவிலிப்புத்தூார் புதுவை, தென்புதுவை என்றும் வழங்கப்பெறும். கல் வெட்டில் இத்திருப்பதி மல்லிப்புத்தூார் எனக்குறிக்கப் பெற்றுள்ளது. மல்லிப்புத்தூார் என்பதே நாளடைவில் வில்லிப்புத்தூார் ஆகியிருக்காலம்.

## பதி வரலாறு :

வடபத்திரசயனர் கோவில், வைத்தியநாத சுவாமி கோவில், நாச்சியார் கோவில். என இத்திருப்பதியில் முப்பெருங் கோவில்கள் விளங்குகின்றன வட பத்திரசயனர் கிழக்குநோக்கிய சயனத்தில் சேவை சாதிக்கின்றார். அரங்கமன்னார் கிழக்குநோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார்.

## தமிழ்நாட்டு அரசாங்கச் சின்னம் :

தமிழ்நாட்டில் மிக உயரமான கோபுரமாகத் திருவண்ணாமலைக் கோபுரம் விளங்கியது. பின்னர் அப் பெருமையைத் தற்பொழுது புதியதாகக் கட்டப்பெற்ற திருவரங்கம் கோபுரம் பெற்றுத் திகழ்கின்றது. மூன்றாவது நிலையில் உயரமுள்ள கோபுரம் திருவில்லிப் புத்தூரிலுள்ள வடபத்திர சயனர் கோவில் இராஜகோபுரம் ஆகும். இக் கோபுரம் 192 அடி உயரமுடையது. இக்கோபுரம் 11 அடுக்குகளுடனும் 11 கலசங்களுடனும் செம்மாந்தத் தோற்றத்தில் திகழ்கின்றது. இக்கோபுரத்தின் சிறப்புக் காரணமாகத் தமிழ்நாட்டு அரசு தன்னுடைய அரசாங்கச் சின்னமாக ஏற்றுக் கொண்டுள்ளது.

## ஆண்டாள் அவதரித்த திருப்பதி :

இத்திருப்பதியில்தான் ஆண்டாள் அவதரித்தாள், இவர் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவராகத் திகழ்கின்றார் இத்திருப்பதியின் நடுவே ஆண்டாள் திருக்கோவில் விளங்குகின்றது. இக்கோவில் துஜஸ்தம்ப மண்டபம்' மகாமண் டபம் என்னும் மண்டபங்களைக் கடந்து ஆண்டாள் திருச் சந்நிதி விளங்குகின்றது. இக்கோவில் சுமார் 1000 ஆண்டுகட்கு முன்னரே கட்டப்பெற்றது. இங்கிருக்கும் திருப்பூரநந்தவனத்தில் திருத்துழாய்ச் செடியின் நிழலில்

தான் ஆண்டாளைப் பெரியாழ்வார் குழந்தையாகக் கண்டெடுத்தாக வரலாறு. கங்கை. யமுனை, சரஸ்வதி, என்னும் மூன்று தீர்த்தங்களும் வந்து இங்குப் பெருகிய திருமுக்குளத்தில்தான் ஆண்டாள் நீராடி மார்கழி நோன்பு நோற்றதாக வரலாறு! பெரியாழ்வாரும் மண்டுக முனிவரும். இப்பகுதியை வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர்

## திரு விழாக்கள் :

மார்கழி மாதத்தில் திருப்பாவை ஒதப்பெறும் விழா நடைபெறுகின்றது. பங்குனி உத்திரத்தில் ஆண்டாள் திருக்கல்யாண உற்சவம் நடைபெறுகின்றது. ஆடிப்பூரம் பெரிய திருவிழாவாகக் கொண்டாடப் பெறுகின்றது. திருத்தண்கால் அப்பன் முதலான ஐந்து திருப்பதிகளின் எம்பெருமான்கள் இங்கு எழுந்தருளிச் சிறப்பிப்பது வழக்கம்.

பெரியாழ்வார் ஆண்டாள் ஆகியோர் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்து உள்ளனர்.

மின்னனைய நுண்ணிடையார்
விரிகுழல்மேல் நுழைத்தவண்டு
இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்
இனிதமர்ந்தாய் உன்னைக் கண்டார்
என்னநோன்பு நோற்றாள்கொலோ!
இவனைப் பெற்ற வயிறுடையாள்
என்னும் வார்த்தை யெய்து வித்த
இருடீகேசா முலையுணாயே!

— பெரியாழ்வார்

மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத் தூருறை வான்தன்
பொன்னடி காண்பதோ ராசையி னாலென்
பொருகயற் கண்ணிணை துஞ்சா

இன்னடி சிலோடு பாலமு தூட்டி
எடுத்த என் சோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே
உல்களந் தான்வரக் கூவாய்

— ஆண்டாள்

வில்லிப் புத்தூரர் விரும்பி வந்த
வித்தகியே கண்வளராய் !

என்பது நாட்டுப் புறபாடலடி.

# 129. திருவெஞ்சமாக்கூடல்

பாடல்பெற்ற சிவத்தலம் திருவெஞ்சமாக்கூடல். இத்தலம் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கருவூரிலிருந்து தென்கிழக்கே 16 கி. மீ. தொலைவில் இருக்கின்றது இது கொங்கு நாட்டிலுள்ள சிவத்தலம் !

## தல வரலாறு :

இரண்டு ஆறுகள் கூடுமிடம் கூடல் எனப்பெயர் பெற்றது. குடவனாறுயி நங்காஞ்சியாறும் இப்பகுதியில் கூடுவதால் இப்பகுதி கூடல் எனப் பெயர் பெற்றது வெஞ்சமன் என்னும் வேட்டுவன் இப்பகுதியை ஆண்டதால் வெஞ்சமன் கூடல் எனப் பெயர் பெற்று நாளடைவில் வெஞ்சமாக்கூடல் ஆயிற்று.

வெஞ்சமர் என்பது கடுமையான போர் என்றும் பொருள்படும். இப்பகுதியில் இருபெரும் வேந்தர்களுக்

குக் கடுமையாகப் போர் நிகழ்ந்ததால் இப்பகுதி வெஞ்சமர்க்கூடல் எனப் பெயர் பெற்று நாளடைவில் வெஞ்சமாங் கூடல் ஆயிற்று என்றும் கூறுவர்.

சேரமான் வஞ்சன் என்னும் அரசன் இப்பகுதியை ஆண்டதால் இப்பகுதி வெஞ்சமாக்கூடல் எனப் பெயர் பெற்றது என்றும் கருதுவர்.

## தல மகிமைகள்

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் விகிர்தேசுவரர், இறைவி விகிர்தேசுவரி. இவர் பண்ணேர் மொழியார் என்றும் போற்றப் பெறுவர்.

இறைவன் தம்மிடம் பெரிதும் பக்தியில் முதிர்ந்த ஒரு கிழவியிடம் தன் பிள்ளைகளை ஈடுகாட்டிப் பொன் பெற்றுச் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு அளித்தார் என்பர் சுந்தரமூர்த்தி நாயனார் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

காடும்மலையுந் நாடும்மிடறிக்
　　கதிர்மாமணிசந் தனமும்மகிலும்
சேடன்னுறையும் மிடந்தான் விரும்பித்
　　திளைத்தொற்றுச் சிற்ற றதன் கீழ்க்கரைமேல்
பாடன் முழவுங் குழலு மியம்பப்
　　பணைத்தோளியர்பா டலொடாட்லறா
வேடர்விரும்பும் வெஞ்சமாக்கூடல்
　　விகிர்தாவடியே னையும்வேண்டுதியே

— சுந்தரர்மூர்த்தி நாயனார்

# 130 திருவெண்காடு

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருவெண்காடு. இத்திருத்தலம் தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழிக்குத் தென்கிழக்கே 9 கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

## பதி வரலாறு :

தமிழ்நாட்டில் நிலத்தின் நிறம் பற்றிஎழுந்த ஊர்ப் பெயர்கள் பல இருக்கின்றன. கருமைநிறம் வாய்ந்த நிலம் கரிசல் எனப் பெயர் பெற்றுள்ளது. பாண்டிநாட்டில் சின்னக்கரிசல், குலையன்கரிசல் என ஊர்ப்பெயர்கள் விளங்குகின்றன. செம்மைநிறம் வாய்ந்த நிலம் செவ்வல் எனப் பெயர் பெற்றுள்ளது. வெண்மைநிறம் வாய்ந்த நிலம் வெண்காடு என வழங்குகின்றது. பண்டைக்காலத்தில் இப்பகுதியில் காடுகள் அடர்ந்திருந்தமையால் வெண்காடு எனப் பெயர் பெற்றுள்ளது. பாடல்பெற்ற தலமாதலால் திருவெண்காடு என வழங்கப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்திருத்தலம் சிதம்பரத்தைக் காட்டிலும் பழைமையானது. எனவே ஆதி சிதம்பரம் எனப் போற்றப்பெறுகின்றது. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சுவேதாரணியேச்சுரர் இறைவி பிரமவித்தியா நாயகி. இங்குள்ள தீர்த்தம் முக்குளம், அவை முறையே தீ, ஞாயிறு. திங்கள் என்னும் பெயர்களால் வழங்கப் பெறு

கின்றன. தலவிருட்சம் வில்வம், கொன்றை, ஆல்.

இத்திருத்தலத்தில் நடராசப் பெருமான் ஆனந்த தாண்டவம் இயற்றுகின்றார். திருத்தில்லையில் விளங்குவது போன்றே இத்தலத்திலும் இதய பாகத்தில் திருச்சபை இலங்குகின்றது. தில்லையிலுள்ள பொற்சபை போன்றே இங்கும் அமைக்கப் பெற்றிருக்கின்றது. சிதம்பரத்தில் நடைபெறுவது போன்றே இங்கும் நாள்தோறும் படிகலிங்கத்திற்கு ஆண்டில் ஆறு அபிடேகங்களும் நடைபெறுகின்றன. சிதம்பரத்தில் இருக்கும் சிதம்பரரகசியம் போன்றே இத்தலத்திலும் இருக்கின்றது,

தில்லை அம்பலத்தில் நிருதிதிசையில் எம்பெருமான் பள்ளி கொண்டுள்ளார் திருவெண்காட்டில் இறைவனுக்கு நிருதி திசையில் எம்பெருமான் நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தில்லையில் கூத்தரசன் பதஞ்சலி முனிவருக்கும் வியாக்கிரபாதருக்கும் திருக்கூத்தியற்றினார் திருவெண்காட்டில் சுவேத கேது என்னும் முனிவருக்குத் திருக்கூத்தியற்றினார்.

பட்டினத்தடிகளும் சிவஞான போதத்தை அருளிய மெய்கண்ட தேவ நாயனாரும் அவதரித்த சிறப்புடையது திருவெண்காடு! வெள்ளையானை இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றது! காலன் உதைப்பட்டது இத்தலத்தில்தான். நால்வர் பாடல்பெற்ற சிறப்புடையது இத்திருத்தலம்.

மண்ணவர் விண்ணவர்
  வணங்க வைகலும்
எண்ணிய தேவர்கள்
  இறைஞ்சும் எம்மிறை
விண்ணமர் பொழில்கொள்
  வெண்காடு மேவிய

அண்ணலை அடிதொழ
அல்லல் இல்லையே

— திருஞானசம்பந்தர்

கொள்ளி வெந்தழல்
வீசிநின் றாடுவார்
ஒள்ளி யகணஞ்
சூழுமை பங்கனார்
வெள்ளி யன்கரி
யன்பசு வேறிய
தெள்ளி யன்திரு
வெண்கா டடைநெஞ்சே

— திருநாவுக்கரசர்

குடமெடுத்து நீரும்பூவும்
கொண்டுதொண்ட ரேவல்செய்ய
நடமெடுத்தொன் றாடிப்பாடி
நல்குவீர்நீர் புல்கும்வண்ணம்
வடமெடுத்த கொங்கைமாதோர்
பாகமாக வார்கடல்வாய்
விடமிடற்றில் வைத்ததென்னே
வேலைசூழ்வெண் காடனீரே!

— சுந்தரர்

# 131 திருவெண்ணெய் நல்லூர்

தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோவிலூரி

லிருந்து 10 கி. மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது பெண்ணையாறு இவ்வூரின் வடக்கில் பாய்கின்றது. இக்காலத்தில் இவ்வாறு மலட்டாறு என வழங்கப் பெறுகின்றது.

இப்பகுதியில் உமாதேவியார் வெண்ணெயினால் ஒரு கோட்டை கட்டி அதனிடையே பஞ்சாக்கினியை வளர்த்துத் தவம்புரிந்த காரணத்தினால் இவ்வூர் வெண்ணெய் நல்லூர் எனப் பெயர் பெற்றது. பாடல்பெற்ற தலமாதலால் திருவெண்ணெய் நல்லூர் எனப் போற்றப் பெறுகின்றது.

## தல மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் தடுத்தாட் கொண்டநாதர் இறைவி வேற்கண்மங்கை. திருக்கோவில் திருவருள்துறை எனப் போற்றப் பெறுகின்றது.

சுந்தரமூர்த்தி நாயனார் இறைவன் தடுத்தாட் கொண்ட திருத்தலம் இதுவே! சுந்தரர் திருமணம் புரிந்து கொள்ளப் போகையில் இறைவன் கிழ அந்தணர் வேடம் பூண்டு வந்து வழக்கிட்டு ஆவணம் காட்டி ஆட்கொண்டார் கோவிலில்காணப்பெறும் கல்வெட்டுகளில் ''வழக்குவென்ற திருவம்பலம்'' ''ஆவணம்காட்டி ஆண்டான்'' என்னும் குறிப்புகள் காணப்பெறுகின்றன. திருக்கோவிலின் எதிரில் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு ஒருகோவில் இருக்கின்றது இத்தலத்திற்குக் கிழக்கே 2 கி. மீ. தொலைவில் தடுத்தாட் கொண்ட திருவூர் என ஒரு சிற்றூர் இருக்கின்றது. இதற்கு அண்மையில் சுந்தரர்க்கு இறைவனால் நிகழவொட்டாத படி தடைப்படுத்தப்பட்ட முதல் திருமணத்திற்கு அமைந்த திருவூர் ''மணம்வந்தபுத்தூர்'' என ஓர் ஊர் இருக்கின்றது.

சுந்தரர் பாடல்பெற்ற சிறப்புடையது இத்திருத்தலம்!

பித்தாபிறை சூடீபெரு
மானேஅரு ளாளா
எத்தான்மற வாதேநினைக்
கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்
வெண்ணெய்நல்லூர் அருட்டுறையுள்
அத்தாவுனக் காளாயினி
அல்லேனென லாமே

— சுந்தரர்

# 132. திருவெள்ளக்குளம்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத்திருப்பதி திருவெள்ளக்குளம். இத்திருப்பதி தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழி இரயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கில் சுமார் 10 கி. மீ. தொலைவிலும் வைத்தீசுவரன் கோவில் இரயில் நிலையத்திலிருந்து 10 கி. மீ, தொலைவிலும் உள்ளது இத்திருப்பதி நெடுஞ்சாலையிலிருந்து சுமார் 2 கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

## பதியின் வரலாறு :

வடநாட்டுத் திருப்பதிகளில் திருவேங்கடத்திற்கு இணையான சிறப்பு சோழநாட்டுத் திருப்பதிகளில் திருவெள்ளக் குளத்திற்கு உண்டு. இப்பகுதியிலுள்ள தீர்த்தம் 'வெள்ளககுளம்' எனப் போற்றப் பெறுகின்றது இத்தீர்த்தம் மிகவும் சிறப்புடையது. இத்தகைய சிறப்பின் காரணமாக இத்திருப்பதி வெள்ளக்குளம் எனத் தீர்த்தத்

தின் பெயரையே தன் பெயராகக் கொண்டுள்ளது. பாடல் பெற்ற தலமாதலால் திருவெள்ளக்குளம் எனப் போற்றப் பெறுகின்றது.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருநாமம் அண்ணன். எனவே கோவில் அண்ணன் கோவில் என்று வழங்குகின்றது. கோவிலின் சிறப்பால் தலத்தின் பெயரும் அண்ணன் கோவில் என்றே வழங்குகின்றது. எம்பெருமான் கிழக்கு நோக்கி நின்றகோலத்தில் சேவை சாதிக்கின்றார். எம்பெருமான் கண்ணன், நாராயணன் என்றும் போற்றப் பெறுவர். தாயார் பூவார் திருமகள் நாச்சியார். திருமங்கையாழ்வார் இத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளார் !

கண்ணார் கடல்போல்
திருமேனி கரியாய்
நண்ணார்முனை வென்றிகொள்
வார்மன்னு நாங்கூர்
திண்ணார் மதில்சூழ்
திருவெள்ளக் குளத்துள்
அண்ணா அடியேன்
இடரைக் களையாயே ''

— திருமங்கையாழ்வார்.

# 133. திருவெள்ளறை

சோழநாட்டிலுள்ள பாடல் பெற்ற வைணவத் திருப்பதி திருவெள்ளறை. இத்திருப்பதி திருச்சிராப்பள்ளி

மாவட்டத்தில் கரியமாணிக்கம் பகுதியில் இருக்கின்றது. திருச்சிராப் பள்ளியிலிருந்து துறையூர் செல்லும் நெடுஞ் சாலையில் 16-வது கி. மீ. தொலைவிலிருந்து சுமார் 2 கி. மீ. தொலைவில் மேல்புறத்தில் விளங்குகின்றது. இரயில்நிலையம் உத்தமாண்டார் கோவில் அங்கிருந்து துறையூர் செல்லும் பேருந்தில் செல்லலாம். இவ்வூர் காவிரி, கொள்ளிடம் படுகையை விட்டு விடக்கே 10 கி. மீ. தள்ளியிருப்பதால் நீர்வளமும் நிலவளமும் குன்றியதாக இருக்கின்றது.

## பதியின் வரலாறு :

தமிழ்நாட்டில் நிலத்தின் பெயரால் பல ஊர்கள் பெயர் பெற்றுள்ளன அவ்வகையில் பெற்ற பெயரே வெள் ளறை என்பது. அறை என்பது பாறை எனப் பொருள் பெறும், வெள்ளறை என்பது வெண்மையான பாறையகும் இங்குள்ள திருக்கோவில் சுமார் 100 அடி உயரமுள்ள வெண்மையான குன்றின்மீது அமைந்திருக்கின்றது. கோவில் வெள்ளறை எனப் பெயர் பெற்றுள்ளது. இக்கோவில் நகரின் நடுவே விளங்குவதாலும் இப்பகுதிக்குப் பெருமை அளிக்கக் கூடியதாக விளங்குவதாலும் இப்பகுதியில் அமைந்த ஊர் கோவிலின் பெயரால் வெள்ளறை என வழங்குகின்றது, பாடல்பெற்ற திருப்பதி. ஆதலால் திரு வெள்ளறை ஆயிற்று. வடமொழியில் சுவேதகிரி என வழங்குகின்றது.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் புருடோத்தமன். தாயார் சண்பகவல்லி. எம்பெருமான் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவைசாதிக்கின்றார்

வெள்ளறைக் கோவிலொடு ஒத்த பழைமை வாய்ந்த சிவன் கோவில் ஒன்றும் இத்திருப்பதியில் இருக்கின்றது,

பழம்பெருமை கொண்ட சிறப்புடையது வெள்ளறை ஒருகாலத்தில் சிறந்த நகரமாக விளங்கியது. அதற்கான பழைய கட்டிட இடிபாடுகள், செங்சல் ஓடுகள் இன்றும் காணப்பெறுகின்றன.

பெரியதிருவடி, சிபி, பூதேவி. மார்க்கண்டேயர், முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றனர். விஷ்ணுபட்டர் இத்தலம் பற்றிப் பிள்ளைத்தமிழ். பாடியுள்ளார். வைணவப்பெரியார்கள் உய்யக்கொண்டாரும், எங்களாழ்வாரும் இப்பதியில் அவதரித்தனர்!

இராமானுசர் இத்திருப்பதியில்தான் திருவரங்கத்துக் கோவில் வழிபாட்டுமுறைகளை ஒழுங்குசெய்து' பத்துக் கொத்தை' வகுத்தருளினாரென்பர். இராமானுஜருக்கென்று இத்திருப்பதியில் தனிக்கோவில்உண்டு. பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் இப்பதியைப் போற்றிப் பாடியுள்ளனர்,

கன்றுகள் இல்லம் புகுந்து
கதறுகின் றபசு வெல்லாம்
நின்றொழிந் தேன்உன்னைக் கூவி
நேசமேல் ஒன்றும் இலாதாய்
மன்றில்நில் லேல்அந்தில் போது
மதிள்திரு வெள்ளறை நின்றாய்
நன்றுகண் டாய்என்தன் சொல்லு
நானுன்னைக் காப்பிட வாராய்

—பெரியாழ்வார்

வெய்ய னாய்உல கேழுடன் நலிந்தவன்
உடலகம் இருபிளவா
கையில் நீளுகிர்ப் படையது வாய்த்தவ
னே! எனக் கருள்புரியே

மையி னார்தரு வராலினம் பாயவண்
தடத்திடைக் கமலங்கள்
தெய்வம் நாறுமொண் பொய்கைகள் சூழ்திரு
வெள்ளறை நின்றானே,,

—திருமங்கையாழ்வார்

# 134. திருவெள்ளியங்குடி

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில் ஒன்று திருவெள்ளியங்குடி. தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடைமருதூர் இரயில்நிலையத்திலிருந்து வடக்கே 8 கி. மீ. தொலைவிலும் மாயவரம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 5 கி. மீ. தொலைவிலும் இத்திருப்பதி இருக்கின்றது. இவ்வூருக்குச் செல்லும் வழியில் பெரியவாச்சான் பிள்ளை பிறந்த செங்கா நல்லூர் இருக்கின்றது.

## பதியின் வரலாறு :

சுக்கிரனாகிய வெள்ளி இத்திருப்பதியில் தவம் செய்து பேறுபெற்ற காரணத்தால் இத்திருப்பதி வெள்ளியங்குடி எனப் பெயர் பெற்றுள்ளது. 'குடி' என்னும் சொல் தமிழ் நாட்டில் பல ஊர்ப்பெயர்களில் காணப்பெறுகின்றது. பாடல்பெற்ற தலமாதலால் திருவெள்ளியங்குடி என வழங்கப் பெறுகின்றது. இத்திருப்பதி சுவர்க்கப் புரி என்றும் போற்றப் பெறும். இத்திருப்பதியில் பிறகு முனிவர் நீண்டகாலமாகத் தவம் புரிந்து எம்பெருமான் திருக்காட்சி கண்டு பேரின்பம் பெற்றதால் பார்க்கவபுரி என்றும் வழங்கப்பெறும்.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் திருநாமம் கோலவில்லிராமன். எம்பெருமானைச் சிருங்கார சுந்தரன் என்றும் போற்றுவர். தாயார் மரகதவல்லி. எம்பெருமான் கிழக்கு நோக்கிய சயனத்தில் சேவை சாதிக்கின்றார். தீர்த்தம் பிரமதீர்த்தம் விருட்சம் கதலீ. இத்திருப்பதி திருமங்கையாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற பெருமையுடையது.

ஆய்ச்சியர் அழைப்ப வெண்ணெயுண் டொருகால்
ஆலிலை வளர்ந்த எம்பெருமான்
பேய்ச்சியை முலையுண் டிணைமரு திறுத்துப்
பெறுநிலம் அளந்தவன் கோயில்
காய்த்தநீள் கழுகும் கதலியும் தெங்கும்
எங்கும் ஆம் பொழில்களின் நடுவே
வாய்த்தநீர் பாயும் மண்ணியின் தென்பால்
திருவெள்ளி யங்குடி அதுவே"

— திருமங்கையாழ்வார்

# 135 திருவேடகம்

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று திருவேடகம். மதுரை மாவட்டத்தில் மதுரை சோழவந்தான் சாலையில் மதுரையிலிருந்து 15 கி. மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது. இத்தலம் வைகையாற்றின் கீழ்க்கரையில் அமைந்திருக்கின்றது.

## தலத்தின் வரலாறு :

திருஞானசம்பந்தர் சமணர்களுடன் செய்த சொற் போரில் புனல்வாதமும் ஒன்று. அவர் புனல்வாதத்தில் 'வாழ்க அந்தணர்' எனத்தொடங்கும் பாடலை ஏட்டில் எழுதி வைகையாற்றில் விட்டார். அவ்வாறே சமணர் களும் தம் சமயப்பெருமைகளை எழுதி வைகையில் விட்ட னர். சமணர்கள் இட்ட ஏடு வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு மறைந்தது. திருஞானசம்பந்தர் இட்ட ஏடு வைகையாற்றில் நீரை எதிர்த்துச் சென்றது. திருஞான சம்பந்தர் வன்னியும் மத்தமும் எனத் தொடங்கும் பதிகம் பாடியவுடன் அவ்வேடு அப்படியே நின்று விட்டது. ஏடு நின்ற இடம் ஏடகம்! அப்பகுதியிலமைந்த ஊர் ஏடகம் என்று பெயர் பெற்றது! பாடல்பெற்றதலம். எனவே திருவேடகம் என வழங்குகின்றது.

## தலத்தின் மகிமைகள் :

இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் ஏடகநாதேசுவரர் இறைவி ஏலவார் குழலி. தீர்த்தம் வைகையாறு. இறைவி உமாதேவி என்றும் போற்றப் பெறுவர். கோவில் திருச்சுற்றில் முருகன். நடராசர், அறு பத்துமூவர் முதலானோர் வீற்றிருக்கின்றனர். இத்தலத் தில் திருமால் கருடன், ராக்தனார் முதலானோர் வழி பட்டுப் பேறு பெற்றனர், இத்தலத்திற்குத் தலபுராணம் உண்டு.

இறைவன் திருக்கோவில் திருஞானசம்பந்தர் காலத்துப் பாண்டிய மன்னரால் கட்டப்பெற்றதாகக் கூறு வர். சமணாரப் புனல்வாதத்தில் வென்ற திருஞானசம் பந்தர் ஏடணைந்த திருவேடகத்தில் சிவலிங்கம் ஒன்றை வைத்து வழிபட்டதாகவும் அதுவே இன்றையக் கோவிலில்

காட்சிதரும் ஏடகநாதர் என்றும் கருதுவர் நாட்டுக் கோட்டை நகரத்தார் இக்கோவிலைப் புதுப்பித்துள்ளனர்.

இக்கோவிலில் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர பாண்டியன்' சடாவர்மன், பராக்கிரம பாண்டியன். சடாவர்மன் விக்கிரம பாண்டியன், ஸ்ரீலல்லபதேவன் ஆகிய பாண்டியமன்னர்கள் காலத்திலும் கிருட்டிண தேவ ராயர் காலத்திலும் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுகள் இருக்கின்றன.

திருஞானசம்பந்தர் பாடல்பெற்ற சிறப்புடையது இத்தலம்.

வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்
பொன்னிய திருவடி புதுமல ரவைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடல ரேடகத் தொருவனே

— திருஞானசம்பந்தர்

# 136. திருவேற்காடு

பாடல்பெற்ற சிவத்தலம் திருவேற்காடு. செங்கல் பட்டு மாவட்டத்தில் பூவிருந்தவல்லிக்கு வடக்கே 2 கி, மீ. தொலைவில் இத்திருத்தலம் விளங்குகின்றது காடு வெட்டி யாறு என இப்போது வழங்கும் பழைய பாலாற்றங்கரையில் இத்தலம் அமைந்துள்ளது.

'காடு' என்னும் பெயர் சேர்ந்த ஊர்கள் தமிழ் நாட்டில் பல இருக்கின்றன. பண்டைக்காலத்தில் இப்

பகுதியில் வேலமரங்கள் நிறைந்திருந்தமையால் வேற்காரு எனப்பெயர் பெற்றுள்ளது. பாடல்பெற்ற தல மாதலால் திருவேற்காடு ஆயிற்று.

## தலத்தின் மகிமைகள் :

தொண்டை நாட்டிலுள்ள சைவத் தலங்களில் திரு வேற்காடு ஒன்று. இறைவன் திருநாமம் வேற்காட்டுநாதர் வேதபுரீசர் என்றும் போற்றப் பெறுவர். இறைவி வேற் கண்ணியம்மை. தீர்த்தம் வேலாயு தீர்த்தம். மூலலிங்கத் திற்குப் பின்புறத்தில் பார்வதி பரமசிவன் திருவுருவங்கள் விளங்குகின்றன.

அன்னை ஸ்ரீதேவி கருமாரி அம்மனை இளமுருகக் கடவுள் வழிபட்ட திருத்தலம் திருவேற்காடு! 63 நாயன் மார்களில் ஒருவரான மூர்க்கநாயனார் திருத்தோற்றமுள்ள திருத்தலம் திருவேற்காடு! அகத்தியருக்குச் சிவபெருமான் திருமணக்கோலம் காட்டிய தெய்வீகத்திருத்தலம் திருவேற் காடு! திருஞானசம்பந்தர் பாடல்பெற்ற மகிமையுடையது திருவேற்காடு!

ஆடல் நாகம் அசைத்தள வில்லதோர்
வேடங் கொண்டவன் வேற்காடு
பாடி யும்பணிந் தாரிவ் வுலகினில்
சேட ராகிய செல்வரே

— திருஞானசம்பந்தர்

# 137. திருவைகுண்டம்

பாடல்பெற்ற பாண்டிநாட்டு வைணவத் திருப்பதி திருவைகுண்டம்! (இத்திருப்பதி திருநெல்வேலி மாவட்டத்

தின் தலைநகராக விளங்குகின்றது.) தண்பொருநையாற்றின் வடகரையில் அமைந்திருக்கின்றது.

## பதியின் வரலாறு :

எம்பெருமானின் தலைமை இடம் வைகுண்டம் இறைவனின் தலைமை இடம் கயிலாயம். இவ்விரண்டு இடங்களின் சிறப்புகள் இப்பதியில் விளங்குவதால் இப்பதி திருவைகுண்டம் எனப் பெயர் பெற்றுள்ளது. இறைவனைக்காட்டிலும் இப்பதியில் எம்பெருமான் சிறப்பாகப் போற்றப்பெறுவதால் இப்பெயர் வழங்கி வருகின்றது. இப்பதியில் இறைவன் கோவில் கொண்டுள்ளார். இறைவன் கோவிலைச் சுற்றியுள்ள பகுதி கயிலாயபுரம் என வழங்கப் பெறுகின்றது எம்பெருமான் கோவில் கொண்டுள்ள பகுதி வைகுண்டம் என வழங்கப்பெறுகின்றது. இவ்வாறு தனித் தனி பெயர்கள் இருந்தாலும் இப்பதி வைகுண்டம் என்றே வழங்கப் பெறுகின்றது பாடல்பெற்ற பதியாதலால் திருவைகுண்டம் எனப்போற்றப் பெறுகின்றது.

## பதியின் மகிமைகள் :

இப்பகுதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் கள்ளப்பிரான். வைகுந்தநாதன் என்றும் போற்றப்பெறுவர் கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார் தாயார் வைகுந்தவல்லி. தீர்த்தம் தாமிரவருணி, பிருகு இந்திரன், பிருகுசக்கரவர்த்தி வழிபட்டுப் பேறுபெற்ற திருப்பதி திருவைகுண்டம்!

கயிலாயபுரத்தில் குமரகுருபரர் தோன்றினார் அவர் திருநாமத்தால் குமரகுருபரர் உயர்நிலைப் பள்ளி, கல்லூரி சங்கம், அச்சகம், குமரகுருபரன் என்னும் இலக்கியத் திங்கள் இதழ் நிறுவனம் முதலிய அறநிலையங்கள் இயங்கி வருகின்றன. நம்மாழ்வார் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளார்.

எங்கள்கண் முகப்பே உலகர்கள் எல்லாம்
இணையடி தொழுதெழுந் திறைஞ்சி
தங்கள் அன் பாரத் தமதுசொல் வளத்தால்
தலைத்தலைச் சிறந்துபூ சிப்ப
திங்கள்சேர் மாடத் திருப்புளிங் குடியாய்
திருவைகுந் தத்துள்ளாய் தேவா
இங்கண்மா ஞாலத் திதனுளும் ஒருநாள்
இருந்திடாய் வீற்றிடங் கொண்டே

— நம்மாழ்வார்

# 138. திருவையாறு

பாடல்பெற்ற சோழநாட்டுச் சிவத்தலம் திருவையாறு! தஞ்சாவூர் மாவட்டத்தில் தஞ்சாவூருக்கு வடக்கே 10 கி. மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது. இத்தலம் அமைந்துள்ள பகுதியைக் காவிரியின் டெல்டாப் பிரதேசம் என்பர்.

## தலத்தின் வரலாறு :

இப்பகுதியில் வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி, கொள்ளிடம் ஆகிய ஐந்து ஆறுகள் பாய்ந்து வளங்கொழிப்பதால் இவ்வூர் ஐயாறு எனப் பெயர் பெற்றுள்ளது பாடல்பெற்ற தலமாதலால் திருவையாறு என வழங்குகின்றது.

இத்தலம் கோவிலை மையமாகக் கொண்டு அமைந்துள்ளது. கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவன் ஐயாறன்

எனவே இத்தலம் இறைவன் பெயரால் ஐயாறு என வழங்கு கின்றது என்றும் கூறுவர்!

'ஆறை' என்பது சிறந்த மதில்சுவர்களையுடைய கோட்டை என்று பொருள்பெறும்! அக்காலத்தில் இப்பகுதியில் அழகிய கோட்டை இருந்த காரணத்தினால் ஐயாறை எனப்பெயர் பெற்று நாளடைவில் ஐயாறு என மருவி இருக்கலாம் என்றும் கருதுவர்.

கல்வெட்டில் இத்தலத்தின் பெயர் "இராஜேந்திர சிங்க வளநாட்டுப் பொய்கைநாட்டுத் திருவையாறு" என்றும் "இராசராச வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாறு" என்றும் வழங்கப் பெறுகின்றது.

திருவையாறு எனப் பன்னெடுங்காலமாக வழங்கி வந்த இத்தலப்பெயர் ஆங்கிலேயர் காலத்தில் 'திருவாதி, என்று மருவி வழங்கியது. இக்கோவிலிலுள்ள பிற்காலக் கல்வெட்டுகள் இவ்வாறே குறிப்பிடுகின்றன. 'திருவியார், என்றும் 'திருவைய்யார்' என்றும் வழங்கப் பெற்றதும் உண்டு. வடமொழியில் இத்தலம் 'பஞ்சநதம்' என்று வழங்குகின்றது. புராணநூலார் சூரிய புஷ்கரிணி, சந்திர புஷ்கரிணி, கங்கை, பாலாறு, நந்திதீர்த்தம் என்னும் ஐந்து புண்ணிய தீர்த்தங்கள் இப்பகுதியில் கலப்பதால் இப்பெயர் ஏற்பட்டது என்பர்

## தலத்தின் மகிமைகள்

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் செம் பொற்சோதி என்றும் போற்றப் பெறுவர். இறைவி அறம் வளர்த்தநாயகி! திருநாவுக்கரசு நாயனாருக்கு இறைவன் திருக்கயிலைக் காட்சி அளித்த பெருமையுடையது இத் தலம், இத்திருக்காட்சியினை வழங்கிய இறைவன் சந்நிதி தெற்குச் சுற்றில் இருக்கின்றது. இதனால் இத்தலம் தென்

கயிலாயம் எனப் போற்றப் பெறுகின்றது. திருநாவுக்கரசர் கயிலைப் பொய்கையில் இறையருளால் மூழ்கி இங்குள்ள தொரு வாவியின்கண் எழுந்தருளினார். அவ்வாவி திருக் கோவிலின் வடமேற்கில் இருக்கின்றது.

மார்க்கண்டேயர் இத்தலத்தில்தான் சிவனருள் பெற்றார். ஏழிடத்திருவூர்களில் இத்தலம் முதன்மை யானது. இவ்வேழிட விழா சித்திரை நிறைநிலாக் காலத் தில் நடைபெறுகின்றது ஒவ்வொரு ஆண்டும் மார்கழித் திங்களில் மிகச்சிறப்பாக இசைவிழா நடைபெறுகின்றது மூவர் முதலிகள் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளனர்.

வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும்
நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனார் நண்ணுங்கோயில்
காந்தாரம் இசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார்வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே

— திருஞானசம்பந்தர்

மாதர்ப் பிறைக்கண்ணி யானை
மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப்
புகுவா ரவர்பின் புகுவேன்
யாதும் சுவடு படாமல்
ஐயா றடைகின்ற போது
காதல் மடப்பிடி யோடும்
களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர்திருப் பாதங்
கண்டறி யாதன கண்டேன்

— திருநாவுக்கரசர்

பரவும்பரிசொன் றறியேனான்
　　பண்டேயும்மைப் பயிலாதேன்
இரவும்பகலு நினைத்தாலும்
　　எய்தநினைய மாட்டேனான்
கரவிலருவி கமுகுண்ணத்
　　தெங்கங்குலைக் கீழ்க்கருப்பாலை
அரவந்திரைக்கா விரிக்கோட்டத்(து)
　　ஐயாறுடைய அடிகளே
— சுந்தரமூர்த்தி நாயனார்

# 139. திருவொற்றியூர்

தொண்டை நாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் திருவொற்றியூர். செங்கல்பட்டு மாவட்டத்தில் சென்னை மாநகருக்கு வடக்கே 7 கி. மீ. தொலைவில் இத்தலம் விளங்குகின்றது. இத்தலந்திற்கு இரயில் நிலையம் உண்டு"

திருவொற்றீச்சுரர் என்னும் திருப்பெயருடைய இறைவன் இத்தலத்தில் எழுந்தருளியுள்ளதால் திருவொற்றியூர் எனப்பெயர் பெற்றுள்ளது. ஊழியை மேல்வரஒட்டாது தடுத்தமையால் ஒற்றியூர் ஆயிற்று என்றும் கூறுவர் தமிழ் நாட்டிலுள்ள மிகவும் பழைமையான தலங்களில் ஒன்று திருவொற்றியூர். அதனால் இத்தலம் ஆதிபுரி என்றும் வழங்கப் பெறுகின்றது.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மாணிக்கத்தியாகர். இறைவி வடிவுடையம்மை. வாசுகியை இறைவன் தன் திருவுருவத்தில் சேர்த்துக்கொண்டதால்

படம்பக்கநாதர் எனப்பாற்றப்பெறுகின்றார். மெய்யன்பர் ஏலேலசிங்கருக்கு இறைவன் மாணிக்கங்கள் வழங்கியமையால் மாணிக்கத்தியாகர் எனப் போற்றப்பெறுகின்றார். மாந்தாதா என்னும் அரசன் திருவூர்களின் கட்டளைகளைக் குறைத்து எழுது வித்தனன். அவ்வேட்டில் ஒற்றியூர் நீங்கலாக என இறைவன் வரி பிளந்து எழுதுவித்தார். அதனால் இறைவன் எழுத்தறியும் பெருமான் என வழங்கப் பெறுகின்றார். தல விருட்சம் மகிழம். தீர்த்தம் பிரம்மதீர்த்தம்!

திருவிளக்குத்திருத்தொண்டு புரிந்தருளிய கலியநாயனார் பேறுபெற்ற திருத்தலம்! சுந்தரர் சங்கிலிநாச்சியாரை இறைவன் திருவருளால் மணம் புரிந்துகொண்டதிருத்தலம் சுந்தரர் இத்திருமணத்தின் பொருட்டு இத்தல விருட்சம் மகிழத்தின் கீழ்ச்சூளுறவு செய்தார். இத்திருவிழா 'மகிழடி சேவை' என மாசித்திங்களில் நடைபெறுகின்றது. சுந்தரர் சங்கிலியார் இவர்களுடைய எழுந்தருளும் திருப்படிமங்கள் கோவிலில் உள்ளன!

இத்தத்தில் பட்டினத்துப் பிள்ளையாருக்கும் திருநாவுக்கரசருக்கும் தனித்தனிக் கோவில்கள் உள்ளன. திருநாவுக்கரசர் மயிலாப்பூரில் இருக்கும் போது மாணிக்கத்தியாகர் காட்சியருள அவர் ''வருவாரை எதிர் கண்டோம் மயிலாப்புள்ளே'' என்று பாடியருளினார். மூவர் முதலிகளும் இராமலிங்க சுவாமிகளும் இத்தலத்தைப் பாடியுள்ளனர்.

மண்ணல்லை விண்ணல்லை வலய மல்லை
மலையல்லை கடலல்லை வாயு அல்லை
எண்ணல்லை எழுத்தல்லை எரியும் அல்லை
இரவல்லை பகலல்லை யாவும் அல்லை
பெண்ணல்லை ஆணல்லை பேடும் அல்லை
பிறிதில்லை யானாயும் பெரியாய்நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீமை யல்லை

யுணர்வரிய ஒற்றியூர் உடைய கோவே

— திருநாவுக்கரசர்

மகத்தில் புக்கதோர் சனியெனக் கானாய்
மைந்த னேமணி யேமண வாளா
அகத்தில் பெண்டுகள் நானொன்று சொன்னால்
அழையேற் போகுரு டாஎனத் தரியேன்
முகத்தில் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்
முக்க ணாமுறை யோமறை யோதீ
உகைக்கும் தண்கடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊருறைவானே ''

— சுந்தரமூர்த்திநாயனார்

# 140. திருவோத்தூர்

வடார்க்காடு மாவட்டம் செய்யாறு வட்டத்தில் இத்தலம் விளங்குகின்றது. காஞ்சிபுரம் இரயில் நிலையத்திலிருந்து 24 கி. மீ. தொலைவில் சேயாற்றின் கரையில் இத்தலம் அமைந்துள்ளது. தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலமாகத் திகழ்கின்றது.

இத்தலத்தில் இறைவன் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேதத்தின் பொருளை அருளிச் செய்ததாக காஞ்சிப் புராணத்தாலும் திருவிளையாடல் புராணத்தாலும் அறியமுடிகின்றது. எனவே இத்தலம் திருவோத்தூர் எனப் பெயர் பெற்றுள்ளது.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் வேத நாதேசுவரர். இறைவி இளமுலைநாயகி. இறைவன் வேத நாதர் என்றும் போற்றப் பெறுவர். தீர்த்தம் கலியாண கோடி தீர்த்தம். விருட்சம் பனை, திருக்கோவிலில் வட சுற்றில் ஐம்பூதச் சிவக்குறிகள் விளங்குகின்றன.

திருஞானசம்பந்தர் திருவருளால் ஆண்பனை பெண் பனையாக மாறிய அற்புதம் நிகழ்ந்த சிறப்புடையது இத் தலம், திருக்கோவிலில் கல்லாலமைந்த பனையின் திருவுரு வம் விளங்குகின்றது. இஃதொரு பாதி ஆணும் மற்றொரு பாதி பெண்ணுமாக அமைக்கப் பெற்றுள்ளது. வெளிச்சுற்றில் நாலைந்து பனைமரங்களும் உள்ளன.

திருக்கோவிலில் இராசாதிராசன் முதல் விக்கிரம சோழன் வரையுள்ள சோழமன்னர்கள்' சுந்தரபாண்டியன் வீரபாண்டியன், கோப்பெருஞ்சிங்கன், இராஷ்டிரக்கூட கன்னரதேவன் ஆகியோர் காலக் கல்வெட்டுகள் இருக் கின்றன.

இடைக்காலத்தில் இவ்வூரில் சமயக்கலகம் நடந்ததாக அறியமுடிகின்றது. இத்தலத்திற்கு அருகிலுள்ள புனாவதி என்னும் ஊரிலுள்ள சமணக்கோவிலை இடித்து அவற் றைக் கொணர்ந்து இவ்வூரிலுள்ள சிவன்கோவிலைக் கட்டி யதாகக் கூறுவர்.

இத்தலம் தமிழ்மொழியிலும் சைவசமயத்திலும் வல்லவரான பானுகவி என்னும் பெரியார் தோன்றிய சிறப்புடையது. இத்தலம் பற்றிக் கருணாகரக் கவிராயர் பாடிய தலபுராணம் அச்சிடப் பெற்றுள்ளது. திருஞான சம்பந்தர் பாடல்பெற்ற சிறப்புடையது இத்தலம்!

தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதா வென்று நலம் புகழ்ந்
தோதா தாருள் ரோதிரு வோத்துார்
ஆதீ ரேயரு ணல்குமே

—திருஞானசம்பந்தர்

# 141. நன்னிலம்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்களில் ஒன்று நன்னிலம். தஞ்சாவூர் மாவட்டத்தில் இத்தலம் அமைந்துள்ளது. இப்பகுதியில் காவிரி பாய்ந்து வளமூட்டு கின்றது. நீர்வளமும் நிலவளமும் ஒருங்கே அமைந்த பகுதி யில் அமைந்த திருத்தலமாதலால் நன்னிலம் எனப் பெயர் பெற்றுள்ளது.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் கோவில் கொண்டுள்ள இறைவன் மதுவனநாதர். இறைவி மதுவன நாயகி. தீர்த்தம் பிரம தீர்த்தம். திருக்கோவில் கட்டுமலைமேல் விளங்குகின்றது. கோச்செங்கணான் இதனைக் கட்டினான். கோவிலில் இறைவனின் பின்புறம் தேன்கூடு ஒன்று இருந்து வருகின் றது சுந்தரர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

பாடிய நான்மறையான்
படுபல்பிணக் காடரங்கா
ஆடிய மாநடத்தா
னடிபோற்றியென் றன்பினராய்ச்
சூடிய செங்கையினார்

பலதோத்திரம் வாய்த்தசொல்லி
நாடிய நன்னிலத்துப்
பெருங்கோயில் நயந்தவனே''

# 142. நாகப்பட்டினம்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் நாகப்பட்டினம் தஞ்சாவூர் மாவட்டத்தில் கிழக்கில் இத்தலம் இருக்கின்றது. இரயில்நிலையம் உள்ளது. தஞ்சாவூரிலிருந்து கிழக்கே செல்லும் இருப்புப் பாதை இங்கு முடிவடைகிறது

## தலத்தின் வரலாறு :

பட்டினம் என்பது கடற்கரைச் சார்ந்த ஊரைக் குறிக்கும். இது வங்காளக் குடாக் கடற்கரையில் விளங்குகின்றது. நாகர் என்னும் இனமக்கள் வாழ்ந்ததாலும் நாக அரசன் ஒருவனால் அமைந்ததாலும் இத்தலம் நாகப்பட்டினம் எனப்பெயர் பெற்றுள்ளது.

ஆதிசேடனாகிய நாகராசன் இறைவனை வணங்கிப் பேறு பெற்றமையால் இந்நகர் நாகப்பட்டினம் எனப் பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

இத்தலத்திலுள்ள விநாயகர் நாகாபரணப்பிள்ளையார். இப்பிள்ளையாரின் தலையின் பின்புறம் ஐந்துதலைப் பாம்பொன்று குடைபிடிப்பதுபோல் அமைக்கப் பெற்றுள்ளது அதனால் இத்தலம் நாகப்பட்டினம் எனப் பெயர் பெற்றதாகவும் கூறுவர்.

பிறநாட்டுப் பயணிகளான டாலமி என்பவர் நிக் கௌவா என்றும் இட்ஸிங் என்பவர் நகவதனா என்றும் மார்க்கோபோலோ என்பவர் பட்டன் என்றும் ரஷ்துத்தீன் என்பவர் மலிபட்டன் என்றும் நாகப்பட்டினத்தைக் குறித் துள்ளனர்.

தம்மச்சேத்தி என்னுமிடத்தில் கிடைத்த கல்யாணி சாசனங்களில் (1476) நவுட்டப்பட்டனா என்று குறிக்கப் பட்டிருக்கின்றது. இது பௌத்த நூல்களில் திருநாகைக் காரோணம் என்றும் வைணவநூல்களில் திருநாகை என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

இறைவன் புண்டரீக மாமுனிவரைக் காயத்தோடு ஆரோகணம் செய்துகொண்ட ஊர்! ஆதலால் நாகைக் காரோணம் ஆயிற்று. காயாகாரோணம் என்பது உடம் போடு விழுங்கலாகும்.

## தலத்தின் மகிமைகள் :

நாகப்பட்டினம் சிறந்த சிவத்தலமாக விளங்கு வதோடு வைணவத் திருப்பதியாகவும் விளங்கி வருகின்றது நீலாயதாட்சி அம்மன் கோவில் சைவசமயத்திற்கும் சௌ ரிராஜ்பெருமாள் கோவில் வைணவசமயத்திற்கும் நிலைக் களன்களாக விளங்குகின்றன.

நீலாயதாட்சியம்மன் கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவன் காயாரோகணேசர். காஞ்சிகாமாட்சி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி, நாகை நீலாயதாட்சி என இறைவியைப் போற்றுதல் மரபு, தலவிருட்சம் மாம ரம். தீர்த்தம் தேவதீர்த்தம் புண்டரிகதீர்த்தம். கோவிலில் சுந்தரர் பரவைநாச்சியாருடன் வீற்றிருக்கின்றார். அதி பத்தநாயனார் வழிப்பட்டு பேறுபெற்ற பெருமை உடை யது. மூவர்பாடல் பெற்ற சிறப்புடையது இத்தலம்!

இத்திருப்பதியில் கோவில்கொண்டுள்ள எம்பெருமான் சௌந்தர்ய ராஜன். கிழக்குநோக்கி நின்றகோலத்தில் சேவை சாதிக்கின்றார்' தாயார் சௌந்தர்யவல்லி தீர்த்தம் சாராதீர்த்தம். இத்திருபப்தியைத் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார்.

ஆணும் பேண்ணுமாய்
அடியார்க் கருள்நல்கிச்
சேணின் றவர்க்கின்னஞ்
சிந்தை செயவல்லான்
பேணி வழிபாடுபிரியா
தெழுந் தொண்டர்
காணுங் கடல்நாகைக்
காரோ ணத்தானே!

—திருஞானசம்பந்தர்

அந்த மில் புகழ்
ஆயிழை யார்பணிந்
தெந்தை ஈசனென்
றேத்தும் இறைவனைக்
கந்த வார்பொழில்
நாகைக்கா ரோணனைச்
சிந்தை செய்யக்
கொடுந்துயர் திண்ணமே!

— திருநாவுக்கரசர்

மண்ணுலகும் விண்ணுலகும்
உம்மதே ஆட்சி
மலை அரையன் பொற்பாவை
சிறுவனையும் தேறேன்
எண்ணிலியுண் பெருவயிறன்
கணபதியொன் றறியான்

எம்பெருமான் இதுதகவோ
இயம்பியருள் செய்யீர்
திண்ணென என் உடல்விருத்தி
தாரீரே யாகில்
திருமேனி வருந்தவே
விளைக்கின்றேன் நாளைக்
கண்ணறையன் கொடும்பாடன்
என்றுரைக்க வேண்டா
கடல்நாகைக் காரோணம்
மேவிஇருந் தீரே!

— சுந்தரர்

அன்னமும் கேழலும் மீனு மாய
ஆதியை நாகை யழகி யாரை
கன்னிநன் மாமதிள் மங்கை வேந்தன்
காமரு சீர்க்கலி கன்றிகுன்றா
இன்னிசை யால்சொன்ன செஞ்சொல் மாலை
ஏழு மிரண்டுமோ ரொன்றும் வல்லார்
மன்னவ ராய் உல காண்டு மீண்டும்
வானவ ராய்மகிழ் வெய்து வரே!

— திருமங்கையாழ்வார்

# 143. நாதன் கோவில்

சோழநாட்டுப் பாடல்பெற்ற வைணவத்திருப்பதி நாதன் கோவில். தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திலிருந்து தென்மேற்கு மூலையில் சுமார் 5 கி. மீ. தொலைவில் இத்திருப்பதி விளங்குகின்றது.

## பதியின் வரலாறு :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் ஜெகந்நாதன். எம்பெருமானை நாதப்பெருமாள் என்றும் போற்றுவர். எம்பெருமான் சிறப்பால் இத்திருப்பதி நாதன் கோவில் என இன்று வழங்கப் பெறுகின்றது.

இத்திருப்பதி அக்காலத்தில் நந்திபுர விண்ணகரம் எனப்பெயர் பெற்றிருந்தது. நந்திவர்மன் இக்கோவிலில் திருப்பணிகள் சில செய்ததால் அவ்வாறு பெயர் பெற்றது என்பர் நந்தி தேவர்க்கு எம்பெருமான் காட்சி கொடுத்தால் நந்திபுர விண்ணகரம் எனப் பெயர் பெற்றது என்பர்.

திருமங்கையாழ்வார் தம்பாசுரங்களில் இப்பதியை 'நந்தி பணி செய்த நகர்' எனக் குறிப்பிட்டுள்ளார். இந்நந்தி 8-ஆம் நூற்றாண்டில் அரசாண்ட இரண்டாம் நந்திவர்ம பல்லவனே! நந்திபுரம் என்னும் நகரத்தை அமைத்து அங்கே கோட்டை கொத்தளங்களை எழுப்பி விஷ்ணு கோவில் ஒன்றைக்கட்டிய பெருமை இம்மன்னரைச் சாரும்!

கல்வெட்டில் இத்திருப்பதி பழையாறையான நந்தி புரம் என்றும் ஆயிரத்தளி என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் விண்ணகரப் பெருமாள். தாயார் சண்பகவல்லி. எம்பெருமான் மேற்கே வீற்றிருந்த கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தீர்த்தம் நந்தி தீர்த்தம். நந்தியும் சிபியும் வழிபட்டு இறையருள் பெற்ற மகிமையுடையது இத்திருப்பதி திருமங்கையாழ்வார் இப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளார்.

தீதறு நிலத்தொடெரி
காலினொடு நீர்கெழு
விசும்பும் அவையாய்
பாசறு மனத்தினெ
டுறக்கமொ டிறக்கையவை
யாய பெருமான்
தாய்செற உளைந்துதயி
ருண்டுகுட மாடுதட
மார்வர் தகைசேர்
நாதன்உறை கின்றநகர்
நந்திபுர விண்ணகரம்
நண்ணு மனமே!

— திருமங்கையாழ்வார்

# 144. நான்குநேரி

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் திருப்பதிகளில்ஒன்று நான்குநேரி. திருநெல்வேலிமாவட்டத் தில் திருநெல்வேலி-நாகர்கோவில் பெருஞ்சாலையில் இத் திருப்பதி இருக்கின்றது.

அக்காலத்தில் இத்திருப்பதியில் மிகப்பெரிய நான்கு ஏரிகள் இருந்ததால் நான்கு ஏரி எனப் பெயர் பெற்று நாளடைவில் நான்குநேரி ஆயிற்று. இத்திருப்பதிக்கு சிரீவரமங்கை என்றும் வானமாமலை என்றும் பெயர் வழங்கப்பெறும்.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் கோவில் கொண்டுள்ள எம்பெருமான் வானமாமலைப் பெருமாள். எம்பெருமானை தோத்தாத்திரிநாதன், தெய்வநாயகன் என்றும் போற்றுவர். தாயார் சிரீவரமங்கை நாச்சியார், கிழக்குநோக்கி வீற்றிருக்கும் கோலத்தில் எம்பெருமான் சேவை சாதிக்கிறார் தீர்த்தம் சேற்றுத்தாமரைத் தீர்த்தம். நம்மாழ்வார் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளார்.

"தெய்வ நாயகன்
நாரணன் திரிவிக்
கிரமன் அடியி ணைமிசை
கொய்கொள் பூம்பொழில்
சூழ்குரு கூர்ச்சட கோபன்
செய்த ஆயிரத் துள்ளிவை
தண்சிரீ வரமங்கை
மேய பத்துடன்
வைகல் பாட வல்லார்
வானோர்க் காரா வமுதே

— நம்மாழ்வார்

# 145. பவானி

பெரியார் மாவட்டத்தில் பவானி ஆறும் காவிரியாறும் கூடுமிடத்தில் இத்தலம் இருக்கின்றது. ஈரோடு இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 11 கி. மீ. தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது.

## தலத்தின் வரலாறு :

பவானி ஆறு இப்பகுதியில் பாய்ந்து வளமூட்டுவதால் ஆற்றின் பெயரையே இப்பகுதியில் அமைந்த ஊரும் பெற்றிருக்கின்றது.

இப்பகுதியில் காவிரி' பவானி, அமுதநதி ஆகிய மூன்றும் கூடுதலால் பவானிமுக்கூடல் என்று பெயர் பெற்று நாளடைவில் பவானி என வழங்குகிறது என்றும் கூறுவர்.

இத்தலத்தில் வழிபடுவோருக்கு எவ்வகைத்தீங்கும் நண்ணாது. எனவே இத்தலம் நண்ணாவூர் என்று பெயர் பெற்று நாளடைவில் 'நணா' எனக்குறுகி வழங்கியது, பாடல்பெற்ற தலமாதலால் திருநணா ஆயிற்று.

## தலத்தின் சிறப்புகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சங்கமுகநாதர் இறைவி வேதமங்கை. திருச்சுற்றில் பழைய இலந்தை மரங்கள் இரண்டு இருக்கின்றன. திருகோவிலுக்குள் ஆதிகேசவ பெருமாள் சந்நிதி இருக்கின்றது குபேரன், விசுவாமித்திரன், பராசரன் முதலானோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் பவானி! திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

மையார் மணிமிடறன் மங்கையோர்
பங்குடையான் மனைகடோறும்
கையார் பலியேற்ற கள்வ
னிடம்போலுங் கழல்கணேடிப்
பொய்யா மறையானும்
அளந்தானும் போற்றமன்னிச்
செய்யா ரெரியா முருவ

முறவணங்குந் திருநணாவே
என்னும் பாடல் நாளும் ஓதி மகிழத் தக்கது!

# 146. பழனி

அண்ணா மாவட்டத்தில் மதுரையிலிருந்து சுமார் 90 கி. மீ. தொலைவில் இத்தலம் அமைந்துள்ளது, திண்டுக்கல் திருச்சிராப்பள்ளி, கோயமுத்தூர் ஈரோடு ஆகிய நகர்களிலிருந்துப் பழனிக்கு ச்செல்ல பாதை வசதிகள் இருக்கின்றன பழனிமலை சுமார் 450 அடி உயரமுடையது. மேற்குத் தொடர்ச்சி மலைகளின் பிரிவுகளான வராகமலை கொடைக்கானல் முதலிய மலைகள் சூழ்ந்துள்ள செழிப்பு மிகுந்த பள்ளத்தாக்கில் இயற்கையழகுடன் இத்தலம் விளங்குகின்றது. பழனிமலைக்கு எதிரில் சிறிதுதொலைவில் இடும்பன்மலை இருக்கின்றது பழனிமலைக்குச் சிவகிரி என்னும் பெயரும் இடும்பன்மலைக்குச் சக்திகிரி என்னும் பெயரும் உண்டு.

## தலத்தின் வரலாறு :

அறுபடை வீடுகளில் மூன்றாவது படைவீடு ஆவினன் குடி, இது பழனிமலையின் அடிவாரத்தில் இருக்கின்றது இத்தலத்தைச் சுற்றியே நகர்ப்பகுதியை ஆவினன் குடி என்றும் மலைப்பகுதியைப் பழனிமலை என்றும் வழங்கினர் ஆனால் இக்காலத்தில் இரண்டையும் சேர்த்தே பழனி என வழங்கி வருகின்றனர்.

பழனி என்பது பழம் நீ என்பதன் திரிபு எனப் பழனித் தலபுராணம் கூறுகின்றது. நாரதர் கொடுத்த பழத்தை

அம்மையப்பர் முருகனுக்கு வழங்காமல் விநாயகருக்கு வழங்கிவிட்டனர். அதனால் சினங்கொண்டமுருகன் இம் மலைக்கு வந்துவிட்டார். அம்மையப்பர் இம்மலையில் எழுந்தருளி பழம் நீ! அதாவது பழம் நீயாக இருக்கும் பொழுது உனக்கு எதற்கு வேறு பழம்?! என்று ஆறுதல் கூறியதாகவும் அவர்கள் அருளிய பழம் நீ எனும் தொடரே இத்தலத்திற்கும் பெயராக அமைந்து விட்டது என்றும் அறிய முடிகின்றது.

பண்டைக்காலத்தில் ஆவியர் குலத்தில் தோன்றிய குறுநில மன்னர்கள் இப்பகுதியை ஆண்டனர். எனவே இப்பகுதி அக்காலத்தில் வைகாவிபுரி என வழங்கப் பெற்றது, அது நாளடைவில் வையாபுரி ஆயிற்று. பழனிக்கு வையாபுரி என்னும் பெயரும் உண்டு.

பழனம் என்பதை ஒட்டியே பழனி என்னும் பெயர் பெற்றிருக்கலாம். வயல்கள், காடுகள், சோலைகள் ஆறுகள் போன்ற இயற்கையமைப்புக்களை ஒட்டிப் பெயரிடும் வழக்கம் தமிழ்நாட்டில் இருந்து வருகின்றது. காடுகளும் வயல்களும் சூழ்ந்த பகுதியில் இந்நகர் அமைந்திருப்பதால் பழனம் என்னும் சொல்லை ஒட்டியே பழனி என்று பெயர் பெற்றிருக்கலாம் என்றும் கூறுவர்.

பண்டைக்காலத்தில் இப்பகுதியை ஆவியர் என்னும் குடியினர் ஆண்டபோது அவர்களின் தலைநகரம் பொதினி. பொதினி என்னும் பெயரே நாளடைவில் பழனி ஆயிற்று என்று கூறுவர். கல்வெட்டில் இவ்வூர்ப் பெயர் பழனி என்றே குறிக்கப் பெற்றுள்ளது.

## தலத்தின் சிறப்புகள் :

பழனிமலையைச் சுற்றி சுமார் 2 கி. மீ. தூரத்திற்குச் சோலைகள் நிறைந்த அழகிய மலைப்பிரகாரம் விளங்குகின்றது. அடிவாரத்தில் மலைப்பாதையின் தொட

கத்தில் பாதவிநாயகர் கோவில் இருக்கின்றது. விநாயகர் கோவிலுக்கு எதிரில் மீனாட்சி சுந்தரேசுவரர்கோவில் இருக்கின்றது. பழனிமலை மிகச்சிறந்த முருகன் தலமாகப் போற்றப் பெற்று வருகின்றது. முருகப் பெருமான் கருவறையில் பாலமூர்த்தியாக - கோவணாண்டியாக அருள் கலந்த திருநோக்குடன் ஒரு கரத்தில் தண்டு ஏந்தி மற்றொரு கரத்தை இடையில் அமர்த்தி மேற்குநோக்கி நின்ற கோலத்தில் அருள் பாலிக்கின்றார்.

கர்ப்பக்கிருகத்தின் மலுள்ள விமானம் பொன்னால் வேயப்பெற்ற பெருமையுடையது. ஒவ்வொரு திங்களிலும் கிருத்திகை நாளன்று முருகப் பெருமான் தங்கரதத்தில் மலைமீது பவனிவந்து அன்பர்கட்கு அருட்காட்சி அளிக்கின்றார்.

ஆவினன்குடி கோவிலில் முருகப்பெருமான் மயில் மீதமர்ந்து குழந்தை வேலாயுதசுவாமி என்னும் திருநாமத்துடன் காட்சி கொடுக்கின்றார். இக்கோவிலின் வடகிழக்கில் சிறிது தொலைவில் சரவணப்பொய்கை உள்ளது. பழனிக்கு வருவோர் இங்கு நீராடிய பிறகே கோவிலுக்குச் செல்வது வழக்கம். இக்கோவிலில் பங்குனி உத்திரத் திருவிழா பத்துநாட்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்டு மாலுற
ஆவினன் குடிவரும் அமலர் போற்றுவாம்

— கந்த புராணம்

குறித்தமணிப் பணித்துகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச் சுருளைப் பிளவோடே
குதட்டியதுப் புதட்டைமடித்
தயிற்பயிலிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வைக் கெடுத்துநகக் குறியாலே

பொறித்ததனத் தனைத்துமனச்
செருக்கினர்கைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனிற் பிணிப்படுவித் திடுமாதர்
புலத்தலையிற் செலுத்துமனப்
பிரமத்தையறப் பிரசித்தமுறப்
பரிந்தருளித் திருக்கழலைத் தருவாயே
பறித்ததலைக் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்கழுகக் கழுக்கள்புகத் திருநீறு
பரப்பியவத் திருப்பதிபுக்
கனற்புனலிற் கனத்த சொலைப்
பதித்தெழுதிப் புகட்டதிறற் கவிராசா
செறித்தசடை.ச் சசித்தரியத்
தகப்பன்மதித் துகப்பனெனச்
சிறக்கவெழுத் தருட்கருணைப் பெருவாழ்வே !
திசழ்ப்படுசெய்ப் பதிக்குளொளைத்
தடுத்தடிமைப் படுத்த அருள்
திருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே!

— திருப்புகழ்

# 147. பார்த்தன் பள்ளி

பாடல்பெற்ற வைணவத் திருத்தலம் பார்த்தன் பள்ளி. இத்திருப்பதி சோழநாட்டிலுள்ளது. தஞ்சாவூர் மாவட்டத்தில் சீர்காழி இரயில் நிலையத்திலிருந்து 10 கி. மீ. தொலைவில் இருக்கின்றது. பார்த்தனுக்காக (அருச்சுனனுக்காக) எம்பெருமான் சேவை சாதிக்கும் திருப்பதி. ஆதலால் பார்த்தன் பள்ளி என வழங்குகின்றது.

## பதியின் மகிமைகள் :

இத்திருப்பதியில் கோவில்கொண்டுள்ள எம்பெருமான் தாமரையாள் கேள்வன் எம்பெருமான் மேற்கு நோக்கி நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். தாயார் தாமரைநாயகி, வருணன், ஏகாதசஉருத்திரர் இத்திருப்பதியில் வழிபட்டுப் பேறு பெற்றனர். திருமங்கையாழ்வார் இத்திருப்பதியை மங்களாசாசனம் செய்துள்ளார்.

கவளயானைக் கொம்பொசித்த
    கண்ணன் என்றும் காமருசீர்க்
குவளைமேக மன்னமேனி
    கொண்டகோன் என் னானை யென்றும்
துவளமாட நீடு நாங்கைத்
    தாமரையாள் கேள்வன் என்றும்
பவள வாயாள் என் மடந்தை
    பார்த்தன் பள்ளி பாடுவாளே

— திருமங்கையாழ்வார்

# 148. பிரான்மலை

இத்திருத்தலம் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் காரைக்குடி இரயில் நிலையத்திலிருந்து 32 கி. மீ. தொலைவிலும் திருப்பத்தூரிலிருந்து வடமேற்கில் 19 கி. மீ. தொலைவிலும் இருக்கின்றது. பாண்டி நாட்டிலுள்ள பாடல் பெற்ற திருத்தலங்களில் இப்பதி ஐந்தாவதாகும்.

## தல வரலாறு :

இப்பகுதியில் குன்றம் ஒன்று விளங்குகின்றது. இக் குன்றத்தில் சிவபிரான் காவில் கொண்டிருக்கின்றார். எனவே குன்றம் பிரான்மலை என வழங்கப் பெறுகின்றது தேவரத்தில் இத்தலம் திருக்கொடுங் குன்றம்எனப்போற் றப் பெறுகின்றது. இப்பகுதி கடையெழு வள்ளல்களில் ஒரு வரான பாரி ஆண்ட பறம்பு நாடு என்றும் கூறுவர்.

பாரி சிவச்சீலனாக விளங்கினான் என்றும் அவனே சிவபிரானுக்குக் கோவில் எடுப்பித்தான் என்றும் அக் கோவில் பாரீசுரம் எனப்பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

## தல மகிமைகள் :

பிரான்மலை சிவபெருமானுக்குரிய தலமாவதோடு முருகப் பெருமானுக்குரிய தலமாகவும் விளங்குகின்றது. இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் கொடுங்குன்றீசு வரர் இறைவி குயில முதநாயகி இறைவன் திருமணக் கோலத்துடன் காட்சி அளிக்கின்றார் சிவன் சந்நிதிக்கு முன் பாக வயிரவர் சந்நிதி விளங்குகின்றது சிவபிரான்கோவிலில் ஒரே கல்லில் மேல்தளத்தில் உட்புறமாக 33 பிரிவுகளான தேவசபை ஒன்று இருக்கின்றது. இறைவனுக்குத்தேனும் தினை மாவும் படைக்கப் பெறுகின்றன மகோதர முனிவர் நாகராசன் முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர்.

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமான் சந்நிதி மேற்கே நோக்கி விளங்குகின்றது. யானை ஊர்தி யையுடையது. கல்லில் சங்கிலிக்கோவை, தூண்களின் இடையில் தொளைகள், இவற்றினூடே பந்துகள் உள் ளமை முதலியன சிற்பக் கலையின் சிறப்பினை எடுத்து ரைக்கின்றன. வீரபத்திரர் சந்நிதி சிறப்புடன் விளங்குகின்றது.

பிரான்மலை இயற்கைஎழில் மிகுந்ததாக விளங்கு கின்றது. இம்மலையில் சுனைகளும் குகைகளும் மிகுதியாக இருக்கின்றன. இத்தலத்தில் கார்த்திகைத் தீபதரிசனவிழா சிறப்பாக நடைபெறுகின்றது. இத்தலத்தைத் திருஞான சம்பந்தர் போற்றிப் பாடியுள்ளார்,

அறையும்மரி குரலோசையை
யஞ்சியடுமானை
குறையும் மன மாகிம்முழை
வைகுங் கொடுங்குன்றும்
மறையுமவை யுடையானென
நெடியா னெனவிவர்கள்
இறையும்மறி வொண்ணாதவன்
மேயவ் வெழினகரே

— திருஞானசம்பந்தர்

# 149. பேரூர்

கொங்குநாட்டுத் திருத்தலங்களில் ஒன்று பேரூர். கோயமுத்தூர் மாவட்டத்தில் கோயமுத்தூரிலிருந்து மேல்பால் 4 கி. மீ. தொலைவில் நொய்யலாற்றின் கரையில் இத்தலம் அமைந்துள்ளது. நொய்யல் ஆறு பண்டைக் காலத்தில் காஞ்சிநதி என வழங்கப்பெற்றது. தேவார வைப்புத் தலங்களில் ஒன்று பேரூர்.

## தல வரலாறு :

பண்டைக்காலத்தில் தமிழ்நாட்டில் இருந்த பெரிய ஊர்களில் ஒன்று, அதனால் பேரூர் எனப் பெயர் பெற்

றுள்ளது. திருத்தில்லையில் நடராசப்பெருமான் திருக்கூத்தியற்றுவது போன்று இத்தலத்திலும் விளங்குவதால் இத்தலம் மேலைச் சிதம்பரம் என்றும் போற்றப் பெறும்.

நடராசன் எழுந்தருளியுள்ள தலம் (சபை) அரவம்பலம் வெள்ளியம்பலம் என வழங்கப் பெறுகின்றது. இத்தலம் பிறவாநெறி என்றும் போற்றப் பெறுகின்றது. இப்பெயருக்கேற்ப இத்தலத்தில் முளைக்க வைப்பினும் முளையாத வித்துடைய புளியமரம் ஒன்று இருக்கின்றது' இறவாப் பனை என நெடுங்காலம் இருக்கும் பனைமரம் ஒன்றும் இருக்கின்றது. அரசவனம் என்னும் பெயரும் இத்தலத்திற்கு உண்டு.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பட்டீசுவரன். இறைவி பச்சைநாயகி. தீர்த்தம் பிரமதீர்த்தம் இத்தீர்த்தத்தில் சில நாட்கள் நீராடினாலே கொடிய பைத்தியமும் வேறு பிணிகளும் நீங்கிவிடும் என மக்கள் நம்புகின்றனர். இத்தீர்த்தத்தில் இட்டபித்தளை, செம்புப் பாத்திரங்கள் பிறநீரில் ஒளி மழுங்கல்போல் மழுங்குவதில்லை. இத்தலக்கோவில் ஆன் பட்டி எனப் பெயர் பெற்றுள்ளது.

காஞ்சியாறு பதிற்றுப்பத்தில் இடம் பெற்றுள்ளது. பரணர் கடல்பிறகோட்டிய செங்குட்டுவனை "நீ காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவூழி வாழ் வாயாக என வாழ்த்துவர்.

அருணகிரிநாதர் திருப்புக, திருவாவடுதுறையாதீனம் கச்சியப்ப முனிவர் செய்த தலபுராணம், புலவர் பலரால் பாடப்பெற்ற பிரபந்தங்கள் முதலியன இத்தலம் பற்றி இலக்கியங்கள் ஆகும்.

ஆரூரன் தம்பிரான் ஆரூரன்
மீகொங்கில் அணிகாஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்
சிற்றம்பலத்தே பெற்றா மன்றே

எனச் சுந்தரமூர்த்தி நாயனார் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

"மேலைச் சிதம்பரமாம் மிக்க புகழ்ப் பேரூர்" எனச் சாந்தலிங்கப் புராணம் இத்தலத்தைப் பாராட்டுகின்றது.

உருக்கார் வாளிகண்கள்
பொருப்பார் வார்தனங்கள்
உரைத்தேன் வால சந்த்ர நுதனூலாம்
உருச்சேர் நீண்மருங்குல்
பணைத்தோ ளோதிகொண்டல்
உவப்பா மேல்விழுந்து திரிவோர்கள்
அருக்கா மாதர்தங்கள்
வரைக்கே யோடியின்ப
வலைக்கே பூணுநெஞ்சன் அதிபாவி
அசட்டால் மூடுகின்ற
மயக்கால் மாயுமிந்த
அவத்தா வீனமின்றி அருள்வாயே
எருக்கார் தாளிதும்பை
மருச்சேர் போதுகங்கை
இனைச்சூ டாதிநம்பர் புதல்வோனே!
இருக்கா லேநினைந்து
துதிப்பார் நாவினெஞ்சில்
இருப்பார் யானைதங்கு மணிமார்பா
செருக்கா லேமிகுந்த
கடற்சூர் மாளவென்ற
திறற்சேர் வேல்கைகோண்ட முருகோனே
தினைக்கோர் காவல்கொண்ட

குறத்தேன் மாதுபங்க
திருப்போ ரூரமர்ந்த பெருமானே!

— திருப்புகழ்

# 150. மகாபலிபுரம்

தொண்டைநாட்டிலுள்ள பாடல்பெற்ற வைணவத் தலம் மகாபலிபுரம். இது சிவத்தலமாகவும் விளங்குகின்றது செங்கல்பட்டு மாவட்டத்தில் சென்னை மாநகருக்குத் தெற்கே சுமார் 63 கி. மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது. செங்கல்பட்டு இரயில் நிலையத்திற்குக் கிழக்கே 23 கி. மீ. தொலைவில் இத்தலம் உள்ளது.

## தலத்தின் வரலாறு :

பல்லவ மன்னர்களில் மூன்றாவது பேரரசனாகத் திகழ்ந்த மாமல்லன் என்னும் சிறப்புப்பெயர் பெற்ற முதலாம் நரசிம்மவர்மன் காலத்தில் இத்தலம் சிறந்த துறை முகப்பட்டினமாக விளங்கியது. அம்மன்னன் சிறப்புப் பெயரால் மாமல்லபுரம் எனப்பெயர் பெற்றது. பின்னர் புராணத்தில் வரும் மகாபலியின் பெயரோடு தொடர்பு கொண்டு மகாபலிபுரம் எனப்பெயர் பெற்றது. மகாமல்லன் என்னும் பல்லவ அரசன் இப்பகுதியை ஆண்டதால் அப் பெயர் வந்தது என்றும் கூறுவர்.

மாமல்லபுரத்தில் அக்காலத்தில் ஏழு கோவில்கள் இருந்தன. அதனால் ஏழு கோவில்கள் பட்டினம் என்னும் பெயரும் உண்டு. மகாபலிபுரம் இலக்கியங்களில் மல்லை,

கடல்மல்லை, முதுநீர்க்கடல்மல்லை,கடிபொழில் சூழ்கடல் மல்லை, எனக்குறிக்கப் பெற்றுள்ளது.

கல்வெட்டில் மாமல்லபுரம் என்றும் மல்லை என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. செப்பேட்டில் மல்லை எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

## தலத்தின் சிறப்புகள் :

இத்திருத்தலம் பண்டைய வரலாற்றுச் சிறப்பும் சிற்ப வளம் வாய்ந்த கோவில்கள் நிறைந்த பெருமையும் உடையது. இன்றைய நாளில் உள்நாட்டார் வெளி நாட்டார் ஆகியோரைக் கவரும் வண்ணம் சிறந்த சுற்று லாத் தலமாக விளங்குகின்றது.

கி. பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் 10-ஆம் நூற் றாண்டு வரை பல்லவ மன்னர்களின் தலையாயத்துறைமுக மாக விளங்கிய பெருமையுடையது. பஞ்சபாண்டவர் இரதங்கள்எனப் போற்றப்பெறும் குடைவரைக்கோவில்கள் பாறைச்சிற்பங்கள் கலையழகு மிக்கவை. கிருஷ்ண மண்ட பம், தர்மராசா மண்டபம், திருவிக்கிரம மண்டபம், வராக மண்டபம், மகிடாசுர மர்த்தினி மண்டபம், சிவ மண்டபம் இராமானுச மண்டபம் ஆதிசேசன்மீது திருமால் அறிதுயில் கொள்ளும் மண்டபம், அருச்சுனன் தவம், கல் இரதங்கள் பாறையில் செதுக்கப் பெற்றுள்ள வானரங்கள், பீமன் இரதம், மான் உருவங்கள் முதலியன வெல்லாம் ஒரு கி. மீ. சுற்றளவுக்குள் அமைந்திருக்கின்றன. இவை அனைத்தும் பல்லவர் காலச் சிற்பக்கலைக்குச் சான்றாக விளங்குகின்றன

இத்திருப்பதியில் எம்பெருமானுக்கு இரண்டு கோவில் கள் விளங்குகின்றன. ஊரிலுள்ள கோவில் தலசயனம். கடற்கரைக் கோவில் ஜலசயனம். எம்பெருமான் சில திருப்பதிகளில் நின்றிருப்பார், சிலவற்றில் வீற்றிருப்பார்;

சிலவற்றில் பள்ளி கொண்டிருப்பார்; எம்பெருமான் மற்றைத் திருப்பதிகளில் பாம்பணையில் பள்ளி கொண்டிருப்பார். இத்திருப்பதியில் தலத்தில் பள்ளி கொண்டுள்ளார் ஆகையால் இப்பதியினைக் கடல்மல்லைத் தலசயனம் எனப் போற்றுவர். எம்பெருமான் திருநாமம் தலசயனப் பெருமாள் தாயார் நிலமங்கை நாச்சியார். தீர்த்தம் கருட நதி.

புண்டரீக முனிவர் வழிபட்டுப்பேறுபெற்ற சிறப்புடையது இத்திருப்பதி. பூதத்தாழ்வார் திருஅவதாரத் திருத்தலம் இது! திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார் ஆகியோரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற பெருமை உடையது.

மகாபலிபுரம் சிவத்தலமாகவும் விளங்குகின்றது சிவாலயம் கடற்கரைக் கோவில் 7-ஆம் நூற்றாண்டில் இரண்டாம் நரசிம்மவர்மன் அல்லது இராஜசிம்மனால் கட்டப்பெற்றதாகக் கருதமுடிகின்றது. இக்கோவிலுக்குச் சத்திரிய பல்லவேச்சுரம் என்று பெயர். பெரிய இலிங்கம் பின்னப் பட்டிருக்கிறது. இதற்குச் சத்திரிய சிம்ம பல்லவேஸ்வரர் என்று திருநாமம் வழங்கப்பெறுகின்றது. தென்னிந்தியாவிலுள்ள சிவன் கோவில்கள் இக்கோவிலைப் பார்த்துக் கட்டப் பெற்றனவாகக் கருதுவர் அறிஞர். இலிங்கம் 71 பட்டைகள் கொண்டது. இலிங்கத்தின் பின்புறம் சோமாஸ்கந்த மூர்த்தி செதுக்கப் பெற்றிருக்கின்றது. கோவிலுக்குப் பின்புறம் சிறிய கோவில் ஒன்று உள்ளது.

தர்மராஜன் இரதத்தின் மூன்றாம் மாடியின் கிழக்கில், பரமசிவத்தின் உருவம் சோமாஸ்கந்த மூர்த்தியாக நடுவில் விளங்குகின்றது, மலைக்கு அருகில் பாழடைந்த ஒரு சிவன் கோவில் இருக்கின்றது. குகைக்கோவில்கள் மத்தியில் பரமசிவத்தின் உருவம் செதுக்கப் பெற்றிருக்கின்றது. இவ்வகையில் மகாபலிபுரம் சிவத்தலமாகவும் விளங்குகின்றது.

பாராய துண்டுமிழ்ந்த பவளத் தூணைப்
படுகடலில் அமுதத்தைப் பரிவாய்கீண்ட
சீரானை எம்மானைத் தொண்டர் தங்கள்
சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பினை
போரானைக் கொம்பொசித்த போரேற்றினைப்
புணர்மருதம் இறநடந்த பொற்குன்றினை
காரானை யிடர்கடிந்த கற்பகத்தைக்
கண்டதுநான் கடல்மல்லைத் தலசயனத்தே'

—திருமங்கை யாழ்வார்

தமர்உள்ளம் தஞ்சை
தலையரங்கம் தண்கால்
தமருள்ளும் தண்பொருப்பு
வேலை தமருள்ளும்
மாமல்லை கோவல்
மதிட்குடந்தை யென்பரே
ஏவல்ல எந்தைக்(கு)
இடம்

—பூதத்தாழ்வார்

# 151. மதுரை

பாண்டிநாட்டிலுள்ள பாடல்பெற்ற தலங்களுள் முதன்மையாகத் திகழ்வது மதுரைத் திருத்தலமாகும். இந்தியாவில் மதுரை என்னும் பெயரில் சிறப்பு வாய்ந்த இரண்டு திருத்தலங்கள் விளங்குகின்றன. ஒன்று கண்ணன் தலமாகிய வடமதுரை. மற்றொன்று சிவத்தலமாகிய தென்மதுரை.

## தலத்தின் வரலாறு :

வையை ஆற்றின் வளமான கரையில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. மக்கள் இறங்கி நீராடும் துறையாக 'மருதந்துறை' என்றொரு நீர்த்துறை இருந்ததெனப் பரிபாடல் கூறுகின்றது. "திருமருத முன்துறை" என்பதே அக் குறிப்புரையாகும். சிலப்பதிகாரம், "வருபுனல் வையை மருதோங்கு முன்துறை" எனக் குறிப்பிடுகின்றது. மருதமரங்களைத்தன்னகத்தே கொண்டிருந்ததாலும் மருத நிலவளத்தைப் பெற்றிருந்ததாலும் இத்தலம் மருதை என்று பெயர் பெற்று நாளடைவில் மதுரை என வழங்குகின்றது

சிவபெருமான் தம்முடியிலுள்ள பிறைநிலவின் மதுரமாகிய அமிழ்தத்தை இந்நகர்க் கோபுரங்களிலும் கோவில்களிலும் தெளித்தார் என்றும் அதன் காரணமாகவே மதுரை என்ற பெயர் வந்தது என்பது புராண வரலாறு!

இத்தலத்திற்கு நான்மாடக் கூடல் என்ற பெயரும் உண்டு. கூட்டுவிக்கும் தன்மையுடையது கூடல் தெற்கேயுள்ள பகுதிகளைக் கடல்கொண்டபோது ஆங்கு வாழ்ந்த மக்கள் பல்வேறு இடங்கட்குச் சென்று இறுதியில் மதுரையில் கூடினர். அதனால் கூடல் என்ற பெயர் ஏற்பட்டது போலும்! நான்கு மாடங்களைப் பெற்றிருந்தமையால் நான்மாடக் கூடல் ஆயிற்று!

திருக்கோவிலை 'மாடம்' என்று சொல்லுவர். திருவாலவாய் திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் ஆகிய நான்கு திருக்கோவில் தலங்கள் சேர்ந்தமைந்த காரணத்தாலோ, கன்னிகோயில், கரியமால் கோயில், ஆலவாய்க்கோயில் ஆகிய நான்கு திருக்கோயில்களுக்கு காவலாக அமைந்த காரணத்தாலோ இத்தலம் நான்மாடக் கூடல் ஆயிற்று என்றும் கருதுவர்.

ஒருக்கால் வருணன் மதுரையை அழிக்குமாறு ஏழு மேகங்களை ஏவினான். அதனால் எங்கும் இருள் சூழ்ந்தது பெருமழை பொழியத் தொடங்கியது பாண்டியன் செய்வ தறியாது திகைத்தான். மதுரையில் எழுந்தருளிய இறை வனிடம் சென்று முறையிட்டான். இறைவன் தன் திருச் சடையிலிருந்து நான்கு மேகங்களை ஏவிவினான். அவை மதுரையின் நான்கு எல்லைகளையும் வளைத்து நான்கு மாடங்களாக நின்று வருணன் ஏவிய மேகங்களை விலக் கின இதனால் இத்தலம் நன்மாடக் கூடல் என வழங்கு கின்றது என்பர் பரஞ்சோதியார்.

வங்கிய சேகரன் என்னும் பாண்டியன் மதுரையை ஆண்டநாளில் நகரை விரிவாக்க விரும்பினான். சிவபெரு மானிடம் நகரின் எல்லையை வரையறுத்து உணர்த்துமாறு வேண்டினான், அப்பெரு மான் தன் கரத்தமர்ந்த பாம்பை விடுத்து எல்லையை உணர்த்துமாறு பணித்தார். அது தன் னால் எல்லை காட்டப்பெறும் நகரம் தன் பெயரால் தழைத்தோங்க அருள்புரியுமாறு பெருமானை வேண்டியது. பின்னர் அப்பாம்பு வாலை நீட்டி வலமாகத் தன் உடலை வளைத்தது. அவ்வாலைத் தனது வாயில் சேர்த்து எல்லை யை வகுத்துக் காட்டியது. இன்றுமுதல் இத்தலம் 'ஆல வாய்' என்றுபெயர் பெற்றது என்பர் பரஞ்சோதியார். வேறுசிலர் மதுரையில் எழுந்தருளியுள்ள இறைவன் ஆல நிழலில் அமர்ந்தவன். அதனால் இத்தலம் ஆலவாய் எனப் பெயர் பெற்றது என்பர்.

அக்காலத்தில் இப்பகுதியில் கடம்பமரங்கள் நிறைந் திருந்தமையால் கடம்பவனம் என்றபெயரும் இத்தலத்திற்கு உண்டு. சிவபெருமான் மீனாட்சியம்மையாருடன் இருந்து அன்பர்கட்குக்காட்சி கொடுப்பதனால் பூலோகக்கயிலாயம் சிவராஜதானி எனப் போற்றப்பெறுகின்றது கன்னிபுரீசம் சிவன்முத்திபுரம், சிவலோகம் துவாத சாந்தபுரம் முதலிய பெயர்களும் இத்தலத்திற்கு உண்டு. வரகுண பாண்டிய

னுக்குச் சிவலோகத்தைக் காட்டியதால் சிவலோகம் என்ற பெயர் ஏற்பட்டது.

சிவபெருமான் சங்கப் புலவர்களோடு அமர்ந்து தமிழ் ஆராய்ந்ததால் தமிழ் மதுரை தமிழ்க்கூடல், விரிதமிழ்க்கூடல் முச்சங்கம் வளர்கூடல், முத்தமிழ் மதுரை என்றெல்லாம் இத்தலம் போற்றப் பெற்ற சிறப்புடையது.

## தலத்தின் மகிமைகள் :

பாரதநாட்டில் அறுபத்து நான்கு சக்திபீடங்கள் விளங்குகின்றன. காசியில் விசாலாட்சியும் காஞ்சீபுரத்தில் காமாட்சியும் மதுரையில் மீனாட்சியும் பாரதநாட்டின் மகிமை நிறைந்த சக்தி தலங்களாகும். நான்கு பக்கங்களிலும் நான்கு பெரிய கோபுரங்களுடன் திருக்கோவில் திகழ்கின்றது. மூலதனத்தில் மீனாட்சியம்மை கருணைபொழியும் காட்சி கண்கொள்ளாக்காட்சி! கோவிலின் வலப்புறத்தில் மீனாட்சியம்மை கருவறை விளங்குகின்றது. இடப்புறத்தில் சுந்தரேசுவரார், சொக்கலிங்கப் பெருமான் என்ற திருப்பெயருடன் எழுந்தருளியுள்ளார். கோவிலில் அம்மைக்கும் அப்பனுக்கும் தனித்தனி கோவில்கள் விளங்குகின்றன! கோவில் மரம் கடம்பு. தீர்த்தம் பொற்றாமரை, வைகை முதலியன.

வடக்குக் கோபுரத்துக்கு அருகில் ஐந்து இன்னிசைத் தூண்கள் உள்ளன. இவற்றைத்தட்டினால் கர்நாடக இசையின் ஏழுசுர ஒலிகளும் எழுகின்றன. எனவே இவற்றை இசைத்தூண்கள் என வழங்குவர்.

திருக்கோவில் மூன்று பிராகாரங்களையுடையது. ஒன்பது கோபுரங்கள் விளங்குகின்றன ஆயிரக்கால் மண்டபமும் உண்டு கோவிலுக்குக்கிழக்கில் வெளியில் வசந்த மண்டபம் விளங்குகின்றது இதைப் புது மண்டபம் என்றும் வழங்குவர்.

அர்த்தமண்டபம், மகாமண்டபம், மணிமண்டபம், ஆறுகால்பீடம், அஷ்டசித்தி மண்டபம், மீனாட்சி நாயக்கர் மண்டபம், கல்யாண மண்டபம், வீரவசும்புராண மண்டபம், சம்பந்நர் மண்டபம், ஆறுபத்து மூவர் மண்டபம் எனப் பல மண்டபங்கள் கோவிலுக்குள் விளங்குகின்றன.

கோவிலில் ஐந்து சபைகள் உள்ளன. அவை கனக சபை, இரசிதசபை, இரத்தின சபை, தாமிர சபை, இந்திரசபை ஆகும். இரசிதசபையாகிய வெள்ளியம்பலத்தில் உள்ள நடராசர் மற்றைய நடராஜ உருவங்களைப் போல் இடக்காலைத்தூக்கி நடனம் ஆடமால் வலக்காலைத்தூக்கி நடனம் ஆடும் பாவனையில் விளங்குகின்றார் பாண்டிய மன்னன் பொருட்டுக் கால்மாறி ஆடியதாகக் கூறுவர்.

மீனாட்சியம்மை பார்வதியின் அவதாரமாக (தடாதகைப் பிராட்டி) மதுரை மன்னனான மலையத்துவச பாண்டியனுக்கு (குலசேகரனின் மகன்) மகளாகப் பிறந்தாள் என்றும் முடிசூட்டப்பெற்ற மீனாட்சி தனது திக் விஜயத்தின்போது கயிலாயம் வரை வெற்றி பெற்றுச் சென்றாள் என்றும் கயிலாயத்தில் மீனாட்சி சிவபெருமானைக் கண்டு மணந்தாள் என்றும் பின் சிவபெருமான் மதுரையை ஆட்சிபுரிந்தார் என்றும் தங்கள் மகன் உக்கிர. பாண்டியனுக்கு (முருகனுக்கு) முடிசூட்டியபின் இன்றைய கோவிலிருந்து அருள்பாலிக்கின்றனர் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

சிவபெருமான் ஆறுபத்து நான்கு திருவிளையாடல்கள் புரிந்தருளிய பெருமையுடையது இத்தலம். மூர்த்தி நாயனார் திருவெண்ணீறும், சிவமணியும், திருச்சடையுமாகிய மூன்றும் முறையே மணப்பூச்சும், மாண்பார் அணியும் மணிமுடியும் ஆகக்கொண்டு ஆண்ட சிறப்புடையது இத்தலம்! திருஞானசம்பந்தர் சமணர்களை வென்று

சிவத்தின் சிறப்பினை நிலைநாட்டிய திருத்தலம்! செந்நெறியாம் சிவநெறியைக் காத்த மங்கையர்க்கரசியார் அமைச்சர் குலச்சிறையார் வேந்தன் நின்றசீர் நெடுமாறன் பேறுபெற்ற தெய்வத்தலம் மதுரை!

## திருவிழாக்கள் :

மதுரைத் தலத்திலத்தில் ஆண்டு முழுவதும் திருவிழாக்கள் நடைபெற்று வந்தாலும் சித்திரை விழா மிகச்சிறப்பானதாகும். இவ்விழா பத்துநாட்கள் நடைபெறுகின்றது. 10-ஆம் நாளன்று மீனாட்சிக்கும் சுந்தரேசுவரருக்கும் திருக்கல்யாணம் நடைபெறுகின்றது.

## மீனாட்சி திருக்கல்யாணம் :

வடக்கு-மேற்கு ஆடிவீதி சந்திப்பில் உள்ள திருமண மேடை முன் இலட்சக்கணக்கான பக்தர்கள் கூடியிருக்கக் காலை ஒன்பது மணி அளவில் சுந்தரேசுவரர் பிரியாவிடை சகிதம் திருக்கல்யாணமேடையில் எழுந்தருள்வார்! அடுத்ததாக மீனாட்சியம்மன் சுந்தரேசுவரருக்கு வலப்பக்கத்தில் எழுந்தருள்வார்! சிறிது நேரத்தில் திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய சுவாமி தெய்வயானையுடன் சுந்தரேசுவரருக்கு இடப்புறத்தில் எழுந்தருள்வார்! மீனாட்சி அம்மனுக்கு வலப்புறத்தில் பெருமாள் எழுந்தருள்வார்! பின்னர் கோவிலின் தலைமைப் பட்டர்தலைமையிலான அர்ச்சகர்கள் திருமணவைபவத்தை மங்கள மந்திரங்களுடன் தொடங்குவர்.

மணமக்களான மீனாட்சி-சுந்தரரேசுவரர் சார்பில் சிவாச்சாரியார்கள் மணமக்களாக இருந்து கையில் கங்கணம் கட்டி மாலை மாற்றிக் கொள்வர். பதினொரு சுமங்கலிப் பெண்கள் தங்கப் பாலிகை தொட்டுத் தர, அர்ச்சகர் ஒருவர் அம்மன் கழுத்தில் கட்டப்படும் தங்கத் தாலியைப் பக்தர்கள் மத்தியில் எடுத்துச் சென்று ஆசீர்வா

தம் பெற்றுத்திரும்பியதும் மறைகள் முழங்க, மங்கள வாத்தியங்கள் ஒலிக்க, பக்தர்கள் அனைவரும் மகிழ்ச்சியில் குலவையிட மீனாட்சிஅம்மன் கழுத்தில் திருமாங்கல்யம் அணிவிக்கப் பெறும்!

பின்னர் இறைவன் இறைவி சார்பில் மணமக்களாக இருக்கும் சிவாச்சாரியர்கள் தங்கத்தாலான அம்மிமிதித்து அருந்ததி பார்த்து, அக்னியை வலம் வந்து இறைவனை வணங்கிட திருக்கல்யாணம் நிறைவு பெறும்!

பரிபாடல், மதுரைக்காஞ்சி, தேவாரம், திருவிளையாடற்புராணம், மதுரைக்கலபகம், மதுரை மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ் முதலிய நூல்கள் மதுரைத் திருத்தலத்தின் மகிமைகளை எடுத்துரைக்கின்றன.

உலகம் ஒரு நிறையாத் தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலால் தூக்க - உலகனைத்தும்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூடல் நகர்

— பரிபாடல் : 6

கங்கையம் பேரியாறு கடல்பட்ர்ந் தாஅங்
களந்துகடை யறியா வளங்கொழு தாரமொடு
புத்தே ளுலகங் கவினிக் காண்வர
மிக்குப்புக எழுய்திய பெரும் பெயர் மதுரை

மதுரைக் காஞ்சி : 696-699

மந்திரம் ஆவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரம் ஆவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரம் ஆவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாய்உமை பங்கன்திரு வாலவாயான்
திரு நீறே

— திருஞானசம்பந்தர்

முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிரும்சடை முடிமேல் முகிழ்வெண் திங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வார்சிலையா வாசுகி மாணா கோத்துத்
துளைத்தானைச் சுடுகரத்தால் துவள நீறாத்
தூமுத்த வெண்முறுவல் உமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடல் திருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே

— திருநாவுக்கரசர்

# 152. மயிலம்

அருணகிரிநாதர் திருப்புகழ் பெற்ற முருகன் திருத்தலங்களில் ஒன்று மயிலம். இத்திருத்தலம் தென்னார்க்காடுமாவட்டத்தில் செங்கல்பட்டு-விழுப்புரம் இரயில் பாதையில் திண்டிவனத்திலிருந்து 10 கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

இப்பகுதியிலுள்ள குன்றின்மீது முருகன் கோவில் விளங்குகின்றது. முருகப்பெருமான் சூரபதுமனது ஆணவத்தை அழித்துக் கூறாக்கிய பிறகு அவன் முருகப்பெருமானிடம் தன்னை வாகனமாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என வேண்டினான். முருகப்பெருமான் அவனைச் சிறிதுகாலம் வராகநதிக்கு வடகரையிலுள்ள புண்ணிய நிலத்தில் மயில் வடிவம் கொண்ட மலையாக இருந்து தவமியற்றச் சொன்னார். அதன்படியே சூரபதுமன் மயில் உருக் கொண்டு

குன்றாக நின்று தவம் புரிந்ததால் இத்தலம் மயூராசலம் எனப் பெயர் பெற்று இன்று மயிலம் என வழங்குகின்றது.

## தல மகிமைகள் :

மயிலம் என்னும் இத்தலத்தின் பெயருக்கேற்பவே ஒரு பெரிய தங்கமயில் கோவிலில் இருக்கின்றது. இக்கோவிலில் பங்குனித் திங்களில் நடைபெறும் தேர்த்திருவிழா மிகவும் சிறப்புடையது. குமரப்பெருமானின் குன்றுதோறாடலில் ஒன்றாக மயிலம் விளங்குகின்றது.

கோவிலின் பெரிய கோபுரம் அழகுற அமைந்துள்ளது கருவறையில் முருகப்பெருமான் வள்ளி தெய்வயானை சமேதராகக் காட்சி அளிக்கின்றார் கல்யாண கோலத்திலே கிழக்கு நோக்கிய குமரப்பெருமானின் திருக்காட்சி கண் கொள்ளாக் காட்சி! தேர்த்திருவிழாவின்போது முருகப் பெருமான் தங்கமயில் வாகனத்தின்மீது பவனி வந்து அன்பர்கட்கு அருள் பாலிக்கின்றார். சிவஞான பாலசித்தன் விருப்பப்படி முருகப் பெருமான் இத்தலத்தில் கோவில் கொண்டதாகக் கூறுவர்.

உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனை யண்டி யேநமனார்தூ தானோர்
உயிர்கொண்டு போய்விடும் நாள் நீ மதாஅருள்
வாயே
மதிமிஞ்சு போதக வேலா ஆண
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர்
பெருமானே ''

— அருணகிரி நாதர்

முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிரும்சடை முடிமேல் முகிழ்வெண் திங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வார்சிலையா வாசுகி மாணா கோத்துத்
துளைத்தானைச் சுடுகரத்தால் துவள நீறாத்
தூமுத்த வெண்முறுவல் உமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடல் திருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே

— திருநாவுக்கரசர்

# 152. மயிலம்

அருணகிரிநாதர் திருப்புகழ் பெற்ற முருகன் திருத் தலங்களில் ஒன்று மயிலம். இத்திருத்தலம் தென்னார்க் காடுமாவட்டத்தில் செங்கல்பட்டு-விழுப்புரம் இரயில் பாதையில் திண்டிவனத்திலிருந்து 10 கி. மீ. தொலைவில் இருக்கின்றது.

## தல வரலாறு :

இப்பகுதியிலுள்ள குன்றின்மீது முருகன் கோவில் விளங்குகின்றது. முருகப்பெருமான் சூரபதுமனது ஆணவத்தை அழித்துக் கூறாக்கிய பிறகு அவன் முருகப்பெருமானிடம் தன்னை வாகனமாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என வேண்டினான். முருகப்பெருமான் அவனைச் சிறிதுகாலம் வராகநதிக்கு வடகரையிலுள்ள புண்ணிய நிலத்தில் மயில் வடிவம் கொண்ட மலையாக இருந்து தவமியற்றச் சொன்னார். அதன்படியே சூரபதுமன் மயில் உருக் கொண்டு

குன்றாக நின்று தவம் புரிந்ததால் இத்தலம் மயூராசலம் எனப் பெயர் பெற்று இன்று மயிலம் என வழங்குகின்றது.

## தல மகிமைகள் :

மயிலம் என்னும் இத்தலத்தின் பெயருக்கேற்பவே ஒரு பெரிய தங்கமயில் கோவிலில் இருக்கின்றது. இக்கோவிலின் பங்குனித் திங்களில் நடைபெறும் தேர்த்திருவிழா மிகவும் சிறப்புடையது. குமரப்பெருமானின் குன்றுதோறாடலில் ஒன்றாக மயிலம் விளங்குகின்றது.

கோவிலின் பெரிய கோபுரம் அழகுற அமைந்துள்ளது கருவறையில் முருகப்பெருமான் வள்ளி தெய்வயானை சமேதராகக் காட்சி அளிக்கின்றார் கல்யாண கோலத்திலே கிழக்கு நோக்கிய குமரப்பெருமானின் திருக்காட்சி கண் கொள்ளாக் காட்சி! தேர்த்திருவிழாவின்போது முருகப் பெருமான் தங்கமயில் வாகனத்தின்மீது பவனி வந்து அன்பர்கட்கு அருள் பாலிக்கின்றார். சிவஞான பாலசித்தன் விருப்பப்படி முருகப் பெருமான் இத்தலத்தில் கோவில் கொண்டதாகக் கூறுவர்.

உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனை யண்டி யேநமனார்து தானோர்
உயிர்கொண்டு போய்விடும் நாள் நீ மதாஅருள்
வாயே
மதிமிஞ்சு போதக வேலா ஆண
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர்
பெருமானே ''

— அருணகிரி நாதர்

# 153. மயிலாப்பூர்

சென்னை மாநகருக்குத் தெற்கே கடற்கரை ஓர மாக விளங்கும் திருத்தலம் மயிலாப்பூர். சென்னை எழும் பூர் இரயில் நிலையத்திலிருந்து 4 கி. தொலைவில் இத் தலம் உள்ளது. சென்னை மாநகரின் பல பகுதிகளிலிருந் தும் பேருந்தின் மூலம் இத்தலத்தை அடையலாம்.

## தல வரலாறு :

உமாதேவியார் மயில் உருவில் புன்னை மரநிழலின் கண் இறைவனை வழிபட்டுப்பேறு பெற்றதால் இத்தலம் மயிலாப்பூர் எனப் பெயர் பெற்றது. என்பது புராண வரலாறு.

இத்தலத்தைத் திருமழிசையாழ்வார் மாமயிலை என் றும் திருஞானசம்பந்தர் மயிலை என்றும் மயிலாப்பு என் றும் திருநாவுக்கரசர் மயிலாப்பில் என்றும் சேக்கிழார் திருமயிலாபுரி என்றும் குறிப்பிட்டுள்ளனர். இப்பெயர் களால் பண்டைக்காலத்தில் இங்குள்ள சோலைகளில் மயில்கள் நிறைந்திருந்து தோகை விரித்தாடிய செய்தி புலனாகின்றது. மயில்கள் ஆரவாரித்த இடம் மயிலாப்பூர் ஆயிற்று.

தலவிருட்சம் புன்னை. ஆதலின் இத்தலம் புன்னை வனம் என்றும் வழங்கப் பெறும். மாயூரம், திருமயிலாடி மயிலம், வேதபுரி, சுக்கிரபுரி என்னும் பெயர்களும் இத் தலத்திற்கு உண்டு.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் எருந்தருளியுள்ள இறைவன் கபாலீச்சுவரர். நான்முகனுடைய கபாலத்தைக் கையில் ஏந்தியிருக்கும் ஈசுவரர் கபாலீசுவரர். இறைவி கற்பகவல்லி கற்பகாம்பாள் என்றும் ப்போற்றுவர்.

கபாலிதீர்த்தம், வாலிதீர்த்தம், இராமன் தீர்த்தம் சுக்கிரதீர்த்தம், வேததீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்கள் இத்தலத்தில் இருக்கின்றன.

உமாதேவியார், முருகக்கடவுள், இராமர் வாலி, சுக்ரீவன், வாயிலார் நாயனார், ஏலேலசிங்கர் முதலானோர் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். பெரியாழ்வார் அவதரித்த மகிமையுடையது இத்தலம்.

கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் மயிலாப்பூரில் திருஞானசம்பந்தர் சிவநேசச் செல்வரின் திருமகள் பூம்பாவையை உயிர்பெற்றறெழச் செய்த அற்புதம் நிகழ்ந்தது. அருணகிரிநாதர் கபாலீச்சுரர்கோவிலில்சிங்கார வேலனுக்கு மூன்று திருப்புகழ் பாடியுள்ளார்.

## திருவிழாக்கள் :

பங்குனித் திங்கள் நடைபெறும் தீர்த்தவாரிவிழா வைகாசி விசாகத்தைப் பத்தாம் நாளாகக் கொண்ட திருஞானசம்பந்தர் திருவிழா, மயிலைநாதர் பெருவிழா தைத் திங்களில் நடைபெறும் தெப்பத்திருவிழா, தேர்த்திருவிழா ஆறுபத்து மூவர் விழா ஆகியவை இத்தலத்தில் நடைபெறும் சிறப்பான திருவிழாக்கள்!

## இலக்கியங்கள் :

திருமயிலைப் பிள்ளைத்தமிழ், திருமயிலைக்கோவை

திருமயிலை உவமைவெண்பா, திருமயிலை வெண்பா திருமயிலை உலா, திருமயிலைக் கலம்பகம், கபாலீசர் பஞ்சரத்தினம், கற்பகவல்லி மாலை, சிங்காரவேலர் வெண் பா, திருமயிலையமக வந்தாதி முதலிய இலக்கியங்கள் இத்தலத்தின் மகிமைகளை எடுத்துரைக்கின்றன திருஞான சம்பந்தர் இத்தலத்தைப் போற்றிப் பாடியுள்ளார்

மைப்பூசும் ஒண்கண்
மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான்
கபாலீச் சரம் அமர்ந்தான்
நெய்ப்பூசு மொண்புழுக்கல்
நேரிழையார் கொண்டாடும்
தைப்பூசங் காணதே
போதியோ பூம்பாவாய்

— திருஞானசம்பந்தர்

# 154. மயிலாடுதுறை

பாடல்பெற்ற சோழநாட்டுச் சிவத்தலங்களில் ஒன்று மயிலாடுதுறை. தஞ்சாவூர் மாவட்டத்தில் இத்தலம் அமைந்துள்ளது. வடமொழியில் மாயூரம் என வழங்கு கின்றது, மாயவரம் என்றும் வழங்குவர் இரயில்நிலையம் இத்தலத்திற்கு உண்டு.

## தலத்தின் வரலாறு :

உமையம்மையார் மயில் வடிவங்கொண்டு இத்தலத் தில் இறைவனை வழிபட்டுப் பேறுபெற்றதாலும் அம்மை

யின் வேண்டுகோளின்படி இறைவன் மயிலுருக்கொண்டு தாண்டவமாடியதாலும் இத்தலம் மயிலாடுதுறை எனப் பெயர்பெற்றது என்பது புராணவரலாறு.

இப்பகுதியில் காவேரி பாய்ந்து வளமூட்டுகின்றது. சோலைகள் நிறைந்துள்ளன! கோலைகளில் மயில்கள் தோகை விரித்தாடுகின்றன! அதனால் மயிலாடுதுறை எனப் பெயர் வழங்கி வருகின்றது.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மாயூர நாதர். இறைவி அஞ்சல்நாயகி. தீர்த்தம் இடபதீர்த்தம் இத்துறையில் ஐப்பசிமாதம் முழுவதும் தீர்த்தம் ஆடுதல் சிறப்புடையது என்பர். இடபதீர்த்தத்துறையில் காசிவிசுவநாதர் கோவில் இருக்கின்றது, இஃது இக்காலத்தில் வடக்கே திகழும் திருக்காசியைப் போன்று திருக்கோயிலமைப்பினைப் புதுக்கியமைத்து அழகுறக் கட்டப் பெற்றுள்ளது.

இத்தலத்தில் முருகன்சந்நிதி சிறப்புடையது. கந்தராறுநாள் (சட்டி) விழா சிறப்பாக நிகழ்கின்றது. இத்தலத்தில் நடைபெறும் காவிரியாற்று ஐப்பசித் திருமுழுக்கு மிகச் சிறப்புடையது.

"ஆயிரம் ஆனாலும் மாயூரம் ஆகுமா?" என்னும் பழமொழி இத்தலத்தின் சிறப்பினை எடுத்துரைக்கின்றது.

அஞ்சொண் புலனும் அவைசெற்ற
மஞ்சன் மயிலா டுதுறையை
நெஞ்சொன் றிநினைந் தெழுவார்மேல்
துஞ்சும் பிணியா யினதானே

— திருஞானசம்பந்தர்

கோலும் புல்லும் ஒருகையிற் கூர்ச்சமும்
தோலும் பூண்டு துயரமுற் றென்பயன்
நீல மாமயிலாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந் தோர்கட்கே

— திருநாவுக்கரசர்

# 155. மருதமலை

அருணகிரிநாதரின் திருப்புகழ் பெற்ற முருகன் திருத்தலங்களில் ஒன்று மருதமலை. முருகப்பெருமானுடைய குன்று தோறாடல்களில் ஒன்றாக இத்தலம் திகழ்கின்றது. கோயமுத்தூர் மாவட்டத்தில் கோயமுத்தூருக்கு வடமேற்கில் 9 கி. மீ, தொலைவில் இத்தலம் விளங்குகின்றது. அக்காலத்தில் இப்பகுதியில் மருதமரங்கள் நிறைந்திருந்தமையால் மருதமலை எனப் பெயர் வழங்கி வருகின்றது.

## தலத்தின் மகிமைகள் :

மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடரின் சரிவில் அமைந்த சமநிலப் பகுதியே மருதமலை. இம்மலைப்பகுதி நிலமட்டத்திலிருந்து சுமார் 500 அடி உயரம் உள்ளது. இம்மலைக்கோவிலை அடைவதற்குப் படிக்கட்டுப்பாதை கார்பாதை என இருவகைப் பாதைகள் உள்ளன.

கோவில் ஒரே பிரகாரத்துடன் அமைந்துள்ளது கோவிலின் முன்னால் மருத தீர்த்தம் அமைந்துள்ளது. மருதமரம்

தலமரம். கோவில் மகாமண்டபம். அர்த்த மண்டபம், கர்ப்பக்கிரகம் ஆகியவற்றுடன் அமைந்துள்ளது கர்ப்பக்கிர கத்தில் உள்ள கோபுரம் அழகான சுதைச் சிற்பங்களோடு விளங்குகின்றது. கர்ப்பக்கிரகத்தில் முருகப்பெருமான் தண்டாயுதபாணியாக நின்று அன்பர்கட்குத் காட்சி அளிக்கின்றார்,

இத்தரணி மீதிற் பிறவாதே
எத்தரொடுகூடிக் கலவாதே
முத்தமிழை யோதித் தளராதே
முத்தியடி யேனுக் கருள்வாயே
தத்துவமெய்ஞ் ஞானக் குருநாதா
சத்தசொரு பாயுத் தமுதோனே
நித்தியஇரு நாதற் பெருவாழ்வே
நிர்த்தஜெக ஜோதிப் பெருமாளே!

— திருப்புகழ்

# 156. வயலூர்

திருப்புகழ் பெற்ற முருகன் திருத்தலங்களில் ஒன்று வயலூர். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருச்சிராப் பள்ளிக்கு மேற்கில் 9 கி, மீ. தொலைவில் இத்தலம் இருக் கின்றது. திருச்சியிலிருந்து சோமரசம்பேட்டை வழியாக இத்தலத்திற்குச் செல்லலாம். வயல்களும் சோலைகளும் நிறைந்திருக்கின்ற காரணத்தால் இத்தலம் வயலூர் என வழங்கப் பெறுகின்றது.

## தலத்தின் மகிமைகள் :

கோவில் ஒரே பிரகாரத்தையுடையது. ஐந்து நிலைகளையுடைய இராஜகோபுரம் அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ளது. கோவிலில் முதலில் முருகப்பெருமானால் வழிபடப்பெற்ற சிவபெருமான் சந்நிதி உள்ளது அதனருகில் பராசக்தி சந்நிதி உள்ளது. நடராஜரின் உற்சவமூர்த்தி பிற தலங்களில் காணப்படுவது போன்று திருவாசிகை இல்லாமல் இரு திருவடிகளையும்-பாதங்களையும் பீடத்தில் ஊன்றிச் சுந்தரத் தாண்டவக் கோலத்தில் அமைந்துள்ளது. கருவறையில் வள்ளி தெய்வயானையோடு முருகப்பெருமான் காட்சி தருகின்றார்.

## அருணகிரிநாதருக்குக் காட்சி :

அருணகிரிநாதருக்கு முருகப்பெருமான் அருட்காட்சி அளித்த சிறப்புடையது இத்திருத்தலம். முருகப் பெருமான் அவருக்கு ஒரு திருமுகத்துடனும் நான்கு திருக்கரங்களுடனும் காட்சி தந்து தமது மயில் வாகனத்தையும் கடம்பமாலையையும் வடிவேலையும் சேவல் கொடியையும் திருவடியையும் பன்னிருதோள்களையுல் வயலூரரையும் வைத்துப் பாட அருள் புரிந்ததாகக் கூறுவர்.

# 157. விராலி மலை

அருணகிரிநாதர் திருப்புகழ் பெற்ற முருகன் திருத்தலங்களில் ஒன்று விராலிமலை. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருச்சிராப்பள்ளியிலிருந்து மதுரைக்குச் செல்லும்

சாலையில் 22 கி. மீ. தொலைவில் இத்தலம் இருக்கின்றது. இங்குள்ள மலையில் முனிவர்கள் குராமரங்கள் உருவில் மரங்களோடு விராவி இருந்து இம்மலையில் எழுந்தருளி யுள்ள முருகப் பெருமானை வழிபட்டதால் இத்தலம் விராலிமலை எனப் பெயர் பெற்றது என்பர்.

## தலத்தின் மகிமைகள் :

மலையுச்சியில் முருகப்பெருமான் திருக்கோவில் விளங்குகின்றது. கர்ப்பக்கிரகத்தில் முருகப் பெருமான் ஆறு திருமுகங்களோடும் பன்னிரு திருக்கரங்களோடும் காட்சி அளிக்கின்றார்! வள்ளியும் தெய்வானையும் முருகப்பெரு மானுக்கு இருமருங்கும் நின்ற கோலத்தில் காட்சி அளிக் கின்றனர்.

இத்தலத்து முருகப் பெருமானிடம் அருணகிரிநாதர் ஞான உபதேசம் பெற்றார். முருகப்பெருமான் அருணகிரி நாதரை வயலூருக்கு வருமாறு அழைத்தார் என்பது வரலாறு. இவ்வரலாற்றை, விளக்கும் வகையில் மலைக் கோவிலுக்குச் செல்லும் வழியில் மலைமீதுள்ள சந்தனக் கோட்டம் என்னும் மண்டபத்திலுள்ள தூண்களில் ஆறுமுகப் பெருமான் அருணகிரிநாதர் சிற்பங்கள் இருக் கின்றன. வசிட்டர், அருந்ததி ஆகியோர் வழிபட்டுப்பேறு பெற்ற சிறப்புடையது இத்தலம். இத்தலத்தில் நடைபெறும் விழாக்களில் சித்திரைத் திங்கள் ஒன்று முதல் பதினொரு நாட்கள் நடைபெறும் பூச்சொரிதல் விழா சிறப்புடையது.

"கருணை புடனே கண்ணெதிர் கண்டு
ஆறு முகமும் அழகிய முடியும்
நீறு புனைந்த நிகரிலா நெற்றியும்
புகழுரு புருவமும் புனைந்த சுட்டியும்
மகர குண்டல மாட்டிய செவியும்
கண்டிகை பூண்ட க்வின்பெரு கனமும்

விண்டிசை மதிக்க விளங்கு மார்பும்
பன்னிரு தோளும் பவள வாயும்
கன்னிய ரிருவர் கலந்த கோலமும்
அபய வஸ்தமும் அமிர்த. மயிலும்
சுபமருள் மங்கல சுந்தர வடிவும்''

என முருகப் பெருமானின் சுந்தர வடிவக்காட்சியைக் கந்தர் கவசம் கூறுகின்றது!

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நான்என்று மார்தட்டும் பெருமாளே

—திருப்புகழ்

# 158. விருத்தாசலம்

தென்னார்க்காடு மாவட்டத்தில் விழுப்புரம்-திருச்சிராப்பள்ளி இரயில்பாதையும் சேலம்—கடலூர் இரயில் பாதையும் கூடுமிடம் விருத்தாசலம். விருத்தாசலம் இரயில் நிலையத்திலிருந்து 2 கி. மீ. தொலைவில் தென்பால் இத் திருத்தலம் அமைந்துள்ளது.

## தலத்தின் வரலாறு :

இப்பகுதியில் மலை ஒன்று இருந்ததாகவும் அது

பூமியில் அழுந்திவிட்டதாகவும் கூறுவர். அம்மலையின் பெயர் பழமலை. எல்லாமலைகளும் தோன்றுவதற்கு முன்னரே மிகப்பழைமையான காலத்திலேயே இம்மலை தோன்றியதால் பழமலை ஆயிற்று!

வடமொழியில் பழைமை விருத்தம் என்றும் மலை அசலம் என்றும் வழங்கப் பெறுகின்னது. எனவே பழமலை என்பது வடமொழியில் விருத்தாசலம் ஆயிற்று. பழமலை முதுகுன்றம் என்றும் வழங்கப்பெறு கின்றது இத்தலம். பாடல்பெற்ற தலமாதலால் திருமுது குன்றம் ஆயிற்று.

## தலத்தின் மகிமைகள் :

விருத்தாசலம் கோவில் தமிழ்நாட்டிலுள்ள மிகப் பெரிய கோவில்களில் ஒன்று. இறைவன் பழமலைநாதர். இறைவி பெரிய நாயகியம்மை. தீர்த்தம் மணி முத்தாநதி. தலவிருட்சம் வன்னிமரம். காசிக்குச் செல்ல இயலாதவர் கள் முதுகுன்றத்தைத் தரிசித்து மணிமுத்தா நதியில் மூழ் கினால் தாம் விரும்பிய பலனைப் பெறுவர் என்பது நம்பிக்கை.

சுந்தரமூர்த்தி நாயனார் இறையருளால் தாம்பெற்ற பொற்கட்டிகளை மணிமுத்தா ஆற்றிலே இட்டுத் திருவா ரூர் சென்று திருவாரூர்குளத்திலே எடுத்துக்கொண்டதாக வரலாறு. கோவிலில் காமிகலிங்கம் முதலாக 28 ஆகமங்கள் இருக்கின்றன. இவை இக்கோவிலுக்குரிய தனிச்சிறப்பா கும். மூவர்பாடிய சிறப்புடையது இத்தலம்.

அருகரொடு புத்தரவர்
அறியா அரன்மலையான்
மருகன்வரும் இடபக்கொடி
உடையானிட மலரார்
கருகுகுழல் மடவார்கடி
குறிஞ்சி யதுபாடி

முருகன்னது பெருமைபகர்
முதுகுன்றடை வோமே

—திருஞானசம்பந்தர்

ஏத்தா திருந்தறியேன்
இமையோர்தனி நாயகனே
மூத்தா யுலகுக்கொல்லா
முதுகுன்றம் அமர்ந்தவனே
பூத்தா ருங்குழலாள்
பரவையிவள் தன்முகப்பே
கூத்தா தந்தருளாய்
கொடியேனிட் டளங்கெடவே

— சுந்தரர்

# 159. வேதாரண்யம்

சோழநாட்டிலுள்ள பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்று வேதாரண்யம். இத்தலம் கடற்கரை சார்ந்த திருத்தலம். தஞ்சாவூர் மாவட்டத்தின் தென்கோடியில் இத்தலம் அமைந்துள்ளது.

## தலத்தின் வரலாறு :

நான்கு வேதங்களும் இறைவனை வழிபட்டமையால் வேதாரண்யம் என்னும் பெயர் பெற்றுள்ளது. வேதவனம் என்றும் இத்தலம் வழங்கப்பெறும். தேவாரப்பாடல்கள் திருமறைக்காடு எனப் போற்றுகின்றன. வேத காலத்திற்கு முன்பு இத்தலம் சத்திகிரி எனப் பெயர் பெற்றிருந்தது சத்திகிரீஸ்வரர், சத்தியநாயகி, சத்தியநதி என முறையே

இறைவன், இறைவி, தீர்த்தம் ஆகிய மூன்றும் பெயர் பெற்றிருக்கின்றன. எனவே தலமும் சத்தகிரி எனப்பெயர் பெற்றது என்பர்.

## தலத்தின் மகிமைகள் :

இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் மறைகாட்டீசர். இறைவி யாழைப்பழித்த மொழியாள் தலவிருட்சம் வன்னி. தீர்த்தம் மணிகன்னிகை. தேவாமிர்தம் வேதநதி முதலியவை.

இறைவனுக்கும் இறைவிக்கும் தனித்தனியே கிழக்கு நோக்கிய சந்நிதிகள் இருக்கின்றன. விடங் தலங்கள் ஏழனுள் இஃது ஒன்று. அகத்தியர் இறைவனின் திருமணக் கோலம்கண்ட சிறப்புடையது இத்தலம்.

கோவிலில் சுந்தரர், பரவையார் திருப்படிமங்கள் இருக்கின்றன. இத்திருவூரில் திருவிளக்கணி நனிமிகு சிறப்புடையது. அதனால்,

" வேதாரண்யம் விளக்கழகு "

என்னும் பழமொழி வழங்கி வருகின்றது.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் அருமறைகளால் வழிபட்டுத் திருக்காப்பிட்ட திருக்கதவினைத் திருப்பதிகம் பாடித் திறக்கவும் மூடவும் செய்தனர் சுந்தரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் வழிபட்டுப் பேறு பெற்ற திருத்தலம் இது! தாயுமானவர், பரஞ்சோதியார் தோன்றிய திருவூர்! இத்தலத்துத் திருவிளக்கினை அறியாது தூண்டிய எலி அச்சிவ புண்ணியத்தால் மாவலி வேந்தனாய்த் தோன்றி வையமுழுதாண்ட பெருமையுடையது.

1930-இல் இவ்வூரில் உப்புச் சத்தியாகிரகம் நடைபெற்றது. கஸ்தூரிபா கன்யாகுருகுலம் என்னும் பள்ளி

சிறந்தமுறையில் செயல்பட்டு ஆதரவற்ற பெண்களுக்கு வாழ்வளிக்கின்றது. இவ்வூருக்கு அருகேயுள்ள கோடிக் கரைக் கடலில் 10 கி. மீ. தொலைவில் கெரசின் எடுக்கப் படுகிறது.

## இலக்கியங்கள் :

வேதாரண்ய தலபுராணச் சுருக்கம், அகோரதேவர் தலபுராணம், வேதாரண்ய மகாமியம், மரசைவெண்பா; மரசையந்தாதி முதலிய இலக்கியங்கள் இத்தலத்தைக் கருவாகக் கொண்டெழுந்தவை.

மூவர்பாடல் பெற்ற சிறப்புடையது இத்தலம். அருணகிரிநாதர் திருப்புகழ் பெற்ற பெருமையுடையது.

''வானோர் மறைமா தவத்தோர் வழிபட்ட
தேனார் பொழில்சூழ் மறைக்காட் டுமுறைசெல்வா
ஏனோர் தொழுதேத் தஇருந் ததீஎன்கொல்
கானார் கடுவே டுவனா னகருத்தே ''

— திருஞானசம்பந்தர்

பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே

— திருநாவுக்கரசர்

'' பாரூர்பல புடைசூழ்வள வயனாவலர் வேந்தன்
வாரூர்வன முலையாளுமை பங்கன்மறைக் காட்டை
ஆரூரன தமிழ்மாலைகள் பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர் புகழாகுவர் தாமே

— சுந்தரர்

வழிநடைச்சிந்து எனக் கூறப்பெறும் நாட்டுப்புறப் பாடல் ஒன்று இவ்வூருக்கும் இதற்கருகிலுள்ள ஊர்களுக்கு மிடையே உள்ள தொலைவைக் கூறுகின்றது.

''கோடிக்கும் குழகைக்கும் காதம்
குழகைக்கும் வேதைக்கும் காதம்
வேதைக்கும் கள்ளிக்கும் காதம்
கள்ளிக்கும் பூண்டிக்கும் காதம்
பூண்டிக்கும் நாகைக்கும் காதம்
நாகைக்கும் காரைக்கும் காதம்''

— நாட்டுப்புறப்பாடல்

  

## நன்றிக்குரிய நல்லவர்கள் !

'' தெய்வீகத் திருத்தலங்கள் '' என்ற இந்நூலினை எழுத யான் பேரார்வம் கொண்டு பல தலங்கட்கும் சென்று செய்தி சேகரித்த பொழுது எனக்குப் பய னுள்ள செய்திகளைத் தந்துதவிய கோவில் அதி காரிகளுக்கும் மெய்யன்பர்கட்கும் பக்தர்களுக்கும் என்னுடைய நெஞ்சார்ந்த நன்றியினை நவில்கின்றேன் !

  

## நன்றிக்குரிய நூல்கள்

1) அறம் காத்த அரண்கள், எம். இராதா கிருஷ்ண பிள்ளை.
2) கெடிலக்கரை நாகரிகம், பேராசிரியர் சுந்தர சண்முகனார்.
3) சிறப்பு மிக்க சிவாலயங்கள், செந்தமிழ் வித்தகர், தெய்வத்தமிழ்மணி, புலவர் சி. முத்துப் பிள்ளை.
4) திருவானைக்காக் கோவில், திவான் பகதூர் தி. மூ. நாராயணசாமிப் பிள்ளை.
5) திருவையாறு, சு. இராஜகோபால்.
6) தில்லைத் திருக்கோயில், பேராசிரியர் ச, மெய்யப்பன்
7) தொண்டைநாட்டுப் பாடல்பெற்ற சிவத்தலங்கள், வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார்
8) தொண்டைநாட்டுத் திருப்பதிகள், டாக்டர் ந. சுப்புரெட்டியார்
9) பாண்டிநாட்டுக் கோயில்கள், வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார்.
10) முருகன் உறைவிடங்கள், செந்தமிழ் வித்தகர் புலவர் சி. முத்துப்பிள்ளை.

